# பெண்ணின் பெருமை

அல்லது

# வாழ்க்கைத் துணை

திரு. வி. கலியாணசுந்தரன்

# பெண்ணின் பெருமை

அல்லது

# வாழ்க்கைத் துணை


"நவசக்தி" ஆசிரியர்

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

யாத்தது






மூன்றாம் பதிப்பு

1934




விலை ரூபா 2

# முன்னுரை



உலகம் பெண் ஆண் என்னும் இருபாலாலும் ஆக்கப்பட்டிருக்கிறது. இரண்டுஞ் சேர்ந்த ஒன்றே உலகம் என்பது. இவ்விரண்டும் ஒன்றி இயங்கினாலன்றி உலகம் நல்வழியில் நடைபெறாது.

பெண் தாயாகலான், பெண்ணலன் பெரிதும் ஓம்பப் பெறல்வேண்டும். பெண்ணலன் ஓம்பப்படா விடத்தில் வேறு எவ்வித நலனும் நிலவல் அரிது. ஒரு நாட்டு நலன் அந்நாட்டுப் பெண்மக்கள் நிலையைப் பொறுத்து நிற்கிறது.

இந்நாளில் பெண்ணுலகில் பலதிறக் குறைபாடுகள் தோன்றியிருக்கின்றன. அவைகளுள் இரண்டு சிறப்பாகக் குறிக்கத் தக்கன. ஒன்று சிறிதும் நாகரிகமின்றிச் சில விடங்களில் பெண் இருளில் மூழ்கிக்கிடப்பது; மற்றொன்று 'பழுத்த நாகரிகம்' என்னும் பேய்க்குச் சில விடங்களில் பெண் இரையாகி வாழ்வையே குலைத்துக் கொள்வது. இருசாராரும் ஒழுங்குபட்டுப் பெண்மை யுடையராய் உலகிற்குப் பயன்படல்வேண்டும்.

நமது நாட்டில் இடைக்காலத்தில் ஏற்பட்ட கட்டுப்பாடுகள் பெண்ணுலகின் பெருமைக்கே கேடு சூழ்ந்தன. அக்கட்டுப் பாடுகள் பெண்மக்களைக் கல்லாய் மண்ணாய் நடைப்பிணமாய்ச் செய்துவிட்டன. மேல்நாட்டில் இத்தகைக் கொடுங்கட்டுப் பாடுகள் இல்லையேனும், ஆண்டுப் 'பழுத்த நாகரிகம்' என்னும் அலகை, பெண்மையின் இறைமையைக் கவர்ந்து நிற்கிறது. அந்நாட்டுப் பெண்ணறிஞர் பலர் தாய்மைப்பேற்றை இழிவெனக்கருதி வாழ்தல் கண்கூடு. தாய்மை நிலவாவிடத்தில் இறைமை எங்ஙனம் நிலவும்? இப் 'பழுத்த நாகரிகம்' உலகை வளர்க்குமா? தேய்க்குமா?

இக்காலத்தில் பெண்மைக்கணுள்ள தாய்மையையும், தாய்மைக்கணுள்ள இறைமையையும் மக்கள் தங்கள் வாழ்வில் உணரத்தக்க துறைகள் காணப்பெறல் வேண்டும். அத்துறைகள் காண உலகில் முயற்சி துவங்கப்பட்டிருக்கிறது.

மேல்நாட் டறிஞர் சிலர் பெண்மையைப்பற்றியும் தாய்மையைப்பற்றியும் அரிய நூல் பல எழுதி வருகிறார். அந்நூல்களின் உட்கிடக்கை பெரிதும் நமது நாட்டுப் பழைய அகப்பொருள் நூல்களின் உட்கிடக்கைக்கு அரண்செய்தல் கண்டுயான் கழிபேருவகை எய்தல் உண்டு. நன்மக்கள் எவராயினும், அவர் யாண்டு உறைவோராயினும், அவர் அறிவில் ஒரே கருத்து அரும்பல் இயல்பு.

நமது நாட்டுப்பழமை, இப்பொழுது மேல்நாட்டில் புதுமையாக உருக்கொள்கிறது. பழமை புதுமையுருத்தாங்கல் இயல்பு. பழமைக்கும் புதுமைக்கும் பொருளில் வேற்றுமையில்லை; தோற்றத்திலேயே வேற்றுமை உண்டு. பொருண் முதன்மைக்கு எப்பொழுதும் அழிவில்லை என்னும் நியாயம் ஈண்டுக் கருதற்பாலது. 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே-பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' என்றார் **வாதவூரடிகளும்.**

நமது நாட்டுப் பழமை என்னும் உயிர், தற்கால மேல்நாட்டுப் புதுமை என்னும் உடல் தாங்கும் முறையில் தமிழ்மொழியில் நூல் பல யாத்தல் காலத்துக் கியைந்த தொண்டாகும். அத்தகை நூல்களின் இன்றியமையாமையைச் சொல்லவும் வேண்டுமோ?

பெண் பெருமை பேசும் பன்னூல் இதுபோழ்து வெளிவரல் மிக அவசியம். நந்தமிழ் நாட்டில் பெண்ணைப்பற்றிய சில நூல்கள் வெளிவந் துலவுகின்றன. அவைகளுள் பெரும்பான்மையன இடைக்காலத்தில் தோன்றிய அடக்குமுறை நூல்களின் எதிரொலிகளாக விளங்குகின்றன. சில நூல்கள் காமவெறி யூட்டக் கூடிய முறையில் எழுதப்பட்டிருக்கின்றன.

இவையல்லாத நூல்கள் எழுதிய அன்பர்கட்கு எனது வணக்கம் உரியதாக.

பழமையும் புதுமையும் விரவ, ஒல்லும் வகை முயன்று, 'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை' என்னும் இந்நூல் எழுதலானேன். இந்நூல், **பெண்மை-தாய்மை-இறைமை** என்னும் முப்பொருளை முதலாக உடையது. இம்மூன்றும் முறையே நூலின்-**உடல்**-**உள்ளம்**-**உயிராக** அமைந்திருக்கின்றன. இம்மூன்று முதலினின்றுங் கிளம்பிய கவடுகளும் கோடுகளும் நூலின் பிற உறுப்புக்களென்க.

பெண் பிறவியின் விழுமிய நோக்கம், அன்பால் ஒருவனை மணந்து, ஒழுங்குபட்ட இல்லறம் நடாத்துவதில் நிறைவேறுமென்பது நூலின் திரண்ட பொருள். இயற்கை வாழ்வினின்றும் வழுவிச் செயற்கைப்பாழில் விழுவதால் விளையுங் கேடுகள் இந்நூற்கண் விளக்கமாக ஓதப்பட்டிருக்கின்றன. அறம், அன்பு, அருள் முதலியவற்றிற்குப் பெண் உறையுள் என்பது இந்நூலில் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஒருத்தி ஒருவனுடனும், ஒருவன் ஒருத்தியுடனும் வாழும் உயரியஒழுக்க மணம் இந்நூலில் யாண்டுங் கமழ்ந்துகொண்டிருக்கும்.

**இந்நூலின் உள்ளக்கிடக்கையை உணர விரும்புவோர் நூலை முற்றும் படித்துப்பார்ப்பாராக.** ஆங்காங்கே சிலபொருள் கண்டு **நூலைப்பற்றி ஒருவித முடிந்த கருத்துக்கோடலாகாது.** ஓரிடத்தில் ஓர் ஐயப்பொருள் காட்சியளிக்கும். அவ்வைய நீக்கப் பொருள் மற்றோரிடத்தில் மிளிரும். ஆகவே, நூலை முற்றும் வாசிக்குமாறு அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இயற்கை வாழ்வு, செயற்கைத் தாழ்வு, உடலோம்பல், மலச்சிக்கல், கூடா வொழுக்கத்தால் விளையுங் கேடுகள் போன்ற பொருள்கள் நூலின் ஊடே ஊடே சில விடங்களில் பெய்யப்பட்டிருக்கின்றன. அவை 'கூறியது கூறும்' நோக்குடன் பெய்யப்பட்டனவல்ல என்பதையும், அவை '**அநுவாதம்**, என்னும் நியாயம் பற்றிப் பெய்யப்பட்டன என்பதையும் தெரிவித்

துக் கொள்கிறேன். ஒரு பொருள் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு குறிப்புடன் ஒவ்வொருவித விளக்கம் முதலியன பெற்றிருத்தல் நூற்கண் காணலாம். ஒரே பொருள் இடத்துக்கேற்ற விளக்கமும், தெளிவும், முறையும், இயைபும், சுருக்கமும், பெருக்கமும் பெறும் வழியில் பலவிடங்களில் பொறிக்கப்படல் ஒருவித நூன்மரபு.

எல்லார்க்கும் பயன்படு முறையில் நூல் எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது.

பெண், பெருமை பெறின், நாடும் பெருமை பெறும் என்னுங் கருத்துக்கொண்டு, சிறியேனால் எழுதப்பெற்ற இந் நூற்கண் குற்றங் குறைகள் உளவேல், அவைகளை அறிஞர்கள் பொறுத்தருள்வார்களாக.

சென்னை,
25-6-1927. } திருவாரூர் - வி. கலியாணசுந்தரன்.

---

# இரண்டாம் பதிப்பு

'பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை' என்னும் இந்நூல் வெளிவந்த நாள் தொட்டு, நாட்டில் ஒருவித புத்துணர்வு முகிழ்த்து வருதல் குறித்து மகிழ்வெய்துகிறேன். அவ்வுணர்வு நேரிய முறையில் இயங்க வேண்டுமென்பது எனது வேணவா. அது நல்வழியில் இயங்குமாறு எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

இவ்விரண்டாம் பதிப்பில் பெரு மாறுதல் ஒன்றுஞ் செய்தேனில்லை; மிகச்சிறு மாறுதல்களே செய்துள்ளேன்.

இப்பதிப்பில் பிழைகள் ஒல்லும்வகை களையப்பட்டன. பொருட்குறிப்புக்கள் ஆங்காங்கே பொறிக்கப்பட்டன. நூல்வடிவம் பெருக்கப்பட்டது.

'பெண்ணின் உரிமை'யிலும் 'பதியிலா'ரிலும், 'ஒருவன் ஒருத்தியுடன் வாழல்' என்பதை வலியுறுத்த இரண்டொரு பொருள்கள் புதிதாகச் சேர்க்கப்பட்டன.

சென்னை,<br>31-8-1929.

திரு. வி. க.

# மூன்றாம் பதிப்பு

இந்நூல் முதற் பதிப்பு, 1927-ம் ஆண்டு வெளிவந்தது. இப்பதிப்பு இப்பொழுது வெளியாயிற்று. தமிழ்நாட்டில் பெண்ணுலகின் நிலை, அன்று எப்படி இருந்தது? இன்று எப்படி இருக்கிறது? இடையில் நேர்ந்துள்ள மாறுதல்கள் மகிழ்ச்சிக்குரியன.

முதற்பதிப்பு வெளிவந்தபோது எதிர்ப்புப் பெரிதும் இருந்தது; இப்பொழுது எதிர்ப்புக் குறைந்து வருகிறது. இந்நூல் வெளிவந்த பின்னைத் தென்னாட்டில் பெண்ணுரிமைக்கெனத் தோன்றிய இயக்கங்கள் பல; சங்கங்கள் பல; முயற்சிகள் பல; மேலுங் கலப்பு மணங்களும், கைம்மையர் மணங்களும் ஆங்காங்கே நடைபெற்று வருகின்றன; சட்டங்கள் செய்யவும் நாடு முனைந்து நிற்கிறது; இளைஞர்களுக்குள் ஒருவித புத்துணர்வு எழும்பி யிருக்கிறது; மூலை முடுக்குகளிலும் பெண்ணின் பெருமை பேசப்படுகிறது; பெண்ணுலகம் விழித்துக் கொண்டது என்று சுருங்கச் சொல்லலாம். எழாண்டில் இத்துணை நலங்களைச் செய்த இந்நூல், இன்னும் பல நலன்களைச் செய்யும் என்றே நம்புகிறேன். எல்லாம் ஆண்டவன் செயல்.

இப்பதிப்பு நன்கு பரிசோதிக்கப்பட்டது. முன்னைய பதிப்புக்களில் புத்தி பூர்வமாகவோ அபுத்தி பூர்வமாகவோ நேர்ந்த பிழைகள் ஒல்லும்வகை களையப்பட்டன. வேறு பல செப்பங்களுஞ் செய்யப்பட்டன. இந்நூலைப் பரப்ப ஆங்காங்கே முயன்றுவரும் அன்பர்கட்கு எனது நன்றி உரியதாக.

சென்னை,
6-9-1934.

திரு. வி. க.

# உள்ளுறை







# பெண்ணின் பெருமை

அல்லது

# வாழ்க்கைத் துணை

## க. பெண் ஆண்

[பெண் ஆண் வடிவம் - தாவரங்கட்கு உயிரும் பெண் ஆண் வேற்றுமையும் உண்மை - உலகம் காரியமா காரணமா என்பது - உள்ளது போகாது இல்லது வாராது - கடவுளில் பெண்மையும் ஆண்மையும் - கடவுள் தாய் தந்தை - பெண் ஆண் நுட்பம் - பௌராணிகம் - பெண் ஆண் சக்தி இயல் - தண்மை பெண்; வெம்மை ஆண் - பெண் ஆண் நிறம் - சந்திரசூரிய கலைகள்-சக்தி சிவம்-முழு மனிதத்தன்மை.]

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே—மாணிக்கவாசகர்

இவ்வழகிய உலகைச் சிறிது உற்று நோக்குவோம். உலகம் எக்காட்சி வழங்குகிறது? பெண் ஆண் காட்சியை யன்றோ அது வழங்குகிறது? உலகில் தனிப்பெண் தோற்றமாதல், தனி ஆண் தோற்றமாதல் புலனாகிறதோ? இல்லை.

உலகில் புல் முதல் மக்கள் ஈறாக உள்ள எல்லாம் பெண் ஆண் வடிவாகப் பொலிதல் காண்கிறோம்.

புல் முதலிய தாவர இனங்கட்கும் உயிர் உண்டு என்றும், அவைகளுள்ளும் பெண் ஆண் வேற்றுமை உண்டு என்றும் நமது நாட்டு நூல்கள் முழங்குகின்றன. இக்கொள்கை சிலகாலம் சில இடங்களில் மறுக்கப்பட்டும் வந்தது. இனி அம்மறுப்பிற்கு இடனில்லை.

தாவரங்கட்கு உயிரும், பெண் ஆண் வேற்றுமையும்

தாவரங்கட்கு உயிர் உண்மையையும், பெண் ஆண் வேற்றுமை உண்மையையும் நம்முன்னோர்கள் ஏட்டில் மட்டும் பொறித்துச் சென்றார்கள். வேறு வழிகளான் அவ்வுண்மைகளை அவர்கள் நிறுவிக்காட்டினார்களா என்பது தெரியவில்லை. அவர்கள் எத்துறை நண்ணி, அவைகளைக் கண்டார்கள் என்பதும் செவ்வனே விளங்கவில்லை. அக்கால மக்கட்கு அகவுணர்வு மிக்கிருந்ததென்று சொல்லப்படுகிறது. அவ்வுணர்வான் அவர்கள் பல நுண்மைகளைக் கண்டிருக்கலாம். அக்கால நிலை, புறக் கருவி ஆராய்ச்சியை வேண்டி நிற்கவில்லை போலும்.

அக உணர்வு

பின்னை நாளில் - அதாவது அகவுணர்வு குன்றிய பொழுது - முன்னோர்கள் ஏடுகளில் எழுதி வைத்துள்ள பல உண்மைகளைக், காலநிலைக் கேற்றவண்ணம், புறக் கருவிகள் கொண்டு ஆராய்ந்து, புதிய முறைகளான் உறுதிப்படுத்த வேண்டுவது பிற்கால அறிஞர் கடன். அக்கடனாற்றப் புகாது, பழைய மக்களைக் குறைகூறிக் கொண்டிருப்பது அறமாகாது.

பிற்கால அறிஞர் கடன்

இப்பொழுது நமது நாட்டில் ஒரு பேரறிஞர் தோன்றித், தாவர உலகை நன்கு ஆய்ந்து, இக்கால

முறையில் பலதிற உண்மைகளை வெளியிட்டு வரு கிறார். அவரை இன்னாரென யான் குறிப்பிட வேண் டுவதில்லை. அவர், வங்காளமளித்த பேரறிஞர் ஜகதீச சந்திரபோஸ் என்பவர். அவரது திறன் ஆராய்ச்சிக் காரர் பலர்க்குந் தெரியும். அன்னார் தாவர ஆராய்ச்சி யில் தமது பெரும்பொழுதைப் போக்கி, எத்துணை எத்துணை நுட்பங்களை உலகிற்கு உதவி வருகிறார்! அவ்வறிஞர், தாவரங்கட்கு உயிர் உண்மையையும், அவைகளுள் பெண் ஆண் வேற்றுமை உண்மையையும் எவருங் கண்டு மகிழுமாறு கருவித் துணைகொண்டு உறுதிப்படுத்தியது உலகறிந்ததொன்று. அவரல்லரோ நமது பண்டை மூதறிஞர் வழி வழி வந்த பெரியார் என்று சொல்லத்தக்கவர்? இனித் தாவரங்கட்கு உயிர் உண்மையையும், பெண் ஆண் வேற்றுமை உண்மையை யும் மறுத்தற்கு உலகில் சிறிதும் இடமில்லை.

ஏனைய உயிர்களில் பெண் ஆண் உண்மை வெள் ளிடைமலை. ஆகவே, இவ்வழகிய உலகம், பெண் ஆண் வடிவாக அமைந்திருத்தல் எவரும் ஒப்பமுடிந்த உண்மை என்க.

பெண் ஆண் வடிவாயிலங்கும் உலகம் காரியமா காரணமா? எடுத்துக்கொண்ட பொருளுக்கு இது வேண்டற்பாலது. இது குறித்து நீண்ட ஆராய்ச்சி

**உலகம் காரியமா காரணமா?**

யில் தலைப்பட வேண்டுவதில்லை. உல கம் நாம ரூபங்களை யுடையது. நாம ரூபங்களையுடைய ஒன்று தோற்றக் கேடுகளுக்கு உட்படல் இயல்பு. தோற் றக் கேடுகளையுடைய ஒன்று காரியமாகுமா காரண

மாகுமா? அது காரியமாகாது எங்ஙனம் காரண மாகும்? உலகம் காரியமென்பது அறிஞர் ஆராய்ந்து கண்ட முடிபு.

நிமித்தம்

காரிய உலகம் எக்காட்சி வழங்குகிறது? அது பெண் ஆண் காட்சியை வழங்குகிறது. காரிய உலகம் பெண் ஆண் வடிவா யிருத்தலால், அதைக் காரியப்படுத்தும் நிமித்தம் எவ் வடிவினதாயிருத்தல் வேண்டும்?

உள்ளது போகாது இல்லது வாராது

'உள்ளது போகாது இல்லது வாராது' என்பது நியாயம். காரணத்தில் பெண்மை இல்லை எனில், காரியத்திலும் பெண்மை இராது. அவ்வாறே காரணத்தில் ஆண்மை இல்லை எனில், காரியத்திலும் ஆண்மை இராது. காரிய உலகு, பெண் ஆணால் ஆக்கப்பட்டிருப்பதால், அதைக் காரியப் படுத்தும் நிமித்தமும் பெண் ஆணாகவே இருத்தல் வேண்டும். இவ்வுண்மை கண்டே நம்முன்னோர், நிமித்தமாகிய கடவுளை 'அம்மை அப்பன்' எனக் கொண்டார் போலும்.

கடவுளில் பெண்மையும் ஆண்மையும்

'முழு முதற்பொருள் பெண் ஆண் வடிவாகப் பொலிகிறது' என்னும் உண்மை, முதல் முதல் நமது நாட்டவரால் காணப்பெற்றது. எல்லாவற்றையும் கடந்தொளிரும் மெய்ப்பொருளை இக்கால உலகில் பலர் ஆணாகவும், சிலர் பெண்ணாகவும், சிலர் பெண் ஆணாகவும் கொண்டு வழிபடுகிறார். இனி வரும் உலகம் எத்திறக் கருத்து வேற்றுமையுமின்றி

ஒரே உண்மையை ஏற்றுக்கொள்ளும் என்று யான் நம்புகிறேன்.

'மாற்ற மனங்கழிய' நிற்கும் மறை பொருளை அவரவர் விரும்புமாறு போற்ற அவரவர்க்கு உரிமை உண்டு. 'எல்லாமாய் அல்லவுமாய்' விளங்கும் ஒன்றை எவ்வண்ணம் போற்றினலென்ன? ஆயினும் எடுத்துக்கொண்ட பொருளுக் கேற்பக் கடவுளின் பெண் ஆண் நிலையைப்பற்றி ஓர்ந்து உணரவேண்டுவது நமது கடன்.

**கடவுள் தாய்தந்தை**

கடவுளைத் தாயாகக் கொண்டோர் மிகச்சிலர். அவரைத் தந்தையாகக் கொண்டோர் பலர். கடவுளைத் தந்தையாகக் (Fatherhood of God) கொண்டோர் அவரைத் தாயாகக் (Motherhood of God) கொள்ள மறுத்தற்குப் பொருளில்லை. தந்தையாக உள்ள கடவுள் ஏன் தாயாக இருக்கமாட்டார்? அன்னையினும் அப்பன் சிறந்தவன்கொல்? அப்பனிலும் அருள் மிக்கவள் அன்னையல்லளோ? கடவுளிடத்துள்ள தாய்மைக் குணத்தையா மறைப்பது? மறுப்பது? கடவுளைத் தந்தையாக்கொள்ள ஒருப்பட்ட மனம், அவரைத் தாயாக்கொள்ள ஒருப்படுவதில் என்ன இழுக்கு?

முழுமுதற் பொருளைப் பெண் ஆண் என்றும், தாய் தந்தை என்றும் கொள்வதால், அதற்குத் திண்ணிய உறுப்புக்களுண்டு என்று எவருங் கருதலாகாது.

**பெண் ஆண் நுட்பம்**

அப்பொருளின் பெண்மையும் ஆண்மையும் திண்ணிய உறுப்புக்களையுடைய பெண் ஆண் வடிவங்களைக் குறிப்பனவல்ல. அவைகள் நுண்ணிய சக்திகளைக்

குறிப்பனவாம். புராணங்கள் அவைகளைத் திண்ணிய வடிவங்களாகக் கொண்டு திருமணப் படலங்களும் வகுத்திருக்கின்றன. அறிவால் கூர்ந்து உணரத்தக்க

**பௌராணிகம்**

சில நுண்மைகள், மனதிற் பொருளாமாறு, அவைகளை உருவகப்படுத்திக் கதைகளாக அணிவகுத்துக் கூறுவது புராண மரபு. கதைகளை உள்ளவாறு நம்புவது பௌராணிக மதமெனப்படும். ஞானநூலாராய்ச்சி யுடையார் புராணக் கதைகளின் நுட்பமுணர்ந்து இன்புறுவர்; ஏனையோர் இடர்ப்படுவர்.

நுண்ணிய பெண் ஆண் சக்திகளின்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். உலகில் இரண்டு சக்திகள் நிலவுகின்றன. ஒன்று கூட்டுஞ் சக்தி; மற்றொன்று

**பெண் ஆண் சக்தி இயல்**

பிரிக்குஞ் சக்தி. முன்னையது தண்மையது; பின்னையது வெம்மையது. இவ்விரண்டும் சட சக்திகளாகும். இவைகளின் உண்மை, பூத பௌதிக சாத்திரிகளால் உறுதி செய்யப்பெற்று நீண்ட நாட்களாயின. சட சக்திகள் தாமே இயங்கமாட்டா வாகலின், அவைகளை இயக்கச் சடமல்லாத ஒன்று வேண்டற்பாலது. அதுவே சித்பொருள் என்பது. இயங்கும் சடத்தில் இரண்டு சக்திகளிருத்தலை யொப்ப, இயக்கும் சித்பொருளிலும் இரண்டு சக்திகளிருத்தல் வேண்டும். இல்லையேல் குறிப்பிட்ட சடசக்திகள் முறை முறையே இயங்க மாட்டா. ஆகவே, சித்பொருளிடத்தும் கூட்டல் பிரித்தற்குரிய தண்மை வெம்மை இருந்தே தீரல் வேண்டும். அவைகளின் இருப்பும், உண்மை கண்ட

பெரியோர்களால் உறுதி செய்யப்பட்டிருக்கிறது. சித்தெனும் செம்பொருள், சடப்பொருளுடன் நீக்கமறப் பிரிவின்றி, அத்துவிதமாகக் கலந்து நின்று, அச்சடத்தை இயக்குந் திறத்தை விரிந்த நூல்களிற் காண்க.

தண்மையைப் பெண் என்றும், வெம்மையை ஆண் என்றும் கூறுதல் உலகோர் இயல்பு. இவ்வியல்பு பற்றிச் சித்பொருளின் தண்மைக் கூற்றைப் பெண் என்றும், வெம்மைக் கூற்றை ஆண் என்றும் நம் முன்னோர் குறிப்பிட்டனர். இவை நிரலே சக்தி என்றும், சிவம் என்றும் சொல்லப்படும். வழிபடுவோர் உள்ளத்தில் அவை பொருளாமாறு முன்னதற்கு நீலநிறமும், பின்னதற்குச் செம்மை நிறமும் மெய்ஞ்ஞானிகளால் பொறிக்கப்பெற்றன. தண்மைக்கு நீலமும், வெம்மைக்குச் செம்மையும் பொறித்தது மிகப் பொருத்தம். நெருப்பு நாநீட்டிச் சுழன்று எரியும் போது அதனுடலில் செம்மையும், விளிம்பில் நீலமும் ஒளிர்தல் காண்கிறோம். இந்நீலமும் செம்மையும், ஒன்றினின்றும் ஒன்று பிரியாது நிற்றல் போலச், சக்தியும் சிவமும் பிரிவின்றி ஒன்றோடொன்று இயைந்து நிற்குமென்க.

தண்மை பெண்; வெம்மை ஆண்

பெண் நீலம் ஆண் செம்மை

அண்டம், பெண் ஆணாக அமைந்திருப்பதுபோலப், பிண்டமும் அவ்வண்ணமே அமைந்திருக்கிறது. உடற்கூற்று நூற்படி, உடலின் இடது பக்கம் தண்மை நாடியும், வலதுபக்கம் வெம்மை நாடியும் ஓடுகின்றன.

யோகிகள் இத்தண்மையையும், வெம்மையையும் முறையே சந்திரகலை சூரியகலை என்றுகூறுப.

**யோக முறை**

இவை, இடைகலை பிங்கலை எனவும் படும். வலதுபக்க வெம்மைச் சூரியகலையும், இடது பக்கத் தண்மைச் சந்திரகலையும் சமமாக இயங்கல் வேண்டும். ஒன்று மிகுந்து, மற்றொன்று குறையின் உடலுக்கு ஊறு விளையும். இதனை :—

*மாறு மதியும் ஆதித்தனும் மாறின்றித்*
*தாறு படாமல் தண்டோடே தலைப்படில்*
*ஊறு படாதுடல் வேண்டும் உபாயமும்*
*பாறுபடா இன்பம் பார்மிசைப் பொங்குமே.*

என வரூஉந் திருமூலர் திருவாக்கான் உணர்க.

இக்கலைகளைப் பெண்கலை ஆண்கலை என்று வழங்குவதுமுண்டு ; 'ஏராறு பெண்கலை எண்ணிரண் டாண்கலை' என்றார் அத்திருமூலரே. விரித்துச் சொல்லாது சுருங்கச் சொல்லின், மக்கள் இடது பக்கம் பெண் தன்மையும், வலது பக்கம் ஆண் தன்மையும் நிலவுகின்றன என்னலாம். பிராணுயாமப் பயிற்சியில் தேர்ச்சி பெற்றோர், கலைகளை ஒழுங்குபெற இயக்கும் ஆற்றல் வாய்ந்தவராகலின், அவர் விரும்புமாறு பெண் குழவியையோ ஆண்குழவியையோ பெறுதல்கூடும் என்று யோக நூல்கள் கூறுகின்றன. இப்பெண்கலை ஆண்கலைக்குப் பற்றுக்கோடு சக்தி சிவமேயாகும்.

அண்ட பிண்டங்கள் யாவும் பெண் ஆண் வடிவாயிருத்தல்போல, அவைகட்குக் காரணமாக உள்ள முழுமுதற் பொருளும் பெண் ஆண் வடிவாயிருத்தல் கருதத்தக்கது. இந்நுட்பம் அர்த்தநாரீசுர மூர்த்தத்தில்

நணி விளங்கும். அம்மூர்த்தத்தில் ஒரு பாதி பெண்ணுருவும், மற்றொருபாதி ஆணுருவும் பொலிதல் காண்கிறோம். அதன் பொருளென்னை? அவ்வடிவம், இவ்வண்டபிண்டம் அர்த்தநாரீசுர வடிவமா யிருத்தலை அறிவுறுத்துவதென்க.

சக்தி சிவம் என்பன ஒன்றைவிடுத்து ஒன்று பிரிந்து நிற்பனவல்ல. அவை ஒன்றோடொன்று இயைந்து நிற்பன. சக்திக்கும் சிவத்துக்கும் உள்ள இயைபு, மலரும் மணமும் போன்றது; மரமும் காழ்ப்பும் போன்றது; பண்ணும் இசையும் போன்றது.

சக்தி சிவ இயைபு

பரம்பொருளிடத்துள்ள இரண்டு தன்மை, சக்தி சிவம் என்னும் பெயரால் வழங்கப்பட்டு வருகின்றன. சக்தியாவது சிவத்தின் அருள். ஒருவனிடத்துள்ள அருட் குணத்தை எங்ஙனம் பிரித்தல் இயலும்? சக்தி என்றோ அன்றே சிவமுமுண்டு; சிவம் என்றோ அன்றே சக்தியுமுண்டு. இரண்டும் அநாதி. இரண்டும் உயர்வு தாழ்வின்றி ஒத்து உலகு உயிர்களை இயக்குகின்றன. சக்தி சிவத்தைப் பற்றி,

அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது உடைத்தாய் வேதா கமங்களின் குறியி றந்தங்
கறிவினில் **அருளான் மன்னி அம்மையோ டப்ப னுகிச்**
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.

என்றும்,

ஒருவனே இராவ ணுதி பாவகம் உற்றுற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாம் தன்மையுந் திரியா னுகும்

வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்.

என்றும்,

சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உணர்குண குணியுமாக
வைத்தனன் அவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்.

என்றும்,

எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்.

என்றும்,

அருளது சக்தி யாகும் அரன்தனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை அந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை.

என்றும் சிவஞான சித்தியார் கூறியிருத்தல் காண்க.

சக்தி சிவம் போலப் பெண்ணுலகும் ஆணுலகும் இலங்கல் வேண்டும். பெண் ஆண் சேர்ந்த ஒன்றே வாழ்வென்பது. பெண்ணும் ஆணும் சேர்ந்த ஒன்றே முழு மனிதத்தன்மை என்று மநு கூறுகிறார். தண்மையும் வெம்மையும் எங்ஙனம் உடல் நலத்துக்கு வேண்டற்பாலனவோ, அங்ஙனமே பெண்மையும் ஆண்மையும் வாழ்வு நலத்துக்கு வேண்டற்பாலன. ஒன்றற்கொன்று சிறுமையுறின், ஊறும் குலைவும் நிகழும். இவ்வுலக வாழ்விற்குப் பெண்மைஆண்மை என்னும் இரண்டும் இன்றியமையாதன. இரண்டனுள் உயர்வு தாழ்வுமில்லை. உயர்வு தாழ்வு கற்பிப்போர் இறை இயல்பையாதல், இயற்கை இயல்பையாதல் உணராதார் என்க.

முழு மனிதத் தன்மை

இவ்வுலகம் பெண் ஆண் வடிவாயிலங்குகிறது. முழுமுதற் பொருளும் பெண் ஆண் வடிவாய்ப் பொலிகிறது. ஆதலால், பெண்ணும் ஆணும் கூடி வாழும் வாழ்வே வாழ்வாகும். அவ்வாழ்வு ஓங்க; பெண் ஆண் வாழ்க.

*மண்ணினல்ல வண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணினல்ல கதிக்கி யாதுமோர் குறைவிலை*
*கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்*
*பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே.*

—திருஞான சம்பந்தர்



## உ. பெண்ணின் மூதன்மை

[பெண்ணும் பெண்மையும் - பெண்மை இன்ப நிலை - பெண், இன்பத்தின் பருமை - பெண், இன்பம்; அழகுக் கடவுள் - கவிவாணரும் பெண்ணும் - பெண் பிறவி நோக்கம் - தாய்மையும் தொண்டும் - வாழ்க்கைப் பெண் - பெண்ணின் தியாகம்-பெண்மை ஆண்மைக் குணம் - ஆணில் பெண்மை - அகமே புறம் - அன்பர்கள் அருளாளர்கள் வீரர்கள் பாவலர்கள் முதலியோரின் தன்மை - பெண்மையின் இறைமை - நமது நாடும் பெண்மையும் - கலைமகள், திருமகள், பரை - பெண் தோற்றம் - பெண்ணின் மூதன்மை மறந்த இடம் - நமது நாட்டுத் தொன்மை வழக்கு.]

பெண்கோடியாக நடந்த துலகே—திருமூலர்

பெண்ணுலகு ஆணுலகு என்னும் இரண்டனுள் உயர்வு தாழ்வு கருதலாகாதென்பது மேலே சொல்லப்பட்டது. இரண்டுலகினுள் உயர்வு தாழ்வு இல்லையேனும், பெண்ணுலகிற்கு முதன்மை வழங்க வேண்டுமென்பது அறிவும் அன்பும் வாய்ந்தோர் கருத்து. பெண்ணுலகிற்கு இயல்பா யமைந்துள்ள குணம், தொண்டு, கடமை முதலியவற்றை நோக்குழிப் பெண்ணுலகு முதன்மை பெற்று விளங்குவது நன்கு புலனாகும். ஆணுலகின் பேற்றிற்கும், வளத்துக்கும், நலத்துக்கும், பிற ஆக்கத்துக்கும் நிலைக்களனாயிருப்பது பெண்ணுலகென்பது எவரும் அறிந்ததொன்று.

அப்பெற்றி வாய்ந்த பெண்ணுலகிற்கு முதன்மை வழங்கினால் நேரும் இழுக்கென்னை?

பெண் எது?

முதலாவது பெண்ணின் இயல்புகள்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். பெண் எது? இதற்குப் பலர் பலவாறு கூறுப. பெண்ணுறுப்புடையது பெண் என்று சொல்வது சாதாரண உலக வழக்கு. பெண்ணுறுப்புடைய சிலரிடத்திலும், சிலவற்றிலும் பெண்மையில்லாதிருத்தல் கண்கூடு. ஆதலால், உறுப்புக்குறி ஒன்றே கொண்டு பெண் இஃது என்று கொள்ளல் முறையன்று. உறுப்போடு வேறு பல இயல்புகளையும் கொண்ட ஒன்றே பெண்ணென்பது. அவ்வியல்புகளின் திரட்சி பெண்மை எனப்படும். இப்பெண்மையுடையது பெண்ணென்க.

பெண்மை என்னுஞ் சொல், கடைகுறைந்து, பெண்ணென நின்று, பின்னைப் பெண்ணெனும் ஓர் இனத்தைக் குறிப்பதாயிற்று. பெண் ஆகு பெயர். இது, தமிழ் இலக்கண வழக்கு. ஈண்டுப் பெண்ணை எவள் என்னாது, எது என்றது முதற்பொருளை ஒட்டி என்க.

பெண்மை

பெண்மையாவது யாது? அடக்கம், பொறுமை, தியாகம், பரநலம், இரக்கம், அழகு, தொண்டு முதலியன அமைந்த ஒன்று பெண்மை எனப்படும். மண் நீர் காற்று ஒளி முதலியன சேர்ந்து மரமாதல்போல, அடக்கம் முதலிய குணங்கள் சேர்ந்து பெண்மையாகின்றன. சிறு சிறு நீர்த்துளி சேர்ந்து பரந்த நீர்நிலை என்னும் பெயர் பெறுதல் போலவும், சிறு சிறு பரல்கள் சேர்ந்து மலை என்னும் பெயர் பெறு

தல் போலவும், அடக்கம் முதலிய குணங்கள் ஒன்றி, அவை பெண்மை என்னும் பெயர் பெற்றன. பெண்மை என்பதைக் கூறிட்டுப் பார்ப்பின், அஃது அடக்கம் முதலிய நீர்மைகளாகப் பிரிந்து நிற்கும். அடக்கம் முதலிய இயல்புகளின் திரட்சி பெண்மை என்பது கருதற்பாற்று.

இன்ப துன்ப நிகழ்ச்சி

உலகில் இன்பம் துன்பம் என்னும் இரண்டும் உண்டு. இன்பம் எப்பொழுது நிகழ்கிறது? துன்பம் எப்பொழுது விளைகிறது? அடக்கம், பொறுமை, தியாகம், இரக்கம் முதலிய வாற்றான் இன்பமெழுதலும், அடங்காமை, பொறுமை, தன்னலம், அவா, வன்கண் முதலிய வாற்றான் துன்பமுறுதலுங் கண்கூடு. மாயை, அவித்தை முதலியவற்றைக் கடந்து விளங்குவது இன்பமென்றும், அம்மாயையாதியன பொறாமை வெகுளி அவா முதலிய பேய்க்குணங்களாகக் காரியப்பட்டு உயிர்களைப் பீடித்து, இன்ப ஊற்றைத் தகைந்து கொண்டிருக்கின்றன என்றும் ஞான நூல்கள் நவில்கின்றன. இப்பேய்க் குணங்களல்லாத அடக்கம் பொறுமை முதலிய தெய்வ குணங்களால் விளைவது இன்பமென்பது அன்றாட அனுபவத்தில் அறியக் கிடப்பது.

அடக்கம் முதலியவற்றின் திரட்சி பெண்மையாய்ப் பொலிவதையும், அடக்கம் முதலியவற்றான் இன்பம் விளைவதையும் கூர்ந்து நோக்கின், பெண்மை இன்பமாக விளங்காமற் போகாது.

பெண்மை இன்பநிலை

ஆகவே, பெண்மையை இன்பநிலையாகக் கோடல் எவ்வாற்றானும் பொருந்தும். மின்சாரம் யாண்டும் இயங்கினும், அது யாண்டும்

விளங்கித் தோன்றுது, அதனை விளங்கித் தோன்று மாறு தொழிற்படுத்து மிடத்தில் மட்டும் அஃது ஒளிர் தல்போல, இன்பம் யாண்டும் பரந்து நிற்பினும், அது பெண்மையில் விளங்கி, நிகழ்ச்சியில் உணர்த்துமென்க.

இனிப் பெண்மையாவது யாது? பெண்மையை இன்ப நிலை என்று சொல்லலாமன்றோ? அடக்கம், பொறுமை, தியாகம் முதலியன பெண்மையின் உறுப் புக்கள். அவ்வுறுப்புக்கள் சேர்ந்த இன்பம் பெண்மையின் உடல். அவ்வின்ப உடல் நுண்ணியதாகலின் (Abstract) அதற்கு என்புதோல் போர்த்த ஒரு பருவுடல் இறைவனால் அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்வடிவம் 'பெண்' 'பெண்' என்னும் பெயரால் உலகில் வழங்கப்பட்டு வருகிறது. இப்பொழுது பெண் எது? இன்பத்தின் பருமை பெண் என்க.

**பெண்இன்பத்தின் பருமை**

இன்பமோ நுண்ணியது; காணக்கூடாதது. காணக்கூடாத இன்பம் பெண்ணுகி நமக்குக் காட்சி அளிக்கிறது. பெண்மை என்னும் இன்பத்தெய்வத்தை ஏந்திநிற்கும் பெண்ணை, வெறும் பெண் ணெனக் கொள்ளாது, பெண் தெய்வமென்றும் போற்றலாம். இத்தகைப் பெண்மையுடைய பெண்ணை முதன்மையுடையாள் எனில், என்ன முழுகிப் போகும்?

**பெண் தெய்வம்**

பெண்மை இன்பமாயின், பெண்மை அழகு மாகும். இன்பமுள்ள இடத்தில் அழகுமுண்டு அழகுள்ள இடத்தில் இன்பமுமுண்டு. அழகு புலனுகுமிடத்தில் இன்ப நுகர்ச்சியுமிருத்தல் அநுபவம். ஆதலால், பெண்மை அழகுமாதல் உன்னத்தக்கது.

**இன்பமும் அழகும்**

அழகு நுட்பம் உணர்ந்த மக்களுள், பண்டைத் தமிழ்மக்கள் தலைசிறந்து விளங்கினவர்கள். அவர்கள் பெண்ணை அழகென்றே கொண்டார்கள். பெண் என்னுந் தமிழ்ச்சொற்கு அழகு என்பது பொருள்.

பெண்ணும் அழகும்

பெண்ணைக் குறிக்கும் மாதர் முதலிய சொற்கட்கும் அழகுப் பொருளிருத்தல் காண்க. பெண், மாதர் இவைகள் ஆகுபெயர்கள். பல இடங்களில் ஓரோ வழி விளங்கும் அழகெலாந் திரண்டு, பெண்ணாகி நிற்றலால், அழகுப் பொருள் அளிக்கும் பெண் என்னுஞ் சொல் பெண்ணுலகிற்குச் சூட்டப்பட்டது. நீலவானத்தில் திங்கள் போலவும், மலையில் பொழில் போலவும், பசுங் கொடியில் மலர் போலவும், மலரில் நிறம் போலவும், பறவைகளில் மயில் போலவும், விலங்குகளில் மான் போலவும் பெண் என்னும் அழகு இவ்வழகிய உலகை அழகு செய்கிறது. பெண் இல்லையேல் உலகில் அழகு எது?

அழகு எது? இது குறித்து 'முருகன் அல்லது அழகு' என்னும் நூலில் விரித்து எழுதியிருக்கிறேன். அழகுக் கடவுளைக் கண்டின்புற எவரும் வானத்தை நோக்க வேண்டுவதில்லை; மலைக்கேக வேண்டுவதில்லை; காடுகளில் புகவேண்டுவதில்லை; கடலை நாட வேண்டுவதில்லை; காவியங்களைப் புரட்ட வேண்டுவதில்லை. அழகுக் கடவுள் பெண்ணாகி யாண்டுங் காட்சி அளிக்கிறது. கண்ணுள்ளோர் காண்பாராக.

அழகுக்கடவுள்

பெண்ணழகிலுள்ள கடவுட்டன்மையை உணர்ந்து, அவ்வழகை எத்துணைக் கவிவாணர் எழுத்தால் எழுதி

எழுதி இன்பம் நுகர்ந்தார்! அன்னார் எழுதி எழுதி எழுத்துக்கு முடிவு கண்டாரன்றி, அவ்வழகுக்கு முடிவு கண்டாரில்லை.

கவிவாணர்

அழகுக் கடவுளுக்கு முடிவு எது? அழிவு எது? பெண்ணின்பாலுள்ள அழகுக் கடவுளைக் காணாது, என்பு தோல்மீது கருத்துக் கொண்டழியுங் காமுகர் நிலை குறித்து இரங்குகிறேன். எல்லாவற்றிலும் முதன்மை பெற்றுள்ள அழகாகிய பெண்ணிற்கு முதன்மை குறித்தல் தவறாமோ?

பெண்ணின் வாழ்க்கையை ஊன்றி உன்னுவோமாயின், பெண் பிறவியின் விழுமிய நோக்கம் இனிது புலனாகும். பெண் பிறவி, காம வேட்கைக்கும், அடுப்பூதல் முதலிய வேலைகட்கும் என்று கோடல் அறியாமை. இவ்வுலக ஆக்கமும் அழிவும் பெண்ணிடத் திருக்கின்றன. பெண், தன் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளைத் தீய வழியில் வளர்த்து உலகில்விடின், உலகில் அரக்கர் வாழ்வு பெருகித், தெய்வ அன்பு வாழ்வு சுருங்கி அழிந்துபடும். பெண்ணினல்லாள் தெய்வமாகலின், அவள் எப்பொழுதும் அழிவு நினையாள். அவள் உள்ளத்துள் எப்பொழுதும் ஆக்கமே நிலவும். தன் வயிற்றிற் பிறக்கும் பிள்ளை, பெருங் கல்வியாளனாய், வீரனாய், அன்பனாய், நல்லனாய் உலகில் வாழ்தல் வேண்டும் என்னும் எண்ணத்தையே தாய் கொள்வது வழக்கம். பிள்ளை கெட்டொழிய வேண்டுமென்று தாய் ஒருபோதும் நினையாள். தாய்வயிற்றிற் பிறந்து, அவளால் வளர்க்கப்பெறும் பிள்ளைகளல்லவோ பின்னைய உலகம்?

பெண்பிறவி நோக்கம்

எனவே, உலகம் யாரிடத்திருக்கிறது? தாயினிடத் தன்றோ? அவ்வுலகாக்குந் தாய்மையுடைய பெண் ணின் பெருமையை என்னென்று கூறுவது? அன்பர்களே! பெண் பிறவி யின் விழுப்பத்தைக் கூர்ந்து நோக்குங்கள். பெண் ணின் பெருமை உணர்ந்தன்றோ திருவள்ளுவனார் 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்று உலகிற்கு அறிவுறுத்தினார்.

தாய்மை

இவ்வுலக ஆக்கத்துக்குரிய தாய்மை, பெண்ணின்பா லுண்டெனில், அவளது தொண்டின் சிறப்பை என் னென்று கூறுவேன்? இவ்வுலக நலத்துக்குரிய தொண்டை (Service) அத்தெய்வம் ஏந்தி நிற்கிறது. பயன்கருதிச் செய் யும் வேலை தொண்டாகாது. பயன் கருதாது செய்யப்படும் பணியே தொண்டாகும். பிள்ளைகளை நல்வழியில் வளர்க்குந் தொண்டினுஞ் சிறந்த தொண்டு வேறொன் றுண்டோ? பிள்ளைகளுக் குத் தொண்டு செய்யும்போது தாய் ஏதாவது பயன் கருதுகிறாளா? இல்லையே. உலக நலன் ஒன்றே கரு தித் தாய் தொண்டு செய்கிறாள். பயன் கருதாத் தொண்டன்றோ கடவுள் தொண்டு? அத்தொண்ட ருளத்தன்றோ கடவுள் வீற்றிருப்பார்? தாயுள்ளத்தி லில்லாத கடவுள் வேறெங்கே இருக்கப் போகிறார்? அதுபற்றியே, 'ஈன்றாளின் என்ன கடவுளுமில்' என் றார் நான்மணிக் கடிகைக்காரர். பெண் தாயாய்ப் புரியுந் தொண்டு பெரிதுங் கருதற்பாலது. பேண் பிறவியின் விழுமிய நோக்கம் தாயாகித் தொண்டு புரிதல் என்று

தொண்டின் கூறுபாடு

சொல்லல் மிகையாகாது. எனவே, பெண்மை என்னும் நினைவு தோன்றும்போது, தாய்மை - தொண்டு - என்னும் இரண்டும் பக்கத்தில் தோற்றமுறல் வேண்டும். இத் தாய்மையும் தொண்டும் வாய்ந்த பெண்ணல்லளோ முதன்மை யுடையாள் ?

தாய்மைத் தொண்டு

தாய்மைத் தொண்டு என்பது எளியதன்று. தாய்மைத் தொண்டு என்று எளிதில் பேசலாம்; எழுதலாம். நடைமுறையில் அத் தொண்டாற்றுவோர்க்கு அதன் அருமை தெரியும். அவ்வரிய தொண்டு பெண்ணிற்கு வாழ்வாயிருக்கிறது. அத்தொண்டிற்கென்றே பெண் பிறந்தாள்; வளர்ந்தாள்; படித்தாள்; மணங்கொண்டாள்; வாழ்கிறாள் என்றுங் கூறலாம். தொண்டு என்பது அடிமை வேலையன்று. பயன் கருதாத் தொண்டு தெய்விகம் நிரம்பியது. 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்னுந் திருவாக்கை யோர்க. இப்பெயரான் யான் ஒரு நூல் எழுதியிருக்கிறேன். விரிவு அதிற் காண்க.

வாழ்க்கைப் பெண்

வாழ்க்கையில் தலைப் பட்டுள்ள ஒரு பெண்ணின் வாழ்வை நோக்கின், அவளது தொண்டின் சிறப்பு இனிது புலனாகும். அப்பெண் எத்துணை எத்துணைத் தொண்டாற்றுகிறாள்! மாமன் முதலியோர்க்கேற்ற தொண்டு - கணவனுக்குரிய தொண்டு - பிள்ளைகளுக்குகந்த தொண்டு - மற்றவர்கட்குத் தக்க தொண்டு - எத்தனை எத்தனை வகைத் தொண்டு! வன்கண்ணர் சேர்ந்த குடும்பமாயின், அக்குடும்ப நெருப்பிடை

நின்று, துன்பம் பொறுத்து, மகிழ்ச்சியோடு பெண் பணியாற்றுகிறுள். வருவாயில்லாக் குடும்பமாயின், பொருளீட்டுந் துறையிலும் உழைத்து மற்றக்கடன்களைப் பெண் உஞற்றுகிறுள். பொது வினைகளில் தலைப்படநேரின், அவ்வினைகளையும் பெண்மகள் நிகழ்த்துகிறுள். பெண்மகள் துன்பம் பொறுத்து மகிழ்ச்சியோடு பணிசெய்தல் போல், ஆண்மகன் செய்யமாட்டான்.

பொறுமைப் பொருளாய பெண்ணைக் கிறிஸ்து என்றும், காந்தி என்றும் நான் போற்றுகிறேன். துன்பப் பொறையில் விளைவது இன்பம் என்று ஆஸ்கார் ஒயில்ட் என்னும் அறிஞர் கூறிப்போந்தார். இவ்வின்பநிலை பெற்றவரல்லரோ என்பையும் அன்பால் பிறர்க்களிப்பவராவர்? இந்நிலை பெண்மக்களுக்கு இயல்பாய் அமைந்து கிடக்கிறது. பெண் எப்பொழுதும் தனக்கென ஒன்றும் கொள்வதில்லை. பிள்ளைகளை வஞ்சிக்கும் தாய் உலகிலுண்டோ? தன்னுயிர்க்கென ஒன்றிருப்பினும் அதைப் பிள்ளைகட்குக் கொடுக்கத் தாய் சிறிதும் பின்னடையாள். பிள்ளைகட்காகத் தாய் செய்யும் தியாகத்தை இத்தகைத்தென்று எழுத்தால் எழுதல் முடியாது; சுருங்கக் கூறின் பெண் தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்பவள் என்று கூறலாம்.

**பெண்ணின் தியாகம்**

குடும்பக் கொடுமைகளைப் பொறுத்தல், உள்ளதை மற்றவர்கட் கீந்து மகிழ்தல், தனக்கென வாழாது பின்னுலகாக்கும் உயிர்கட்கென வாழ்தல், விருந்தோம்பல், ஏழைகட்குதவல் முதலிய அருங்குணங்கள் பெண்ணிடத்துப் பொலிதல் வெள்ளிடைமலை.

இப்பெருங்குணங்கள் பெண்ணின் தொண்டாகப் பரிணமிக்கின்றன. குணமிலாத் தொண்டு தொண்டாகுங் கொல்? தொண்டிற்கு வேண்டற்பாலது குணம்குணமே. பெண்ணின்பாலுள்ள தாய்மையில் எக்குணம் அடங்காது? உள்ள குணமெல்லாம் அதன்கண் அடங்கும். எனவே பெண் குணமலையாகிறாள். பெண்ணைக் குணமலை எனப் போற்றல் எவ்வாற்றானும் பொருந்தும். குண முதன்மை பெறல் இயல்பன்றோ?

குணம்

பெண்பிறவி தாங்கினோரில் குணமில்லார் இல்லையோ என்று சிலர் வினவலாம். உலகில் எதற்கும் புறனடையுண்டு. புறனடையைப் பொதுமையில் புகுத்திப் பேசுவது உலக வழக்கன்று. ஈண்டுப் பொது அறம்பற்றிப் பெண்ணுலகியல்பை யான் மொழிந்து வருகிறேன். பெண்வடிவந் தாங்கினோருள்ளும், பொறுமை தியாகம் முதலிய குணங்களில்லாப் பேய்களிருக்கலாம். இவர்கள் வடிவத்தால் பெண் மக்களேயன்றித் தாய்மைக்குரிய பெண்மை வாய்க்கப்பெற்ற பெண்மக்களல்ல. இவர்களே புறனடைப் பெண்மக்கள். இப்புறனடை ஒவ்வொன்றிலுமுண்டு.

குணமிலாப் பெண்

ஒரு மாந்தோப்பை எடுத்துக்கொள்வோம். அத்தோப்பிலுள்ள மாமரங்களில் இரண்டொன்று கனிகொடாமலிருக்கலாம். அவ்விரண்டொன்றைக் கொண்டு மாமரம் கனியளிக்கும் இயல்பினதன்று என்று கூறல் நியாயமாகுமோ? பெண்ணுலகினும் யாண்டாயினும் ஒரு மூலையில் பழுது நேரலாம்.

அதுகொண்டு அப்பழுது பெண்ணுலகின் இயல்பு என்று கூறல் அறமாமோ? பொதுப்படப் பெண்ணுலகின் இயல்பையே நாம் நோக்கல் வேண்டும்.

குணங்களை இரண்டு கூறாகப் பிரிக்கலாம். ஒன்று பெண்மைக் குணத்தொகுதி; மற்றொன்று ஆண்மைக் குணத்தொகுதி. பெண்மைக் குணங்களாவன: அழகு, அடக்கம், பொறுமை, தியாகம், பரநலம், இரக்கம், வீரம் முதலியன. ஆண்மைக் குணங்களாவன: கரடு, முரடு, அவா, பொறாமை, தன்னலம், சீற்றம் முதலியன. ஆண்மகன் கரடும் முரடும் சுருளும் திரிவும் பிளவும் நிரம்பிய பட்டைகள் போர்த்த வலிய மரம் போன்றவன்; பெண்மகள், அக்கரடு முரடு முதலிய கொடுமைகளை ஒடுக்க, அம்மரத்தைச் சுற்றி, மனதுக்கினிய பசுமை வழங்கும் மெல்லிய பூங்கொடி போன்றவள். இக்குணமிலாப் பெண் பெண்ணாகாள். இக்குணமுள்ள ஆண் மகனும் பெண்மை பெற்றவனாகிறான்.

பெண்மைக் குணம்; ஆண்மைக் குணம்.

ஆண்வடிவில் பெண்மைக் குணம்பெற்ற மக்களே இதுகாறும் உலகில் அன்பர்களென்றும், அடியார்களென்றும், அறிஞர்களென்றும், வீரர்களென்றும், பாவலர்களென்றும் சொல்லப்பட்டு வருகிறார்கள். 'ஆண் வடிவில் பெண்மைக் குணம்' என்பது கொண்டு ஒருவனை அலி என்று எவருங் கருதலாகாது. அலிகள் ஆண் பெண் என்னும் இருபாலாரிலுமுண்டு. அவர்களைப்பற்றிய பேச்சே ஈண்டு வேண்டாம். அவர்

ஆணில் பெண்மை

கள் சபிக்கப்பட்டவர்கள். அக்கூட்டம் வேறு; ஈண்டு யான் குறிப்பிடும் ஆண் வடிவில் பெண்மைக் குணம் படைத்த கூட்டம் வேறு. ஆண் பிறவி தாங்கினோர் நல்வழியில் முயன்று பெண்மைக் குணம்பெற முயல்வாராக.

'அகமே புறம்' என்றபடி குணத்துக்கேற்ற முகம் மலரும். நல்லன்பர்கள், அருளாளர்கள், வீரர்கள், பாவலர்கள் முதலியோர் முகங்களில் பெண்மை ஒழுகல் காணலாம். பண்டைக்கால அன்பர் அருளாளர் முதலியோர் படங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. கிடைக்குமேல் அவர்கள் முகத்தில் பெண்மையைப் பார்க்கலாம். புத்தர், கிறிஸ்து, திருவள்ளுவர், அப்பர், நம்மாழ்வார் முதலியோர் முகங்கள் பெண் முகங்களாகவே பொலிந்திருத்தல் வேண்டும். பாட்டிற்சிறந்த ஷெல்லி, வீரத்திற் சிறந்த நெப்போலியன், பொறுமையிற் சிறந்த காந்தியடிகள் இவர்கள் திருவுருவப் படங்களை உற்று நோக்குவோம். அவர்கள் முகத்தில் மனதைக்கவரும் பெண்மை என்ன அழகாகப் பொழிகிறது! பெண்மைக்குணம் ஊறும் அகம், பெண்மை முகமாக மலர்தல் இயல்பு.

பெண்ணீர்மைகளே இறைமை நீர்மைகள் என்பன. ஏனைய அரக்கர் நீர்மைகள். அரக்கர் தன்மையைச் செருக்கப் பெண் தன்மை வேண்டற்பாலது.

**பெண்மையின் இறைமை**

பெண்ணியல்பு பெறாது கடவுள் நிலை பெறல் இயலாது என்று சுருங்கச் சொல்லி விடலாம். ஞான நிலையில் எவரும் பெண்மையாகும் ஒரு நிலையுண்டு. அதாவது,

அழுக்காறு - அவா - வெகுளி - முதலியன கழிந்து, பொறுமை-அருள்-முதலியன படியும் ஒரு நிலை என்க. 'ஒளியாம் பரமும் உளதாம்பரமும் - அளியார் சிவ காமி யாகுஞ் சமயம்' என்றார் திருமூலனார். 'மெய் யருளாந் தாயுடன் சென்று பின் தாதையைக்கூடி' என்றார் பட்டினத்தடிகளும். கடவுள்நிலை அடைதற் கும் பெண்ணியல்பு இன்றியமையாததா யிருக்கிறது.

பெண்மையின் சிறப்பை உன்னியே நம்முன் னோர்கள், வாழ்விற்கின்றியமையாத கல்வி, திரு, ஞானம் முதலியவற்றையும் பெண்ணெனக் குறித்தார் போலும்!

**நமது நாடும் பெண்மையும்**

கல்வியைக் கலைமகள் என்றும், திரு வைத் திருமகள் என்றும், ஞானத் தைப் பரை என்றும் நமது நாட்டார் கொண்டது ஆராயற்பாலது. நாட்டைப் பலவழி யிலும் ஓம்பும் காட்டைக், காட்டுக்கன்னி - வன தேவதை - என்று கொண்டதும், பல்லுயிர்களைத் தாங் கும் நாட்டைத் தாய் (வந்தேமாதரம்) என்று வழுத்து வதும் உணரற்பாலன. எல்லாவற்றிற்கும் மேலாக விளங்கும் கடவுளையும் நம்மவர்கள் பெண்ணாகவே பெரிதும் போற்றுகிறார்கள். இந்திய நாட்டில் கட வுளைப் பெண்ணாகப் போற்றுவோர் தொகையே பெருகி நிற்கும். முழுமுதற் பொருள் பெண் ஆண் வடிவாயிருப்பினும், அதனிடத்து அருளுக்குரிய பெண் தன்மையே சிறந்து விளங்குதலை, அருள் நிலை எய்திய பெரியோர் நமக்கு அறிவுறுத்திப் போந்துள் ளார். 'மூவேழுலகுக்குந் தாயே' என்றும், 'அம்மை எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே' என்றும்

மாணிக்கவாசகனார் அருளி யிருத்தல் காண்க. உலகில் உயரிய அன்புப் பொருளெல்லாம் பெண்ணாகவே பேசப்படல் எவரும் அறிந்ததொன்று. இத்துணைச் சிறப்பு வாய்ந்த பெண்மையின் பருமையாம் பெண்ணின் முதன்மையைப் பேசவும் வேண்டுமோ?

பெண்ணின் முதன்மையை நிறுவப் பலப்பல காரணங்களுண்டு. அவைகளை ஈண்டு விரிக்கில் அவைகள் பெருகும். எதையும் ஆய்ந்து உண்மைகண்ட பின்னரே, அவ்வுண்மையை உலகிற் கறிவுறுத்தும் மேல் நாட்டுப் பூதபௌதிக ஞானிகளிற் பலர், பெண் தோற்றத்தையே முதல் தோற்றமாகக் கொண்டுள்ளார். இழிந்த பிராணிகளிற் சில, சின்னாள் பெண்ணாகவும், சின்னாள் ஆணாகவும் மாறல் கண்கூடு. பையாலஜி என்னும் இயற்கை நூல்களைப் பார்க்க. உலகில் தொன்மையில் பெண் ஆண் வேற்றுமை அரும்புதற்கு முன்னர், முதன் முதல் இயற்கையில் பெண்ணுறுப்பே அரும்பியிருத்தல் வேண்டுமென்பது இயற்கை ஞானிகள் ஆராய்ச்சியிற் போந்த உண்மை. இவ்வுண்மைக்கு நமது நாட்டவருட் சிலர் கண்ட உண்மை அரண் செய்கிறது.

**பெண் தோற்றம்**

தமிழ் நாட்டிற் பிறந்த மணிகளுள் திருமூலர் என்னுங் குருமணி, பெண்ணின் முதன்மையைப் பலவிடங்களில் விரித்துப் பேசியிருத்தல் எனது உள்ளத்தைக் கவர்கிறது. அவர் அருளிய மொழிகளுள் சில வருமாறு :—

பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதைமை
பெண்ணிடை ஆணும் பிறந்து கிடந்தது
பெண்ணுடை ஆணென் பிறப்பறிந் தீர்க்கின்ற
பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே.

காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணுஞ் சிவனும் பிரமனும் மாயனும்
காணுந் தலைவிநற் காரணி காணே.

பைங்கொடி யாளும் பரம னிருந்திடத்
திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம்
விண்கொடி யாகி விளங்கி வருதலால்
பெண்கொடி யாக நடந்த துலகே.

இயற்கையில் முதல் முதல் அரும்பியது பெண்ணுறுப்பென்பது பூதபௌதிக ஞானிகளின் கொள்கை. அவ்வியற்கைக்குக் காரணமாக உள்ள சக்திக்கு முதன்மை நமது நாட்டவர் கூறுகிறார். முன்னையது சடத்தைப் பற்றிய ஆராய்ச்சியி னின்றும் எழுந்த உண்மை. பின்னையது சித்தைப்பற்றிய ஆராய்ச்சியினின்றும் எழுந்த உண்மை. சித் எவ்வழி, அவ்வழி சடமியங்குமாகலின், அவ்வுண்மைக்கு இவ்வுண்மை அரண் செய்தல் காண்க. இயற்கையிலும் இறைமையிலும் முதன்மை பெற்றுள்ள பெண்ணிற்கு முதன்மை எவரும் வழங்க வேண்டுவதில்லை. அம்முதன்மை இயல்பாகவே அமைந்து கிடக்கிறது. அம்முதன்மை, உலகில் பொதுவாகச் சில விடங்களிலும், சிறப்பாக நமது நாட்டிலும் மறக்கப்பட் டிருக்கிறது.

பெண்ணின் முதன்மை மறந்தவிடம்

அம்மறப்புள்ள விடங்களில் கல்வி, திரு, பொலிவு, அன்பு, உரிமை, வாய்மை, தெய்வ மணம் முதலியன அருகி நிற்கும். இயற்கை அவ்வுலகைப் பல வழியில் ஒறுத்தே தீரும். பெண்ணின் முதன்மை மறக்கப்பட்ட இடம், நரகக்குழி யொத்தது என்று சுருங்கக் கூறுவேன். அழகு, அடக்கம்,

ரக்கம், இன்பம் முதலியன முதன்மை பெறு இடம்,
கமல்லாது பின்னை என்னை ? மனதைக் கவரும்
ழகரும்பி, நல்வாழ்விற்கு அடிகோலும் அடக்
ம் மலர்ந்து, பொறுமை தியாகம் தன்னலமறுப்பு
ரக்கம் முதலிய செவ்விய நீர்மைகட்கு அடிப்
டையாயுள்ள அன்பு காய்த்து, பின்னுலகாக்கும் தாய்
மைத் தொண்டு கனிந்து, இன்ப வாழ்வெனும் தேன்
லிற்றும் பெண் கொடியின் முதன்மையையா மறப்
து ? மறுப்பது ?

நம்முன்னோர்கள் கடவுளின் பெண்கூற்றை முன்
ர்க் குறித்தே, பின்னர் ஆண்கூற்றைக் குறிப்பது

**மது நாட்டுத் தொன்மை வழக்கு**

வழக்கம். பார்வதி பாகன், இலட்சுமி நாராயணன், வள்ளி மணாளன் முத லிய வழக்குகளை நோக்குக. உலகம் ஒரு பாதி பெண்ணும் மற்றொரு பாதி
ணுமாக ஆக்கப்பட் டிருப்பினும், பெண்ணுலகின்
பருமை நோக்கித் தொன்மை யுலகம் அதற்கு
தன்மை வழங்கிற்று. பெண்ணையே தேவி என்று
ம்மவர்கள் அழைக்கிறார்கள். ஆணைத் தேவன்
ன்று சொல்லும் வழக்கம் பெரிதும் நாட்டில் இல்லை.
இவ்வாறு பெண்ணிற்கு முதன்மை வழங்கிய நாடு,
இதுபோழ்து அம்முதன்மை மறுக்கும் நிலை எய்தி
ருக்கிறது. தாய்மையுடைய பெண்ணிற்கு முதன்மை
ழங்க மறுப்பது அநாகரிகம். ‘ ஈன்றாளுமாய் எனக்கு
ந்தையுமாய் ’ என்றும், ‘ அன்னையும் பிதாவும் முன்
றி தெய்வம் ’ என்றும், ‘ சத்தியாய்ச் சிவமாகி ’
ன்றும் பெரியோர்கள், முதன்மை பெண்ணுக்கு

வழங்கி யிருத்தல் காண்க. பெண் வயிற்றிற் பிறந்த நாம் பெண்ணை முதலாகக் கொள்வோமாக.

யான் பெண்ணின் வயிற்றில் தோன்றினேன்; பெண்ணுடன் பிறந்தேன்; பெண்ணுடன் வாழ்ந்தேன். என் வாழ்விற்கு நாடோறுந் துணைபுரியும் இயற்கை, பெண்ணாகவே காட்சியளிக்கிறாள். யான் தொழும் அன்புத் தெய்வமும் பெண்ணாகவே யிருக்கிறது. எனது உள்ளத்துள்ள பெண்மை, அருளைச் சொரிகிறது. யான் பேசும் மொழி, எனக்குப் பெண்ணின்பம் நல்குகிறது. எல்லாம் பெண்மயமாக என்னைச் சூழ்ந்து, என்னுடலுக்கும் உயிருக்கும் நலஞ் செய்கின்றன. இத்தகைப் பெண் தெய்வத்தை முதன்மைப் பொருளாகப் போற்றுகிறேன். பெண்ணே முதன்மை யுடையாள்; அத்தாயை வணங்குகிறேன்; வாழ்த்துகிறேன். வந்தேமாதரம்.

" சர்வம் சக்தி மயம் ஜகத் "

---

# ௩. பெண்ணுரிமை



[உரிமை இயல்பு - அஃறிணையுலகில் பெண்ணுரிமை - ஆண் கொடுமை - பெண்ணுரிமையுள்ள நாடு - நாகரிகத்துக்கு அறிகுறி - கீழ்நாட்டுப் பெண் மக்கள் - பெண்ணுரிமையில்லா நாடு - வேதகாலப் பெண் மக்கள் - இதிகாசகாலப் பெண் மக்கள்-புத்தர் காலம் - இராச புத்திரிகள் - பழந்தமிழ்க்காலப் பெண்மக்கள் - அகப் பொருளும் பெண்ணுரிமையும் - நாயன்மார் காலம் - பெண் அடிமைப்பட்ட காலம் - ஸ்மிருதி காலம்-பெண் ஆண் மூளை நிலை - அமைதியில் அறிவு - கலைமகள் நுட்பம் - பேதைமை விளக்கம் - கட்டுப் பாடுகளின் கொடுமை - ஒழுக்கம் இருபாலார்க்கும் - திருவள்ளுவர் உள்ளம் - செயற்கைக் கட்டுகள் - உரிமையும் கடமையும் - பெண்ணுரிமைக் கேட்டால் விளையுங் கேடுகள் - உரிமைப் போரால் கொடுமை - பெண்பிறவி நோக்கம்-பெண் ஆணுக்குள்ள தொடர்பும் நாட்டுப் பழைய வாழ்வும்.]

**மாதர்தம்மை இழிவுசெய்யும்**
**மடமையைக் கொளுத்துவோம்**—பாரதியார்

எல்லாவற்றிலும் முதன்மை பெற்று விளங்கும் பெண்ணிற்கு உரிமை வழங்கவேண்டுமா வேண்டாமா என்னும் ஆராய்ச்சியும் இவ்வுலகில் சில விடங்களில் நடைபெற்று வருகிறது. உரிமை என்பது ஒருவர் கொடுப்பதுமன்று; மற்றொருவர் வாங்குவதுமன்று.

அஃது எவரிடத்தும் எல்லா விடத்தும் இயல்பாய் அமைந்து கிடப்பது. சிலர் தமக்குள்ள வன்மையால் பிறர் உரிமையை மறித்தும் பறித்தும் வருகிறார். ஒருவர் உரிமைக்கு மற்றொருவர் கேடு சூழ்வதினும் கொடிய பாவம் பிறிதொன்றிருக்கிறதென்று தெரிய வில்லை. உரிமையாவது உயிர்கட்குக் கடவுளால் அளிக்கப்பட்ட ஒரு பெரும் இயற்கைக் கொடை. தன்னைப்போலவே உயிர்களும் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி உலகில் வாழவேண்டு மென்பது கடவுள் நோக்கம். அவ்வருள் நோக்கத்துக்கு மாறுபட்டுப் பிறர் உரிமை தடிவோர், கடவுள் உண் மையில் உறுதியுடையோராகார். எவ்வுயிர் உரிமைக் கும் எவரும் கேடு நிகழ்த்தலாகா தென்பது பொது அறம். அங்ஙனமாக, மன்பதைத்தோற்ற வளர்ச்சிக் கெனக் கடவுளருளால் தாய்மையைப்பெற்ற மென்மைப் பெண்மகளின் உரிமையை, வன்மை ஆண்மகன் சில விடங்களில் மறித்தும் பறித்துமிருக்கிறான்! இயற்கை நியதிக்கு முரணிநின்று, பெண்ணுரிமைகடிந்து, 'பெண் ணுக்கு எவ்வளவில் உரிமை வழங்கலாம்; எவ்வள வில் வழங்கல்கூடாது' என்னும் ஆராய்ச்சியில் தலைப் படல் எத்தகை அறியாமை! பெண்ணின் உரிமை கெடுக்கவும் வழங்கவும் இவர் யாவர்? அவ்வுரிமை கடிந்த மறத்துக்குக் கழுவாய் தேடவேண்டுவது இவர் கடமை என்று யான் கூறுவேன்.

உரிமை

பெண்ணுரிமைக்குக் கேடு எவ்வுலகில் விளைந் திருக்கிறது? அஃறிணையுலகிலா? ஆறறிவுடைய மக் கள் உலகிலா? வெட்கம்! வெட்கம்! புல் செடி

கோடிகளில் ஆணினம், தன் தன் பெண்ணினத்தின் உரிமையைத் தகைந் திருக்கிறதா? ஆண்பறவை, பெண்பறவையின் உரிமையைக் கெடுத்திருக்கிறதா? எவ் விலங்காதல் தனது பெண்ணினத்தின் உரிமையை உடைத் திருக்கிறதா? அஃறிணை உலகில் பெண்ணுரிமைக்குப் பழுது நிகழ்ந்ததில்லை. பாழான ஆறறிவுடைய உயர்திணை உலகிலேயே அவ்வுரிமைக் குப் பழுது நேர்ந்திருக்கிறது.

அஃறிணை யுலகில் பெண்ணுரிமை

அப்பழுது தொன்று தொட்டு இடையீடின்றி நிலவி வருவதன்று. சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே அப்பழுது பெண்ணுலகில் நுழைந்தது. இதற் குக் காரணம் ஆணுலகின் தன்னலமே யாகும். ஆண்மகன் பெண்மகளைத் தனக்குரிய காமப்பொருளாகவும், பணியாளாகவும் கொண்ட நாள் தொட்டுப் பெண்மகள் உரிமை இழக்க லானாள். வலிய ஆணின் கொடுமை, பெண்ணின் உரிமையைப் பறிமுதல் செய்தது. வலிய ஆண்முன் மெலிய பெண் என் செய்வாள்?

ஆண்கொடுமை

பெண்ணுரிமை, பொதுவாக உலகில் பல விடங்களிலும், சிறப்பாகச் சில விடங்களிலும் பின்னை நாளில் கடியப்பட்டது. பெண்ணுரிமையுள்ள நாடுகள் செழுமை யுற்றிருப்பதும், அவ்வுரிமையில்லா நாடுகள் செழுமை யற்றிருப்பதும் கண்கூடு. பெண், நாட்டின் தாயாகலான், அவள் அடிமைப் படும் இடம் அடிமைப்படல் இயல்பு.

பெண்ணுரிமையுள்ள நாடு

மேல்நாட்டார், தாம் பெண்ணுரிமை கடியாமல் வாழ்தலால், தாம் நாகரிக நுட்பம் உணர்ந்தவரென்றும், கீழ்நாட்டார் பெண்ணுரிமை கடிந்திருப்பதால், அவர் நாகரிக நுட்பம் உணராதவரென்றும் கருதுகிறார். ஒரு நாட்டின் நாகரிகம் அந்நாட்டின் பெண்மக்கள் நிலையைப் பொறுத்து நிற்கிற தென்பது எவரும் கொள்ளத்தக்க உண்மை. பெண் மக்கள் எவ்வித கட்டுப்பாடுமின்றி, இடுக்கணுமின்றிப் பிறப்புரிமை இன்பத்தை எங்கே நுகர்கிறார்களோ, அங்கேயுள்ள ஆண்மக்கள் நாகரிக நுட்பமுணர்ந்தவர்களாகிறார்கள். அந்நாடே நாகரிகம் பெற்ற நாடாகும்.

நாகரிகத்துக்கு அறிகுறி

கீழ் நாட்டின் பழைய வரலாற்றை நோக்குழிப் பெண்மக்கள் அடிமை வாழ்வு நடாத்தின ரென்பது தெரியவில்லை. கீழ்நாட்டுச் சரித்திரங்களில் இவ்வுண்மையைக் காணலாம்.

கீழ் நாடு

எகிப்து, பாபிலோன் முதலிய விடங்களில் பண்டை நாளில் பெண்மக்கள் அடிமைகளாக நடத்தப்பட்டார்கள் என்று தெரியவில்லை. முதல் முதல் ஒரு பெண்பால், அரசு செலுத்திய இடம் எகிப்து என்று சொல்ல வேண்டுவதில்லை. சீனத்தில் ஹதாசு, செமிராமிஸ் என்பவர்கள் ஆட்சி நடாத்தி இருக்கிறார்கள். அணித்தே ஒரு மஹாராணியே சீனத்தின் சக்கரவர்த்தினியாயிருந்தாள். இந்தியாவில் ரிஜியா, நூர்ஜஹான் முதலியோர் ஆட்சிகள் நடந்தன. சிரியா நகரங்களை அராபியர் பற்றி வந்தபோது, காலஸ், ஓபிரா

பெண் மணிகள் திறம்

என்னும் அராபிப் பெண்மணிகள் நாட்டிய வீரத்தைச் சரித்திரத்திற் காணலாம்.

நபிநாயகத்தின் அருந்தவப் புதல்வியார், பெருமைக்கு ஓர் உறையுளாக இருக்கிறார். விரிவு அவர் வரலாற்றிற் காண்க. பாக்தாத் முதலியவிடங்களிலிருந்த சில கலிபாக்கள், தங்கள் மனைவிமார்களின் நினைவுக்குறியாகப் பல அழகிய நிலையங்கள் எழுப்பினார்கள். ஷாஜஹான் கட்டிய தாஜ்மஹால், அவர் மனைவியின் அன்பிற்கோர் அறிகுறியாக நிற்கிறது. இவ்வன்புச் செயல்கள் பெண்மக்களிடத்துள்ள மதிப்பைப் புலப்படுத்துகின்றன. முஸ்லிம் பெண்மக்கள், பிறந்தவிடத்தில் சொத்துரிமை பெற்றிருப்பதும் ஈண்டுக் கருதத் தக்கது.

கீழ்நாட்டுப் பெண்மணிகளில் கல்வித் துறையில் பேர் பெற்று விளங்கினவர் பலர். ஜப்பானிய இலக்கியங்களிற் சிறந்த இரண்டு நூல்களின் ஆசிரியன்மார்கள் பெண்மக்களே. பாக்தாத், கார்டோவா முதலிய விடங்களில் பெண்மக்கள் கல்லூரிகளில் சென்று பயின்று வந்தார்களென்று சொல்லப் படுகிறது. பெண்மக்கள் பற்பல கல்வித் துறைகளிலும் வல்லவர்களா யிருந்தார்கள். மீராபாய், ஜீபன்னிசா, சைஸ், யோதோனி முதலிய புகழ்பெற்ற பெண்கவிகளின் சிறப்பை என்னென்று கூறுவது ?

**கீழ்நாட்டுப் பெண்மக்கள் வாழ்வு**

கீழ்நாட்டுப் பெண்மக்கள் பெரிதுந் தாய்மையையும், அறவொழுக்கத்தையும், சமய வாழ்வையும், தொண்டையுமே தங்களுக்குரிய வாழ்வுச் செல்வமாகக் கொண்டிருந்தார்கள். ஆண் மக்களிடத்தில் போராடுவதும், அவர்களை வழிமறித்துப் புடைப்ப

தும், அவர்கள் பதவிகளைப் பற்றுவதும் தங்களுக்குரிய வாழ்வென்று அவர்கள் கொண்டார்களில்லை. ஆண் மக்களுடன் போராடுவதுமட்டும் பெண்ணுரிமை யாகாது. பெண் ஆணுடன் கலந்து வாழப் பிறப்பிக் கப்பட்டாளன்றி, அவள் ஆணுடன் போர்புரிந்து வாழ் வைக் குலைத்து இடர்ப்படப் பிறப்பிக்கப்பட்டாளில்லை. இதுபற்றிப் பின்னுங் கூறுவன்.

கீழ்நாடுகளிற் சிறந்த நமது இந்திய நாட்டின் மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். பண்டை நாளில் இந்திய நாட்டுப் பெண்மக்கள் கல்வியாளர்களாய், வீரத்தாய்மார்க ளாய், அரசிகளாய், எவ்வினையும் ஆற்றவல்லவர்களாய் இருந்தார்கள். அந்நாளில் நாடு உற்றிருந்த செழு மைக்கோரளவில்லை.

**இந்திய நாடு**

இந்திய நாட்டின் செழுமையும், பெருமையும், பிற வும் நூல்களில் சொல்லப்படுகின்றன. நாடு அச் செழிய நிலையுற்றிருந்த நாள் எந்நாள்? அந்நாள், பெண் ணுரிமை பெற்றிருந்த நாள், என்று தியங்காது கூறு வேன். பெண்ணுரிமை பறிக்கப் பெற்ற நாள்தொட்டு, நாடும் உரிமை இழந்து, அடிமைக் குழியில் வீழ்ந்து வருந்துகிறது.

நமது நாட்டின் இப்போதைய சிறுமைக்குக் கூறப்படுங் காரணங்களுள் யான் மூன்றைச் சிறப் பாக எடுத்துக் கூறுவது வழக்கம். அவை (க) பெண் ணுரிமை தடிந்தது (உ) பிறப்பால் வகுப்பு வகுத்தது (ரு) மக்களுள் தீண்டாமை கொண்டது. இம்மூன்ற

னுள் பெண்ணுரிமை தடிந்ததைத் தலையாய காரணமாகவுங் கொள்ளலாம். பெண், நாட்டின் ஒரு பாதியாகலின், அவள் உரிமைக் கேட்டால், நாடு எங்ஙனம் நல்வாழ்வு பெறுதல் கூடும்? மனிதனது ஒரு பாதி, வாயுவால் இயக்கமின்றி வீழ்ந்தால், அவன் எதற்குப் பயன்படுவான்? 'பெண்ணுரிமையில்லா நாடு, பக்கவாயு உடையானை யொத்தது' என்று சொல்ல வேண்டுவதில்லை.

பெண்
ணுரிமை
இல்லாநாடு

பண்டைக் காலத்தில் நமது நாட்டுப் பெண்மக்கள் எல்லாத் துறைகளிலும் உரிமை பெற்றிருந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் பல உள. வேதகால உலகின்மீதும், பழந்தமிழ்கால உலகின்மீதும் நமது கருத்தைச் செலுத்துவமேல், அக்காலப் பெண்மக்கள் நிலை இனிது புலனாகும். இடைக்காலத்திலும் பெண்மக்கள் சிறுமையுற் றிருந்தார்களென்பது தெரியவில்லை. பிற்காலத்திலேயே - அதாவது ஸ்மிருதி காலத்தில் - நமது நாட்டில் பெண்ணுரிமை குலைக்கப்பட்டது.

வேதங்களில் மிகத் தொன்மையது ரிக்வேதம். அதன்கண் பெண் மக்களால் யாக்கப்பட்ட பாக்களைக் காணலாம். அத்திரி ரிஷியின் வழித் தோன்றிய விசுவாவரை, அகத்தியரின் காதல் மனைவியார் லோபாமுத்திரை, ஆம்ப்ரி முனிவரின் அருமைப் புதல்வியார் வாக்தேவியார் முதலியோர் யாத்த பாடல்கள் அவ் வேதத்தில் பொலிகின்றன. மைத்ரேயி, கார்க்கி, தேவபூதி முதலிய பெண்மணிகளைப்பற்றி ஈண்டு விரித்துக்கூற வேண்டுவதில்லை.

வேதகாலப்
பெண்மக்கள்

மைத்ரேயி என்பார், மித்ரர் என்னும் பெரும் புலவரின் அருந்தவப் புதல்வியார். 'தந்தை மகற்காற்று நன்றி அவையத்து - முந்தி யிருப்பச் செயல்' என்றார் வள்ளுவனார். 'மகனுக்கு' என்பதுகொண்டு மகட்கு அன்று என்று பொருள் கூறுவது பிற்கால வழக்கு. பொது வாக உலகிற்கு ஓர் அறம் உரைக்கும் வேளையில் 'ஒருவன்' 'மனிதன்' என்னும் ஆண்பாற் சொற்களை ஆளுதல் தொன்று தொட்ட வழக்கம். இவ் வழக்கு எல்லா மொழிகளிலும் உண்டு. திருவள்ளுவர் ஈண்டு 'மகற்கு' என்றது, பொதுவாக மக்களைக் குறிப்பதென்க. இது நிற்க. தந்தை பிள்ளைக்கு நல்கத் தக்க செல்வம் கல்விச் செல்வமே யாகும். பண்டிதர் மித்ரரும் தமது புதல்வியாரைப் பெரும் பண்டிதையாராக்கினார். இப் பண்டிதையார் பொருட் செல்வத்தின் புன்மையையும், அருட் செல்வத்தின் மேன்மையையும் பற்றித் தமது கணவனார் மகரிஷி யாக்ஞ வல்கியருடன் வாதித்த பெருமொழிகள் ஒரு சிறந்த உபநிஷதத்தில் ஒளிர்கின்றன. அப்பண்டிதை யார் ஆசிரியரா யிருந்து ஒரு வேத பாடசாலையை நடாத்தினரென்றுஞ் சொல்லப்படுகிறது.

மைத்ரேயி

இப்பெருமாட்டியாரின் நெருங்கிய உறவினராய கார்க்கியைப் பற்றித் தெரியாத வடமொழிப் புலவர் இரார். கார்க்கி, ஒருபோது ஜனகன் கழகத்தில், யாக்ஞவல்கியருடன் வாதம் புரிந்து, 'தர்க்க அரசி' என்னும் பெயர் பெற்றனர்.

கார்க்கி

தேவபூதி என்பார், சாங்கிய மதாச்சாரியராகிய கபிலர் என்னும் பெரியாரை ஈன்ற தாயார். தாயார் தேவபூதியி னிடத்திலேயே புதல்வர் கபிலர் கல்வி பயின்று, அப்பயிற்சியின் பயனுகச் சாங்கிய நூல் இயற்றி, ஒரு சமயத்தைக் காணும் திறனும் பெற்ருர். இப்பெருமைக்குக் காரணராயிருந்த தேவபூதியின் கல்விச் சிறப்பை என்னென்று கூறுவன்?

**தேவபூதி**

வேதகாலப் பெண்மக்கள் நிலை குறித்துப் பல படப் பேசவேண்டுவ தில்லை. அக்கால வழக்கமொன்றை ஈண்டுக் குறிப்பிடுவது சாலும். அந்நாளில் தலைவன் வேள்வி செய்யும்போது தலைவியும் உடனிருப்பாள். மந்திரத்திலாதல், சுரத்திலாதல் தலைவன் பிழை நிகழ்த்துவனேல், உடனே திருத்தமாகத் தலைவி அதைச் சொல்லி, ஒழுங்கு செய்வது வழக்கம். இதனுல், ஆண்மக்களைப் போலவே பெண்மக்களும் கல்வியிலும் வேதப் பயிற்சியிலும் சிறந்து விளங்கினுர்கள் என்பது தெற்றெனத் தெரிகிறது.

**பெண்மக்கள் வேதப் பயிற்சி**

வேத காலங் கடந்த பன்னூறு ஆண்டுகளுக்குப் பின்னரும் பெண்மக்கள் கல்வித் துறையிலும், பிற துறைகளிலும் உரிமை பெற்றிருந்தார்கள். சங்கரர்க்கும் மிசிரர்க்கும் நிகழ்ந்த விவாதத்தில் நடுநிலைத் தலைமை வகிக்கும் பேறு பெற்ற பாரதியும், கணிதத்திற் சிறந்த லீலாவதியும், வானசாஸ்திரத்தில் பேர் பெற்ற காலையும், மணஞ் செய்தற்குத் தன்னையொத்த புலமையுடைய நாயகன் வாய்க்கப் பெருது

கன்னிகையாகவே காலங் கழித்த சுலபையும், ஹூவான்த்ஸாங் என்னுஞ் சீனர், நமது நாடு போந்து சுற்றியபோது, எக்கட்டுப்பாடு மின்றிப் புலவர்களோடு பேசிக்கொண்டிருந்தனரென அவர் நூலில் குறிக்கப்பெற்றுள்ள இராஜேசுவரியும், பிறரும் அக்காலப் பண்டிதைமார்களில் குறிக்கத் தக்கவர்கள்.

இதிகாசங்களிற் போந்துள்ள பெண் மக்கள் வரலாறுகளும் அவர்களது நிலையைப் புலப்படுத்தும்.

**இதிகாசகாலப் பெண்மக்கள்**

சீதையின் நிறையும், பிரபாவதி, சபரி இவர்களின் தவமும், குந்தி தனது புதல்வர்கட்கு ஊக்கமூட்டிச் சோர்வு குலைத்து வீரமெழுப்பியதும், காந்தாரி அரச அவை ஏறி அரசியல் அறிவுறுத்தியதும், திரௌபதியின் அருஞ்செயல்களும் அக்காலத்திய பெண்மணிகளின் உரிமைக்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றன.

**புத்தர் காலம்**

புத்தர் காலத்திலும் பெண்ணுரிமைக்குக் கேடு நிகழவில்லை. அந்நாளில் ஆண் மக்களைப் போலவே பெண் மக்களும் கல்வி பயின்று அறம் வளர்த்தார்கள். அசோகன் காலத்தில், சில பெண்மணிகள், உலகில் பல நாடுகள் போந்து, அறம் வளர்த்தார்களென்று சரித்திரஞ் சொல்கிறது.

**இராச புத்திரிகள்**

இன்னும் சரித்திரத்தில் சில பெண் மக்களின் அருஞ்செயல்கள் பேசப்படுகின்றன. அரசிகளாகச் சிலர் இருந்தனர்; வீரத் தாய்மார்களாகச் சிலர் இருந்தனர். அறுநூறு எழுநூறு ஆண்டுகட்குமுன்னர், நமது நாட்டில் வதிந்த இராசபுத்திரிகள் போர்முகத்தில் காட்டிய வீரச்செயல்கள் சரித்திரத்தில் பதிந்து கிடக்

கின்றன. அச் செயல்களைச் சரித்திரங்களிற் காண்க. அவ்வீரச் செயல்கள் பழைய பெண்மக்கள் வழி வழி வந்து சுருங்கி நின்ற எச்சங்களாகும். எனவே, வேத காலத்திலும், இடைக் காலத்திலும், நமது நாட்டுப் பெண் மக்கள் உரிமை இழந்து நின்றார்கள் என்று சொல்வதற்கு இடமில்லை.

பழந் தமிழ்க் காலப் பெண்மக்கள்

பழந் தமிழ்நாட்டுப் பெண் மக்கள்மீது சிறிது கருத்தைச் செலுத்துவோம். பழந் தமிழ்நாடு பெண் மக்கள் உரிமைக்கு ஓர் இலக்கியம் என்று கூறல் உயர்வு நவிற்சியாகாது. பழந்தமிழ் நூல்களைத் துருவித் துருவி ஆராய்ந்தால் அவைகளில் யாண்டும் பெண்ணுரிமை காணலாம். 'பெண் தாழ்ந்தவள், குறையுடையாள், அடிமை' என்னும் உணர்வே அற்றை நாளில் இல்லை.

அகப் பொருளும் உரிமையும்

தமிழ் நூல்களில் தலைசிறந்து விளங்கும் அகப்பொருள் நூல்களின் உள்ளக்கிடக்கை என்னை? இன்பமன்றோ? உரிமை இல்லாவிடத்தில் இன்பநிகழ்ச்சி ஏது? உரிமையின் ஒழுக்கன்றோ இன்பம்? இன்ப நுகர்ச்சிக்கு இருபாலாரிடத்தும் ஒத்த உரிமை இயல்புகள் இருத்தல்வேண்டும். ஒத்த உரிமை இயல்புகளை பெரிதும் பழந் தமிழ்நாட்டு ஆண் பெண் வாழ்வாக அமைந்திருந்தன. அவைகளை, 'ஒத்தநலனும் ஒத்தகுணனும் ஒத்தகல்வியுமுடைய ஒருவனும் ஒருத்தியும்' என்றும், தலைவன் தலைவியர் அன்பு நிலையை, 'ஓராவிற்கு இருகோடு பூத்தாலென்ன' என்றும் நக்கீரனார் நவின்றிருத்தல் காண்க. பழந் தமிழ்நாட்டு

மணம், களவு மணமாக இருந்ததும் ஈண்டுக் கருதற் பாற்று. பெண்மகள் தனக்கினிய தலைவனைத் தானே தெரிந்தெடுத்து வந்த வழக்க மொன்றே, அந்நாளைய பெண்ணுரிமைக்குப் போதிய சான்றாக நிற்கிறது.

'ஒத்த கல்வி' என்னுங் குறிப்பு, அக்காலப் பெண் கல்விச் சிறப்பைத் தெரிவிக்கிறது. பழந் தமிழ்நாடு ஆண் புலவர்களோடு பெண் புலவர்களையும் அணிந்திருந்தது. வெள்ளி வீதியார், ஔவையார், பெருங்கோப் பெண்டு, பாரிமகளிர், எயினிமார் முதலியோர் அந்நாளில் தமிழ் வளர்த்த பெண்மணிகள். இவர்கள் பாக்களைப் புற நானூறு முதலிய நூல்களிற் காண்க.

**பெண் கல்வி**

அப்பாடல்களில் எளிய குறுகிய பாடல்கள் சில வருமாறு :—

களம்புகல் ஓம்புமின் தெவ்விர் போரெதிர்ந்
தெம்முளும் உளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே.

யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை
என்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்
கடிமதி லரண்பல கடந்த
நெடுமா னஞ்சிநீ யருளன் மாறே.

ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
அணிபூ ணணிந்த யானை இயறேர்
அதியமான் பரிசில் பெறூஉங் காலம்

நீட்டினு நீட்டா தாயினும் யானை தன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே
யருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கவவன் றாளே.

—ஔவையார்

அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்
எந்தையு முடையேம் எங்குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
குன்றுங் கொண்டார் யாம் எந்தையு மிலமே.

—பாரிமகளிர்

இப்பாடல்கள் பேச்சுப்போல் இருத்தல் கவனிக்கத்தக்கது. பழந்தமிழ்ப் பெண்மக்கள் பேச்சே பாடல் என்க.

கோவலன் தன்னைவிடுத்துப் பிரிந்தபொழுது, மாதவி, மீண்டும் அவனை அடையவேண்டி, எழுத்தாணியைச் செம்பஞ்சின் குழம்பிற் றோய்த்துத் தாழையின் வெள்ளிய தோட்டிலே திருமுகந்தீட்டி, அவன்பாற் செலுத்தினளென்று சிலப்பதிகாரஞ் செப்புகிறது.

திருமுகம் போக்குஞ் செவ்விய ளாகி
அலத்தகக் கொழுஞ்சே றளைஇ அயலது
பித்திகைக் கொழுமுகை யாணிகைக் கொண்டு
*　　*　　*　　*
எண்ணெண் கலையும் இசைந்துடன் போகப்
பண்ணுந் திறனும் புறங்கூறு நாவில்
தளைவா யவிழ்ந்த தனிப்படு காமத்து

விணையா மழலையின் விரித்துரை யெழுதி
* * * *

எனவரூஉம் இளங்கோவடிகள் இன்னுரை காண்க. நாலடியார் என்னும் நூலில்,

குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு.

எனவரூஉஞ் செய்யுட் பொருளை உற்றுநோக்குக. குஞ்சி, கொடுந்தானைக்கோடு, மஞ்சள்—இவைகள் பெண்மக்களைக் குறிப்பன என்று எவருங் கூறுவர். நாலடியார் காலத்தில் பெண்கல்வி இயல்பாயிருந்தமை உன்னற்பாலது. இக்கருத்தைச் சிறு பஞ்சமூலமும்,

மயிர்வனப்பும் கண்கவரு மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின் வனப்பும்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

என்று வெளியிட்டிருத்தல் காண்க.

'கல்வியிற் பெரியன் கம்பன்' என்னும் பெயர் தாங்கிய கவிமன்னனும், தனது இராமாயணத்தில், நாட்டுப்படலத்தில்,

பெருந்த டங்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே.

என்று பாடியிருத்தல் காண்க. கம்பன் கோசலை நாட்

டைக் குறித்துப் பாடினும், அவன் கோசலை நாட்டை நேரிற் கண்டவனல்லன். அவன் காலத்துக் கோசலமும், இராமன் காலத்துக் கோசலமும் இடையில் எவ்வளவோ வேற்றுமையுற்றிருக்கும். கம்பன், தமிழ் நாட்டில் தான்கண்ட காட்சியைக் கோசலத்தில் அமைத்துப் பாடினானென்க.

**கம்பன் காலம்**

நாயன்மார், ஆழ்வார் காலத்திலும் பெண் கல்வி தமிழ்நாட்டில் நிலவியிருந்ததென்று தெரியவருகிறது. காரைக்கால் அம்மையாரும், ஆண்டாள் அம்மையாரும் பாடிய அருட்பாடல்கள் நம்மெதிரில் நிற்கின்றன. அவர்கள் பாக்களில் இரண்டொன்று வருமாறு :—

இடர்களை யாரேனும் எமக்கிரங் காரேனும்
படருநெறி பணியா ரேனும்—சுடருருவில்
என்பறாக் கோலத் தெரியாடும் எம்மானார்க்
கன்பறா தென்னெஞ் சவர்க்கு.

*அன்றுந் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவம் காண்கிலேன்—என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது.

—காரைக்காலம்மையார்

வெள்ளை விளிசங்கு இடங்கையில் கொண்ட
விமலன் எனக்குருக் காட்டான்
உள்ளம் புகுந்து என்னை நைவித்து
நாளும் உயிர்ப்பெய்து கூத்தாட்டுக் காணும்

---

*God is unknown and unknowable—*Herbert Spencer*

கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்
களித்திசை பாடுங் குயிலே
மெள்ள விருந்து மிழற்றி மிழற்ருதென்
வேங்க டவன் வரக்கூவாய். —ஆண்டாள்

இப்பெண்மக்கள் பாட்டிற்கிரங்கி ஆண்டவன் அருள் செய்யா தொழிந்தனனோ? ஆண்டவனுக்கு ஆண் பாட்டா யிருந்தாலென்ன? பெண் பாட்டா யிருந்தாலென்ன? அவனுக்கு வேண்டற்பாலது கல்வியின் பயனுகிய அன்பே. காரைக்காலம்மை யாரினதும், ஆண்டாள் அம்மையாரினதும் அன்பு நிலையை அளந்து கூறற்கு யான் அருகனல்லன். அத்தகை அன்புக் கல்விமணிகளைப் பெற்றது நந்தமிழ் நாடு.

பண்டைத் தமிழ் நாட்டில் பெண்ணுரிமையும், அவ்வுரிமைக் குயிரனைய கல்வியும், பிறவுமிருந்தமை யான், அந்நாளைய பெண்மக்கள் வீரத் தாய்மார்களாகவும், வேறு பல அருஞ்செயல் நிகழ்த்தும் ஆற்றல் வாய்ந்தவர்களாகவும் இருந்தார்கள். பழந்தமிழ் நாட்டுப் பெண்மக்கள் வீரச் செயல்களும் பிறவும் போற்றற் குரியன. அவைகளுள் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுகிறேன்.

**பழந் தமிழ்த் தாயர் வீரம்**

நரம்பு எழுந்து தோல் வற்றிய முதியோள் ஒருத்தியின் ஒரு புதல்வன் போர்க்கோலந் தாங்கி அமர்க்களஞ் சென்றனன். 'அவன் போரிடைப் புறமுதுகிட்டுப் பட்டான்' என்று பலர் போந்து அம்முதியோள்பால் அறைந்தனர். அது கேட்ட அன்னை, தனது முது

மையைச் சிறிதுங் கருதாது, வாள் தாங்கி, 'இவர் கூற்று மெய்யாயின், அவனுக்குப் பாலூட்டிய எனது மார்பை இவ்வாளால் அறுப்பேன்' என்று எழுந்து, போர்க்களம் புகுந்து, மைந்தனைத் தேடி, ஆண்டுக் குவிந்து கிடந்த பிணங்களை வாளால் பெயர்த்துப் பெயர்த்துப் பார்த்தனள். அங்கே தன்னொருமகன் மருமத்திடை ஊறுதாங்கி, இறந்துபட் டிருத்தலைக் கண்டு, அத்தாய் அவனை ஈன்ற பொழுதினும் பெரி துவந்தனள். இவளல்லளோ வீரத்தாய்?

நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்று பலர்கூற
மண்டமர்க் குடைந்தனன் ஆயின் உண்டஎன்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே. —புறநானூறு

மற்றுமொரு பெண்மணியின் கொழுநன் போர்க் களத்தில் மறப்போர் புரிந்து இன்னுயிர் துறந்தான். அவன் உயிர் துறந்த மறுநாள், மாற்றூர் செருப்பறை கேட்டு, அப் பெண்மகள், தன்னொரு மகனை அழைத்துத், தலைமயிர் நீவிப், போருடைபுனைந்து, வேல் கைத் தந்து, 'போர்க்களம் போய் வருக' என்று மகிழ்ச்சியோடு வழி கூட்டி அனுப்பினாள். இவளது வீரம், கொழுநன் பிரிவையும் மறக்கச் செய்தது.

கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே

மேனூ ளுற்றசெரு விற்கிவள் தன்னை
யானை எறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்றசெரு விற்கிவள் கொழுநன்
பெருநிரை விலக்கி யாண்டுப்பட் டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.

—புறநானூறு

கண்ணகி என்னும் கற்புக்கடவுளைப் பற்றிக் கேள்வியுறாத தமிழர் அரியர். அப்பெருமாட்டியார் வீரச் செயலை விளம்பவும் வேண்டுமோ! கண்ணகியும் அவளது ஆருயிர்த் தலைவன் கோவலனும் தாம் பிறந்த சோழநாடு நீத்துப், பாண்டிநாடு போந்து, ஆண்டு வாணிபஞ் செய்யவேண்டிக் கண்ணகியின் காற்சிலம்பை விற்கக் கோவலன் சென்றபோது, ஆங்குக் களவுபோன பாண்டிமா தேவியார் சிலம்பே அச்சிலம்பென்று, கோவலன்மீது பழிசுமத்தி, மன்னன் ஆணைப்படி அவனைக் கொலைஞர்கள் கொன்றார்கள். அக்கொலைச் செய்தி கேட்ட கண்ணகி, 'என்னருமை நாயகன்மீது பொல்லாத களவுப்பழி சுமத்தியா இவ்வரசு கொன்றது' என்று வீரக் கிளர்ச்சியுடன் எழுந்து, பாண்டியன் வாயில் நுழைந்து, அவன் ஆணைபெற்று, அவனருகே சென்று, தன் வரலாறு கூறித், தன் நாயகனைக் கொன்றது கொடுங்கோன்மை என்று வாதம் புரிந்தாள். 'கள்வனைக் கோறல் கடுங்கோலன்று' என்று மன்னன் எதிர்வாதம் புரிந்தான். பின்னைக் கண்ணகியின் வலி

யுறுத்தல்மீது, வேந்தன், தன் மனைவியின் மற்றொரு காற்சிலம்பினையும், கொலைக்குக் காரணமாக நின்ற கண்ணகியின் ஒரு காற்சிலம்பினையும் உடைத்துப் பார்த்ததும் அதனுள்பரலும், இதனுள் மணியும் இருத்தல் கண்டு, அவன் 'யானோ அரசன், யானே கள்வன்' என்று நடுக்குற்று, அரியாசனத்தினின்றுங் கீழே சாய்ந்து மாய்ந்தான். இத்துணை அருவினை கண்ணகி என்னும் பெண் வழி நிகழ்ந்தது. 'நாயகன் கொல்லப்பட்டான் ; நமக்கென்ன இங்கு வேலை; தந்தை தாயர்க் கறிவித்து வீடு சேரலாம்' என்னுங் கோழை எண்ணம் கண்ணகியின் உள்ளத்தில் உறவில்லை. 'நாயகனை அநியாயமாகக் கொன்றது பிழை' என்று வேந்தன் முன்னே வாது செய்து, உண்மை கிளத்தி, அவன் மனச் சான்றே அவனைக் கொல்லுமாறு செய்ததன்றோ கண்ணகியின் வீரம்! இத்தகை வீரத் தாய்மார்கள் வாழ்ந்த நாடு இத்தமிழ்நாடு. இவ்வீரத்துக்கு அடிப்படை அந்நாளில் பெண் மக்களுக்கிருந்த உரிமையே யாகும். உரிமையில்லா விடத்தில் வீர எழுச்சி ஏது?

**தமிழ்ப் பெண் மணிகளின் அறவொழுக்கம்**

இத்தகை வீரச் செயல்கள் மட்டும் பண்டைத் தமிழ்ப் பெண் மக்கள்பால் பொலிந்திருக்கவில்லை. வேறு பல அறவொழுக்கங்களும் அன்னாரிடை நிரம்பியிருந்தன. மாதவி என்னும் மாதரசியைக் கோவலன் விடுத்துப் பிரிந்த பின்னை அம்மாதரசி என் செய்தனள்? அவள் வேறு துறை நண்ணாது, துறவொழுக்கம் பூண்டு, நிறை காத்து, அறம் வளர்த்தாள். அவள் வயிற்றிற் பிறந்த மணிமேகலை எத்துணை

உலகச் சோதனைகளைக் கடந்து நின்றனள்! மணிமேகலை அறவொழுக்கத்துக்கு ஓர் எடுத்துக் காட்டாகவும் நிற்கிறாள். அவள், உயிர்கள் நலங் கருதித் தொண்டு செய்ததும், சிறைப்பட நேர்ந்தபோது அச்சிறைக் கோட்டத்தை அறக் கோட்டமாக்கியதும், சமயக் கணக்கர் உரை கேட்டதும், பிறவும் மணிமேகலை என்னுஞ் சீரிய தமிழ் நூலில் மிளிர்தல் காண்க.

நாயகன் தவறி நடப்பின், அவனை அறிவால் - அன்பால் - திருத்தும் பெருந் தகைமை அந்நாளைப் பெண் மக்களுக்கிருந்தது. சிலப்பதிகாரக் கண்ணகியல்லாத மற்றொரு கண்ணகி, வழுக்கிய தன் கணவனைப் புலவர் வாயிலாகச் செம்மைப் படுத்தியதைப் பழைய நூல்களிற் காண்க. இச் செயல்கள் என்ன காட்டுகின்றன? அக்காலப் பெண் மக்களின் கல்வி அறிவு ஒழுக்கம், இவைகட் கெல்லாங் காரணமாக நிற்கும் உரிமை முதலியவற்றைக் காட்டுகின்றன.

நாயன்மார்கள் காலத்தும் பெண்ணுரிமைக்குப் பழுது நேர்ந்ததென்று சொல்வதற்கில்லை. நாயன்மாரின் மனைவிமார் நிகழ்த்திய பெருஞ் செயல்களைப் பெரிய புராணத்திற் காண்க. அவர்கள் செயல்களை ஈண்டு விரிக்கிற் பெருகும்.

**நாயன்மார் காலம்**

அன்பிற் சிறந்த திருநீலகண்ட நாயனார் சிற்றின்பத் துறையில் எளியராயதை யுணர்ந்த அவரது இல்லக்கிழத்தியார், அவரை எவ்வழியில் திருத்தினார் என்பது கவனிக்கத்தக்கது. அமண் சமயம் புக்க தம்பியாரை மீண்டும் சைவ சமயத்தில் கொணர முயன்றவர் யாவர்? ஒரு பெண் மணி யல்லரோ?

தமிழ்நாட்டில் பெண்வழி மற்றுமோர் அருஞ் செயல் நிகழ்ந்திருக்கிறது. பெண்பெருமை பேச அந் நிகழ்ச்சியை ஈண்டுப் பொறிக்கின்றேனேயன்றிச் சமய நோக்குடன் அதை ஈண்டுப் பொறிக்கின்றேனில்லை.

பாண்டிமாநாட்டில் ஒருபோது சமணசமயம் பெருகிச் சைவசமயம் அருகிற்று. அவ்வேளையில் மன்னனும் அச்சமயநெறி நின்றான். 'அரசன் எவ் வழி அவ்வழி குடிகள்' என்றபடி, குடிமக்கள் பலரும் அமண் சமயங்கொண்டனர். சொக்கலிங்கத்தையும், மீனாட்சியையும் தொழுவோர் அரியராயினர். இந்நிலை யில் அவ்விடத்தில் மீண்டும் சைவசமயம் தழைக்க உழைத்தவர் யாவர்? ஒரு மங்கையர்க்கரசியாரே. அம் மங்கையர்க்கரசியார் எவர்? சமணக் கடவுட்டொழுத பாண்டியன் தேவியார். நாயகன், வேறு சமயம் புகுந் தும், நாடும் வேறு சமயம் புகுந்தும், தனதறிவிற்குப் பொருத்தமெனத் தோன்றிய ஒரு கொள்கையி னின்றும், நாயகன் பொருட்டாதல், நாட்டின் பொருட் டாதல் சிறிதும் பிறழாது, உறுதிகொண்டு நின்ற அளவோடு நில்லாது, திருஞானசம்பந்த சுவாமிகளைத் தனது நாட்டிற்கு வரவழைத்து, மீண்டும் நாயகனையும், நாட்டையும் தனது கொள்கை வழி, ஒரு பெண் தெய் வந் திருப்பியதெனில், அப்பெண் தெய்வத்தின் உரிமை உணர்வையும், கல்வி அறிவையும் என்னென்று புகழ்வது? மங்கையர்க்கரசியார் என்னும் ஒரு பெண் மணி அன்றில்லாதிருப்பரேல் சைவசமயம் அன்றே தமிழ்நாட்டில் இறந்துபட்டிருக்கும். ஒரு சமயத்தை

நிலைபெறுத்திய பெண்ணை நமது தமிழ்நாடு பெற்றிருந்தது.

அந்நாளில் வதிந்த ஆண் மக்களும் பெண்மணிகளின் சிறப்பைக் கூறத் தியங்குவதில்லை. பெண்ணுரிமை கடியப்பட்ட பின்னர்ப் பெண்ணின் சிறப்பை ஆண் மகன் புகழல் பாவமெனக் கருதினன் போலும்! 'பெண் அடிபடப் பிறந்தாள்' என்றன்றோ பின்னைப் போந்த ஆண் 'பெரியோர்' எழுதிவைத்தனர்! இவர்கள் மக்களா? பண்டைக்கால ஆண்மக்களோ பெண்சிறப்பை மகிழ்ச்சியோடு புகழ்ந்தார்கள். கடவுளைப் பெண்ணுண் வடிவாக்கண்டு, 'பெண்ணுடன் கூடிய கடவுள்' என்று அவரை எங்கணும் பாடிய திருஞானசம்பந்தப் பெருந்தகையாரும், பெண்ணுக்குரிய அமைதிநிலை எய்தி, அதனில் விளங்கும் அன்பு ததும்பிக் கரை புரண்டு தமிழ்ப்பாக்களாக ஓடுதற்கு நிலைக்களனாக இருந்த சேக்கிழாரும், மேற்போந்த மங்கையர்க்கரசியாரைச் செவ்விய செவ்விய தீந்தமிழ் மலரால் தூவிப் போற்றியிருக்கிறார். பெண் அடிமை என்னும் உணர்வில்லா நாளில், பெண்ணைக் காழ்ப்பின்றி ஆண்மக்கள் புகழ்ந்திருக்கிறார்கள்.

மங்கை யர்க்கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்

பொங்கழ லுருவன் பூதநா யகனல்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவாயாவது மிதுவே.—**திருஞானசம்பந்தர்**

மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழலெம்மாற் போற்ற லாமே.—**சேக்கிழார்**

இவர்கள் மங்கையர்க்கரசியாரை எவ்வாறு போற்றியிருக்கிறார்கள் என்பதை அன்பர்கள் உன்னுவார்களாக.

வேதகாலத்திலும், பழந்தமிழர் காலத்திலும் பெண்மக்கள் தங்கள் உரிமை வழிநின்று கடனாற்றினார்கள். அவ்வுரிமை இடைக்காலம்வரை தொடர்ந்து நின்றது. பின்னை நாளில், அதாவது ஸ்மிருதி காலத்தில்,

**பெண் அடிமைப் பட்ட காலம்**

பெண்மக்கள் உரிமை நமது நாட்டில் கடியப்பட்டது. வேறு சில விடங்களிலும் அவ்வுரிமை கடியப்பட்டதெனச் சரித்திரங் கூறுகிறது. பெண்ணுரிமை கடிந்து கூறும் ஸ்மிருதிகளையும், அவைகளையொட்டிப் பின்னை எழுந்த நூல்களையும் நோக்குழிப் பெண்ணுரிமையை அரிக்கும் அநியாயக் கட்டுப்பாடு

களை அவைகளிற் காணலாம். அவைகளை எழுதிய ஆண்மக்கள் நெஞ்சம் கல்லோ இரும்போ அறிகிலேன்.

முதலாவது பெண்கல்வி வாயில் அப்பாவிகள் மண்ணிட்டார்கள். பல வழியிலும் ஆண்மகனை யொத்தும், சிலவற்றில் மேம்பட்டும் நிற்கும் பெண் மகள், தன் வாழ்விற்கின்றியமையாத கல்வி பெற லாகாதென்னுங் கொடிய கட்டுப்பாட்டினுங் கொடிய தொன்றிருக்குமோ? பண்டை நாளில் வேதவேதாந் தத் துறையில் ஈடுபட்டுப் பல கலைகளையும் எழுதிய பெண்மக்களின் வழிவழி வரும் பெண் மக்களா படித் தல் கூடாது? இது பெண்மக்களை விலங்காக்கித் தங்கள் வழியில் ஆட்டவேண்டுமென்று ஆண்மக்கள் கொண்ட தீய எண்ணமன்றி வேறு என்ன? 'விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல் - கற்றாரோ டேனையவர்' என்றார் திருவள்ளுவனார்.

ஈண்டு 'மக்கள்' என்றது ஆண்மக்களையும் பெண் மக்களையும் குறிப்பதென்க. பெண்மக்களைப் பிரித்து

மக்கள்

ஆண்மக்களென்று பொருள் கொண் டது பிற்கால வழக்கு. திருவள்ளுவர் காலத்தில் ஆண்மக்களைப் போலவே பெண்மக்களும் படித்து வந்தார்கள். அதனால் அவர் 'மக்கள்' என்று பொதுப்படக் கூறினார். அறிவு விளக்கத்துக்கு இன் றியமையாத கல்வியைப் பெண் பெறுதொழிவளேல் அவள் வாழ்வு என்னும்? அவள் பிள்ளைகளை எவ்வாறு வளர்ப்பாள்? உலகப்பொறுப்பை யன்றோ அவள் தாங் குந் தாயாக இருக்கிறாள்? இந்நாளில் நமது நாட்டில் வான்மீகிகள், வியாசர்கள், நக்கீரர்கள், திருவள்ளுவர்கள்

தோன்றுமைக்குக் காரணம் என்னே? தாயைக் கல்வி இழக்கச் செய்து அவள் உரிமை கடிந்ததன்றி வேறென்னே? பயிரின் நலன் நிலத்தின் பான்மையைப் பொறுத்ததன்றே? பின்னை நாளில் பெண்மக்களுக் கேற்பட்ட கட்டுப்பாடுகள், இந்நாளில் நாட்டின் நலத்துக்கே கேடு விளைத்திருக்கின்றன.

'பழைய நூல்களிலும் பெண்கல்வி மறுப்பு உண்டு' என்று சிலர் சில உரைகளைக் காட்டுவர். அந் நூல்களை முற்றும் ஆய்ந்தால் பல இடங்களில் பெண் கல்வி பேசப்பட்டிருக்கும். ஊன்றி நோக்கினால் அம் மறுப்புரைகள் ஒட்டுப்போல் தோன்றும். பெண் படித்தலாகாதெனுங் கொடிய கட்டுப்பாடு எழுந்த நாளில், அக்கட்டுப்பாட்டை விதித்தவர்கள், தங்கள் கருத்தைப் பழைய நூல்களிலுஞ் செருகி விட்டார்கள். இந் நஞ்சு பல பழைய நூல்களிலும் இறங்கியிருக்கிறது. இடைச் செருகலில் நமது நாடு பேர் பெற்றது. இப் பொழுதும் பழைய நூல்களை அச்சிடுஞ் சிலர் இடை இடையே தங்கருத்துக்கேற்பச் சில மாறுதல் செய் கிறார். பெண் கல்வி மறுப்பு, பழைய நூல்களில் காணப்படுமேல், அதனை இடைச் செருகல் என அறிஞர் ஒதுக்குவாராக. பெண் கல்வி மறுப்பு ஸ்மிருதி காலத்திலேயே ஏற்பட்டது. வேறு பல கட்டுப் பாடுகளும் ஸ்மிருதிகளில் உண்டு. இந்நாளில் அவைகள் மாற்றப்பெறல் வேண்டும். இல்லையேல் நாட்டுக்கு நலன் இல்லை.

இடைச் செருகல்

ஸ்மிருதி காலம்

ஆண்மக்களைப் போலப் பெண்மக்கள் படித்தலாகாது என்னுங் கட்டுப்பாடு எற்றுக்கு? கல்விப் பயிற்சிக்குரிய மூளை பெண் மக்களுக்கு இல்லையோ? அவர்கட்கும் ஆண்டவன் மூளையைப் படைத்திருக்கிறான். ஆண்மக்கள் மூளையினும் பெண் மக்கள் மூளை மென்மையுடையது என்பதைச் சோதனையிற் காணலாம். நுட்பங்களை விரைவில் ஈர்க்கத்தக்க ஆற்றல் மெல்லியமூளைக்கு உண்டு. ஆண்மக்களினும் பெண்மக்கள் நுண்ணிய பொருளை விரைவில் உணரும் ஆற்றல் பெற்றிருத்தல் அறிஞரால் ஒப்பப்பட்ட உண்மை. ஆண்மக்கள் பள்ளிக்கூடங்களிலும், பெண்மக்கள் பள்ளிக்கூடங்களிலும் அடியேன் ஆசிரியனா யிருந்தபோது, இவ்வுண்மையை அநுபவத்தில் கண்டிருக்கிறேன். இத்தன்மை சில ஆண்மக்களிடத்திலும் உண்டு. அவர்கள் பெண்ணியல்பு வாய்ந்தவர்கள். இப்பெண்ணியல்பு குறித்துப் 'பெண்ணின் முதன்மை' என்னுந் தலைப்பின்கீழ் உரைத்திருக்கிறேன்.

பெண் ஆண் மூளை நிலை

இன்னும் ஒருவழி பற்றிப் பெண்ணறிவின் நுட்பம் கூறலாம். அமைதியில் அறிவு விளக்கம் உண்டு என்பது எவரும் ஒப்பத்தக்கது. நெஞ்சில் அமைதி நிலவா வேளையில் எந்நூலையும் வாசிக்க மனமெழுவதில்லை. நூலை எடுத்து வாசிப்பினும் பொருள் பதிவதில்லை. இஃது அநுபவம். இரவு உறங்கி, வைகறையில் எழும்போது, நெஞ்சில் அமைதி நிலவுகிறது. அவ்வேளையில் அறிவு, தாண்டவம் புரிகிறது. அந்நேரத்தில் அரிய

அமைதியில் அறிவு விளக்கம்

பொருளெல்லாம் எளிதில் விளங்குகின்றன. பின்னர் உலகியலில் நுழைந்ததும் அமைதி குலைகிறது. அறிவு விளக்கமும் குன்றுகிறது. நுண்ணிய பொருளைச் சிந்திக்கவும் இயல்வதில்லை. அமைதிக்கும் அறிவு விளக்கத்துக்கும் உள்ள தொடர்பு ஈண்டுக் கருதற்பாற்று.

இவ்வமைதி ஆண்மக்கட்கு அதிகமுண்டா? பெண்மக்கட்கு அதிகமுண்டா? அமைதி பெண்மக்கட்கு அதிகமிருத்தல் கண்கூடு. பெண்மை என்னுஞ் சொல்லிற்குக் 'கட்புலனாயதோர் அமைதித் தன்மை' என்றார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். கண்ணுக்குப் புலனாகாத அமைதி, பெண் வடிவாகிக் கண்ணுக்குக் காட்சியளிக்கிறது என்பது அதன் கருத்து. அமைதியே பெண்ணெனத் திரண்டு விளங்குகிறதெனில், பெண்மக்களின் அறிவு விளக்கத்தைப் பற்றி விளங்க உரைக்க வேண்டுவதில்லை. அதற்கேற்ற மூளையும் படைப்பில் அவர்கட்கு அமைந்திருக்கிறது.

**அமைதியும் பெண்ணும்**

அறிவு அமைதியில் உறைதலான், அறிவிற்குரிய கல்வியை, அமைதி குறிக்கும் ஒரு பெண் கடவுளாக நாம் போற்றுவதும் உன்னத்தக்கது. கலைமகள் நுட்பம், அமைதியுடைய பெண்மையில் அறிவு உறைதலைக் குறிப்பதாகும். கல்விக் கடவுளைப் பெண்ணெனக்கொண்ட நமது நாடு, பின்னைப் பெண் கல்வியை மறுப்பது பொருளற்ற தொன்றாகும். பின்னைநாளில் ஆண்மக்கள் வகுத்த கொடுஞ் சட்டங்கள் நாட்டையுங் குறைகூறச் செய்கின்றன.

**கலைமகள் நுட்பம்**

பெண்மக்கள் படித்தலாகாதென்பது இயற்கை நோக்கமாயின், பெண்மக்கட்குப் படிப்பு வருதல் கூடாது. பெண்மக்கள், ஆண்மக்களைப் போலவே கல்வி பயின்று, பரீட்சைகளில் தேர்வதையும், பட்டம் பெறுவதையும், நூல்கள் எழுதுவதையும், மேடைகளில் பேசுவதையும், கல்லூரிகளிலும் மற்றக் கழகங்களிலும் தலைமை வகித்து வினைகள் முடிப்பதையும், பிறவற்றையும் கண்ணாரக் காண்கிறோம். கல்வித்துறை, பெண்மக்கட்கு இயற்கையில் அரண் செய்வதன்றி முரண் செய்வதில்லை. பெண்கல்வியை மறுப்பது, இறைவன் படைப்பு நோக்கை இடர்ப்படுத்துவதாகும்.

பெண்ணறிவு

'பேதைமை என்பது மாதர்க்கு இயற்கையாய் அமைந்திருப்பது' என்று சிலர் கூறிப் பெண் கல்வியை மறுக்கிறார். அன்னார் 'பேதைமை என்பது மாதர்க்கணிகலம்' என்னும் ஔவையார் திருவாக்கையும் காட்டுகிறார். பேதைமை என்பது பல பொருள் ஒரு சொல். அஃது அறியாமை என்னும் பொருளைப் பெரிதும் வழக்கில் பெற்றிருக்கிறது. பேதைமை என்னுஞ்சொற்கு நக்கீரனார் 'கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை' என்று பொருள் விரித்திருத்தல் காண்க. இப்பொருள், அறிவின்மை மடமை முதலிய கருத்துக்களைத் தெரிவிப்பதா என்று வினவுகிறேன். பெண் கல்வி மறுக்கப் பட்ட நாள்தொட்டுப் பேதைமை, பெண்ணின்

பேதைமை விளக்கம்

அறியாமை குறிக்குஞ் சிறப்புச் சொல்லாகக் கொள்ளப் பட்டது. இப்பொருள்படப் பின்னளில் '* * * * பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே' என் பது போன்ற உரைகளும் பிறக்கலாயின. அறிவின்மைப் பொருள் அளிக்கும் பேதைமை எல்லார்க்கும் பொதுவா யிருப்பது. அஃது ஒரு பாலார்க்கே உரித்து என்று சொல்வது தவறு.

'பேதைமை' என்றோர் அதிகாரம் திருக்குறளில் இருக்கிறது. அது பெண்ணுலகை மட்டுமா குறித்து நிற்கிறது? சில சொற்கள் காலத்துக்கேற்ற பொருள் பெறுவதுண்டு. அச்சொற்களுள் 'பேதைமை' என் பதும் ஒன்று. 'பேதைமை' என்னுஞ் சொற்குப் பழந் தமிழர் கொண்ட பொருளை உன்னுக.

இச்சீரிய பொருளுடைய பேதைமை மாதர்க்கணி கலனுயிருத்தலை ஒளவையார் மொழிந்தார். இஃதென்ன குற்றம்? இனிப் பேதைமை என்னுஞ் சொல்லைப் பழம் பொருள்பட ஆட்சியிற் கொணருமாறு புலவர் களை வேண்டிக் கொள்கிறேன். பெண் கல்வியை மறுத்துக்கூறும் பழமொழிகளும், பிற உரைகளும் ஆட்சியற்று ஒழிவனவாக.

பின்னை நாளில் ஆண்மக்கள், பெண்மக்களின் கல்வியுரிமையை மட்டுமா கெடுத்தார்கள்? வேறு பல பிறப்புரிமைகளையும் அவர்கள் பறித்திருக்கிறார்கள். அந் நாளில் பெண்மக்களுக்கு விதிக்கப்பெற்ற கட்டுப்பாடு களை எண்ண எண்ண உள்ளம் உருகுகிறது; கண்ணீர்

பெருகுகிறது. அக்கால அறிஞர்களின் வன்கண் இருந்தவா றென்னே! என்னே!

**பெண்களுக்கு விதிக்கப் பெற்ற கட்டுப்பாடுகள்**

பெண் உற்ற வயதடைந்து பகுத்தறிவு பெறுமுன்னம் ஒருவனை மணத்தல், கைம்மை எய்தினால் மொட்டையடித்து அவளை மானபங்கஞ் செய்தல், அவளைப் பசியால் மெலிவித்தல், பல பெண்கள் ஒருவனை மணத்தல், பெண் விபசாரத்துக்குத் தண்டனை விதித்தல், ஆடவன் எச்சிலைத் தின்னுமாறு மகளிரை வலியுறுத்தல், இன்னோரன்ன பிற கட்டுப்பாடுகள் பெண்ணுலகின் உயிர் நாடியைப் போக்கிவிட்டன. இக்கட்டுப்பாடுகள் ஆணுலகிற்கு உண்டோ? இல்லை; இல்லை.

மனைவியை ஆண்மகன் இழந்தால், அவன் எவ்வளவு வயதான கிழவனாயிருப்பினும், ஒரு கட்டழகியை மணந்து இனிது வாழலாம்! இளம் பெண்ணொருத்தி கணவனை இழந்தாலோ, அவள் மொட்டையடித்து, உண்டி கெடுத்து, உலகைத் துறத்தல் வேண்டும்! என்ன அநியாயம்! விதி என்றால் இருபாலார்க்கு மன்றோ இருத்தல் வேண்டும்? ஒருவன் பல பெண்களை மணந்துகொள்ளும் உரிமை பெற்றிருக்கிறான்! அநியாயம்! அநியாயம்! ஒருத்தி ஒருவனோடு வாழ்தலே அறவொழுக்கம். அவ்வாறே ஒருவனும் ஒருத்தியுடன் வாழ்தல் வேண்டும். 'ஒருவன் பல பெண்களை மணக்கலாம்' என்னும் விதி பெண்ணுலகை இழிவுபடுத்துவதாகும். பெண் தவறி நடந்தால் தண்டனை! ஆண் தவறி நடந்தால் தண்டனையில்லை! இஃதென்ன நீதி! தண்டனை இருபாலார்க்கும் விதிப்பது நீதியாகும்.

பிறப்பில் ஆணாகப் பிறந்தால் எல்லாஞ் செய்ய லாம்! பெண்ணாகப் பிறந்தவர்கட்கு மட்டும் விதி கள் - கட்டுப்பாடுகள் - தண்டனைகள்! ஆண்டவனே! கொடுமை பொறுக்க முடியவில்லை. உன்னை நோக்கி முறையிடுகிறேன்.

அடியேன், பெண்மக்கள் கூடா ஒழுக்கத்தைப் போற்றிக் கூறுவதாகவாதல், துணை நிற்பதாகவாதல் எவருங் கருதலாகாது. பெண் தவறுதலுக்கு விதிக்கப் பெற்றுள்ள தண்டனைகள், ஏன் ஆண் தவறுதலுக்கும் விதிக்கப்படவில்லை என்பதே எனது கேள்வி. பெண் ணுலகிற்குச் சிறுமையுண்டு என்பதை ஈண்டு எடுத்துக் காட்டவேண்டும் என்னும் அவாவால் இவ்வுரைகள் பகரலானேன். ஒரு பாதியாயுள்ள பெண்ணின் சிறுமை, மற்றொரு பாதியாயுள்ள ஆணையுந்தாக்கி, முடிவில் வாழ்வையும் நாட்டையும் குலைக்குமென்பதை ஆணுல கம் இனியாதல் உணர்ந்து நடப்பதாக.

'உலகை ஈன்று வளர்க்குந் தாய் பெண்ணாகலின், அவளது ஒழுக்கங் காக்கவேண்டிச் சில கட்டுப்பாடுகள் கோலப்பட்டனவே யன்றிப், பெண்ணைச் சிறுமைப் படுத்தல் வேண்டும் என்னும் நோக்கோடு கட்டுப் பாடுகள் கோலப்படவில்லை' என்று சில அறிஞர் திறம்பட வாதிக்கிறார். இது போலிவாதமன்றி நியாய வாதமன்று. பெண் ஒழுக்கம் காத்தல் வேண்டும் என்பதை ஒரு முறைக்குப் பன்முறை யான் வலியுறுத்துகிறேன். அவ்வொழுக்கம் ஆணுலகிற்கும் வேண் டற்பாலதென்று அவ்வளவில் வலியுறுத்துகிறேன்.

ஒழுக்கம் இரு பாலார்க்கும்

ஆணுலகில் தூய்மை இல்லை எனில், பெண்ணுலகில் தூய்மை எங்ஙனம் ஏற்படும்? தீயொழுக்கமுடைய ஒருவன், நல்லொழுக்கமுடைய ஒருத்தியின் உடல் நலத்தைக் கெடுத்து, அவள்வழித் தோன்றும் பிள்ளையையும் நோய்வாய்ப் படுத்துகிருனல்லனே? ஆதலால், ஒழுக்கத் தூய்மை இருபாலார்க்கும் வேண்டற்பாலது. ஒழுக்கத் தவறுதலுக்குத் தண்டனை விதிக்கப்படின், இருபாலார்க்கும் விதிக்கப்படல் வேண்டும்.

ஒருத்திக்கு ஒருவன்

ஆண், தன்விருப்பப்படி திரிதற்கு இத்துணை அடக்கு முறைகளைப் பெண்ணிற்கு விதித்தனனே என்னவோ தெரியவில்லை. ஆண்மக்கள், தாங்கள் களியாட்டில் வரம்புமீறி இறங்குதற் பொருட்டுப் பெண்மக்கள் உரிமை தடிந்து, அவர்களைப் பொம்மைகளாக்கிக் கொண்டார்கள் போலும்! ஒவ்வோர் ஆண்மகனும் ஒவ்வொரு பெண் மகளோடு வாழும் அற ஒழுக்கத்தில் நிற்பனேல், உலகிடை வரைவின்மகளிர் கூட்டத்துக்குத் தோற்றமேது? ஆண்மகன் பல மகளிரை மணத்தலும், பரத்தையருடன் ஆடலும் வரம்புகடந்த நடத்தைகளாகும். ஒரு பெண்ணை வீட்டிற் சிறைப்படுத்தி, மற்றப் பெண்களோடு கூடி வாழும் உரிமை ஆண்மகனுக்கு எங்கிருந்து வந்தது? ஆண்மகன் கொடுங்கோன்மையால் பெண்ணுரிமை தடிந்து தன் விருப்பப்படி ஆட்சி புரிகிருன்.

ஒருவன் ஒருத்தியுடனும், ஒருத்தி ஒருவனுடனும் வாழ்தல் இயற்கை. இது குறித்துப் பின்னே விரித்துக் கூறுவேன். இருபாலாரிடத்தும் தீயொழுக்கம்

கூடாதென்பது எனது உள்ளக்கிடக்கை. கட்டுப்பாடு எனில், அஃது இருசாரார்க்கும் இருத்தல் வேண்டும். ஒருவர் உரிமையை மற்றொருவர் கட்டுப்படுத்தல் கூடாதென்பதை மீண்டும் வலியுறுத்தி மேற்செல்கிறேன்.

**திருவள்ளுவர் உள்ளம்**

இல்லறத்தை வலியுறுத்திச் சென்ற திருவள்ளுவனாரும், பெண்ணுலகிற்கு மட்டும் கற்பை வலியுறுத்தியுள்ளாரென்றும், ஆணுலகிற்கு அதை வலியுறுத்தாதொழிந்தா ரென்றும் சிலர் கூற யான் கேட்டிருக்கிறேன். 'வாழ்க்கைத்துணை' என்னும் அதிகாரத்துக்கு முன்னர், 'இல்வாழ்க்கை' என்றோர் அதிகாரம் அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்வதிகாரத்தைக் கூர்ந்து நோக்கின், 'ஆண்மகனும் நிறை காத்து வாழ்தல்வேண்டும்' என்னும் அறக்கொள்கை நனி விளங்கும். அவ்வக்கால நிலைமைக் கேற்றவாறு, உரை கண்டு போகும் உரை ஆசிரியர் கூற்றை முதற் பொருளாகக் கோடலாகாது. ஸ்மிருதிகளை ஆராய்ந்து, அவைகளில் மூழ்கிக் கிடப்பவர்கள், திருக்குறளுக்கு உரை காணப் புகுந்தால், அவர்களது ஸ்மிருதி மனதுக்கு, ஸ்மிருதிப் பொருளே புலனாகும். அம்மனங் கொண்டு வரையப் பெற்ற உரைகளை முற்றுங்கோடல் தவறு.

திருவள்ளுவர் 'இல்வாழ்க்கை'யில் ஆண்மக்களையும் நிறை காக்குமாறு பணித்துள்ளார். அக்கருத் தொளிருஞ் சில குறள்கள் வருமாறு:—

> **பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின்** வாழ்க்கை
> வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

இக்குறள்களின் பொருள்களை, உரைகட்கு அடிமை யாகாது, நடுநிலைக் கண் கொண்டு நோக்குமாறு அன்பர்களை வேண்டுகிறேன். இடைக்கால உரைகளைக் கொண்டு திருவள்ளுவனாரையும் சிலர் குறை கூறுகிறார்.

சில விடங்களில் பெண்ணுக்கு ஆன்மா இல்லை என்றும், பெண் ஆணிடத்திருந்து படைக்கப் பட்டாள் என்றும், பெண்பிறவிக்கு வீடுபேறில்லை என்றும் நூல்களில் எழுதப்பட்டிருக்கின்றன. சில விடங்களில் பெண்மக்களுக்கு என்றுஞ் சிறைக்கூடு அமைக்கப்பட்டிருக்கிறது. அச்சிறை இருளில் போதிய காற்றின்றி, ஒளியின்றி, அன்புக் கொடிகள் வாடி வதங்குகின்றன. அவர்கள் அப்புறம் இப்புறம் பார்த்தல்கூடாது! பேசுதல் கூடாது! என்ன கொடுமை! கண்ணையும் வாயையும் கடவுள் அவர்கட்கு எற்றுக்கோ ஈந்தான்? இயற்கை வாழ்வு எல்லார்க்கும் உரியது. அவ்வாழ்வினின்றும் பெண்ணைப் பிரிக்கவும் ஆண்மக்கள் மனம் ஒருப்பட்ட

**செயற்கைக் கட்டுகள்**

தன்றோ? இன்னோரன்ன கட்டுப்பாடுகளுள்ள இடங்களில் பெண்ணுலகிற்குப் பேரிழிவு நேர்ந்திருக்கிறது.

அவ்விடங்களில் பெண்மகள், நாய் பேயாகக் கருதப் படுகிறாள்; மாயையாகக் கருதப்படுகிறாள். ஞானத்துக்கும், வீடுபேற்றிற்கும் பெண் இடையூறாக இருக்கிறாளாம். மூவாசையுள் பெண்ணும் ஓர் ஆசைப் பொருளாம். இன்ப அன்புத் தெய்வமாக அடியேன் போற்றும் பெண்ணிற்குற்றுள்ள இழிவை, இன்னும் எழுத்தால் எழுதக் கையோடவில்லை. அந்நாளில் பெண்ணுலகிற் கேற்பட்ட துன்பம், 'பெண்ணாய்ப் பிறப்பதினும் மண்ணாய்ப் பிறக்கலாம்' என்னும் பழமொழியை எழுவித்ததெனில், பெண்ணுலகத் துன்பத்தை என்னென்று கூறுவது? பெண் ஆசைப் பொருளல்லள் என்பதையும், அவளை அங்ஙனங் கருதி வெறுத்தலும் துறத்தலும் அன்புக் கடவுளைக் காணும் வழிகளல்ல என்பதையும் வேறோரிடத்தில் விரித்து விளம்புவன்.

**உரிமையும் கடமையும்**

சில விடங்களில் உரிமையையும், கடமையையும் ஒன்றுபடுத்தி மக்கள் இடர்ப்படுகிறார்கள். உரிமை வேறு; கடமை வேறு. பெண் மெல்லியலாள்; ஆண் வல்லியலான். மென்மை வன்மைக் கேற்ப இருபாலார்க்குமுரிய கடமைகள் வேறுபடலாம். உரிமையில் கட்டுப்பாடிருத்தல் கூடாதென்பதொன்றே ஈண்டுக் கருதற்பாற்று. கடமை வேறுபாடுகளைக் குறிப்பிட்டுப் பெண்ணுரிமையில் கைவைப்பது கொடுமை.

**பெண்ணுரிமைக் கேட்டால் விளையுங் கேடுகள்**

உரிமை எல்லார்க்கும் பொதுவானது. வானத்தில் மேகம் தவழ்வது போலவும், கடலில் அலை எழுவது போலவும், பறவை அழகிய சிறகை வீசிப் பறப்பது போலவும் பெண் தனது உள்ளத்தெழும் விருப்பவழி நடக்கும் உரிமையுடையவளாதல் வேண்டும். அவ்வுரிமையைச் சிறைப்படுத்தல் பெரும் பாவம். பெண், அடிமை வாழ்வு நடாத்த நேரின், அவள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளையும் அடிமையுணர்வுடன் பிறக்கும். பெண் தாயாகலின், அவள் உரிமையைத் தடிதல், அவள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளின் உரிமையைத் தடிவதாகும். பெண்ணுரிமை பிடுங்கப்பட்ட நாடும் உரிமையிழந்த நாடாதல் இயல்பு. இதற்குச் சான்று நமது நாடு நவிலும். பெண்ணுரிமை பறிப்பதன் பயன் இஃதாகும். பெண்ணுரிமை குலைப்பதைப் போன்ற அறியாமை பிறிதொன்றில்லை. பெண்ணுரிமை கெடுத்தலாவது பின் சந்ததியின் உயிர் நிலையைக் கெடுப்பதாகும். எக்காரணம் பற்றியும் பெண்ணுரிமைக்குக் கேடு சூழ்தல் கூடாது; கூடாது.

**உரிமைப் பெயரால் கொடுமை**

மேல்நாட்டில் சின்னாளாகப் பெண்ணுலகில் ஓர் இயக்கம் தோன்றி இருக்கிறது. பெண்மக்கள், 'உரிமை' என்னும் பெயரால் சில கொடுமைகள் நிகழ்த்தி வருகிறார்கள். அவர்கள் ஆண்மக்களைப் போல எல்லா வழியிலும் வாழ்வுபெறக் கிளர்ச்சி செய்கிறார்கள். அவர்கள் தங்கள் நோக்கத்தை நிறைவேற்

றிக் கொள்ள ஆண் மக்கள் மீது கல்லெறிதல், அவர் களைக் கருவியால் தாக்கல், வழி மறித்தல் முதலிய வன்செயல்கள் புரிகிறார்கள். இச்செயல்கள் உரிமைப் போராட்டமென்று சொல்லப்படுகின்றன. இச்செயல் கள் நமது நாட்டில் ஆண் மக்கள் பெண்மக்களை அடக் கக் கொண்ட மூடச் செயல்களைக் கடுத்து நிற்பன. பெண்ணுரிமை என்பது, ஆண்மக்களோடு பகைமை கொண்டு, அவர்கள் பதவிகளைப் பெற மூர்க்க நெறி யில் நின்று, அவர்களைத் தாக்குவதன்று. மேல்நாட் டுப் பெண்மக்கள், உரிமை என்னும் பெயரால் வாழ் வையே குலைத்துக் கொள்கிறார்கள்.

தற்கால மேல்நாட்டு நாகரிகத்தால் விழுங்கப் பெற்றுள்ள கீழ்நாட்டுப் பெண்மக்களும், மேல் நாட்டுப் பெண்மக்கள் அடிச்சுவட்டைப்பற்றி நடக்க முயல் கிறார்கள். அது தவறு.

**பெண் பிறவி நோக்கம்**

பெண் பிறவியின் நோக்கம், ஆண் பிறவி தாங் கினோரிடத்தில் போர்புரிந்து, அவரைத் துன்புறுத்த வேண்டுமென்பதன்று. பிறரைத் துன் புறுத்தல்வேண்டுமென்னும்எண்ணமே பெண்ணீர்மையை அழிப்பதாகும். ஒரு பாதியாகிய பெண், மற்றொரு பாதியுடன் கூடி, இன்ப வாழ்வை உலகில் பெருக்கி, உலகை வளர்க்கும் நெறி யில் நிற்றல் வேண்டும். பெண் மக்கள், ஆண் மக்கட்கு அடிமைப் பட்டு வாழவேண்டுவதில்லை; அவர்களுடன் உரிமைகொண்டு வாழலாம்.

பெண்ணுரிமை என்பது ஆணுடன் போர் புரிவ தன்று. ஆணுடன் வாழ்ந்து அன்பை வளர்ப்பது

பெண்ணின் உரிமைக் கடன். சமயம் நேருமேல், அன்பு வழியில் ஆண் பதவிகளையும் பெண்மக்கள் ஏற்று உலகை நடாத்தலாம். ஐரோப்பாவில் நடை பெற்ற பெரும் போர், ஆண்மக்கள் கடமைகள் பல வற்றைப் பெண்மக்கள் ஏற்று நிகழ்த்துமாறு செய்தது. உரிமை என்று ஆணுலகோடு போர்புரிவதால், பெண் ணுக்குரிய அமைதி கெட்டு, உலகு அழியும் என்பது பெரிதுங் கவனிக்கப்படல் வேண்டும்.

மேல்நாட்டில் தற்கால நாகரிகத்தால், அன்பு - பொறுமை - இன்பம் - முதலியன அறவே தொலைந்து, வன்கண் - பொறாமை-துன்பம்-முதலியன பெருகுகின் றன. தற்கால நாகரிகம் தொலையவேண்டுமேல், பெண் தெய்வங்கள், தங்கள் தாய்மைத் தொண்டைச் செவ் வனே ஆற்றிவருவார்களாக.

'பெண்ணுக்கு உரிமை வழங்கினால், பெண்மக்கள் ஆணுலகிற்கு இடர்விளைத்து, வாழ்வையே குலைத்துக் கொள்வார்களாகலின், அவர்களை அடக்கி ஆளுமாறு நிறுவப்பெற்ற கட்டுப்பாடுகள் போற்றற்குரியன' என்று சிலர் சொல்வதுண்டு. இஃது அறியாமை. பேண், ஆணை அடக்கப்புகுவதும் தவறு; ஆண்,பெண்ணை அடக்கி ஆள்வதும் தவறு. இருவரும் ஒத்து நடத்தலே இன்பம்.

**நாட்டுப் பழைய வாழ்வு**

நமது நாட்டுப் பழைய வாழ்வை இதற்கு இலக் கியமாகக் கொள்ளலாம். பெண்மை யும் ஆண்மையும் இறையிடத்திலும், இயற்கையிடத்திலும் ஒத்து விளங் கலைக் கண்டு, ஓர் உயிர் ஈருடலென அன்பு நிறைந்த

இன்பவாழ்வை நமது நாட்டார் நடாத்தினர். உயர்வு, தாழ்வு, போராட்டம் முதலிய எண்ணங்களின்றி, ஒருயிர் ஈருடல் எனப் பெண் ஆணுடன் ஒன்றி, வாழ்வு நடாத்தி, உலகை வளர்ப்பாளாக. இது பெண்ணின் பெருமை.

பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடு மீசன்
மண்ணுக்குள்ளே சில மூடர்—நல்ல
மாத ரறிவைக் கெடுத்தார்
கண்க ளிரண்டினி லொன்றைக்—குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ ?
பெண்க ளறிவை வளர்த்தால்—வையம்
பேதைமை யற்றிடுங் காணீர்.

—பாரதியார்



# ச. பெண் வளர்ப்பு

[பெண்ணும் உலகமும்-நற்பிள்ளைப் பேறும் தாய் தந்தையர் பொறுப்பும் - பெண் உலகோம்புந் தாய் - பிள்ளைகளை வளர்த்தல் பெருந் தொண்டு-நல்லிணக்கமும் வேற்றுமை நினைவும் (பெண் ஆண் நினைவு - உயிர்நிலைச் சிறப்பு - பிஞ்சிற் பழுத்தல் - கீழ்மக்கள் சேர்க்கை கூடாது - தாய் தந்தையர் கடமை - அவர்கள் மடமை) - கல்வியும் கற்பும் (கல்வி எது ? - அறிவும் ஒழுக்கமும் - தாய்மைக்கு அஞ்சுதல் - இயற்கைக் கல்வி - போலி நாவல்களின் புன்மை - உடற்கூற்றுக் கல்வி - பெண் ஒரு பல்கலைக்கழகம் - சமயக்கல்வி - கற்பு - கற்பிழக்கும் பெண் - எண்ணமும் கற்பும் - தீ நட்பு களைதல் - கூட்டத்தில் நடமாடல் - சோதனைப் பருவம்) - உடலோம்பல் (அகத்தூய்மை புறத் தூய்மை - உறக்கம் நேரம் இடம் முதலியன - துயிலெழல் - காலைக் கடன் - மலச் சிக்கல் - அதனுல் விளையுங் கேடுகள் - அவை போக்கும் வழி - பயிற்சி - ஆட்டங்கள் - இயந்திர அரக்கன் - செல்வப் பெண்கள் - நீராடல் - உணவு - விரதம் - உண்டி சுருங்கல் - பொருந்தா உணவு - பொருந்தாப் பானங்கள் - நகரப் பெண்மக்கள் - உடை - நூற்றல் - நகை - நகையால் கேடு - தலை மயிர்) - அழகு - அழகோவியம் - பேய்ச் சோதனை.]

**பெண்ணைப் போற்றி வளர்க்க.** —பழமொழி

**இன்சொல் விளைநிலனுய் ஈதலே வித்தாக**
**வன்சொற் களைகட்டி வாய்மை எருவட்டி**
**அன்புநீர்ப் பாய்ச்சி அறக்கதிர் ஈன்வோர்**
**பைங்கூழ் சிறுகாலைச் செய்.** —அறநெறிச்சாரம்

உயிர்களின் தோற்றத்துக்கும் ஆக்கத்துக்கும் மூலமா யிருப்பவள் பெண். அப்பெண்ணின் வளர்

குன்றுமேல் உலக வளனுங்குன்றும். பெண்ணின் வளன் பெரிதும் அவளது இளமை வளர்ப்பையே ஒட்டி நிற்கிறது. பெண் தீயவழியில் வளர்ந்து வருவளேல், அவள் வழித்தோன்றும் உலகமும் தீயதாகும்.

**பெண்ணும் உலகமும்**

பெண் நல்வழியில் வளர்ந்து வருவளேல், அவள் வழித்தோன்றும் உலகமும் நல்லதாகும். உலகை நல்லதாக்க வேண்டுமென்பதே இயற்கையின் நோக்கம். அந்நோக்கத்துக்குத் துணை புரிய வேண்டுவது பெற்றோர்கள் கடன்.

**நற்பிள்ளைப் பேறும் தாய் தந்தையர் பொறுப்பும்**

முதலாவது நற்பிள்ளைப் பேற்றிற்குத் தாய் தந்தையரின் உடல் வளனும், நல்லியல்பும் இன்றியமையாதன. அவர், நல்லுடலும், நல்லியல்பும் பெறுந் துறையில் இறங்கி உழைப்பது நலம். நில விதைகளுக்கேற்ற வண்ணமன்றோ பயிரின் இயல்பிருக்கும்? தாய் தந்தையர் உடல் நலனும் இயல்பும், பிள்ளையின் வளர்ப்பிற்கு நீரும் ஒளியும் போன்றன. தாய் தந்தையர் நன்னடை, பிள்ளைகட்குப் பெருந்துணை செய்யும். நற்பிள்ளைப் பேற்றிற்கும், வளர்ப்பிற்கும் தாய் தந்தையர் பெரும் பொறுப்பாளர். அப்பொறுப் புணர்ந்து நடக்குந் தாய் தந்தையர் வாழ்க.

பொதுவாக உலகில் பலவிடங்களிலும், சிறப்பாக நமது நாட்டிலும் பிறந்த குழவி பெண்ணாயிருப்பின், 'அந்தோ! பெண்ணு' என்று தாய் தந்தையரும், உற்றார் உறவினரும் இடிகேட்ட நாகம்போலக் கலக்க

முறுகின்றார். இஃதென்ன அறியாமை! பின் தாயாகி உலகோம்பக் கடவுள் அளித்த பெண் பிறவியைக் கண்டா கலக்கமுறுவது? 'தாயாகும் பேறுடைய பெண்குழவி நம்வயிற்றிற் பிறந்ததே' என்று இன்பக் கடலி லன்றோ திளைத்தல் வேண்டும்? பெண் ணாகப் பிறத்தல் எற்றுக்கு? பின் தாயாகி, உயிர்களை ஈன்று, உலகை வளர்ப்பதற் கன்றோ? பெண் பிறவி இல்லையேல் கடவுள் படைப்பு நோக்கம் எங்ஙனம் நிறைவேறும்? கடவுள் படைப்பு நோக்க நிறைவேற் றத்துக்குப் பிறந்த பெண்ணைக் கண்டு கலக்க முறு வது அறியாமை. பெற்றோர், தம் வயிற்றிற் பிறந்த பெண் குழவியைப் பார்க்குந்தோறும் பார்க்குந்தோ றும் 'உலகோம்புந்தாய் நம்பால் பிறந்திருக்கிறாள்' என்று அடங்காக் களிபேருவகை கொள்வாராக. அவ் வுவகை ஊற்றினின்றும் பொங்கி எழும் அன்பு நீரும், அருட்கண்ணொளியும் கான்முளையை இனிது வளர்த்து வரும்.

பெண் உலகோம்புந் தாய்

தாய் தந்தையர்கள் பிள்ளைகளைப் பெறுவது பெருமையன்று. அவைகளை நல்வழி யில் வளர்ப்பதேபெருமை. பிள்ளைகளை ஒழுங்கு முறையில் வளர்க்குந் தொண் டினுஞ் சிறந்த தொண்டு பிறிதொன் றில்லை. பின்னால காக்க உயிர்களைப் பண்படுத்தி விடுவது சிறந்த தெய்வத் தொண்டாகும்.

பிள்ளைகளை வளர்த்தல் பெருந் தொண்டு

பிள்ளைகளை நல்வழியில் வளர்க்க முனையாத பெற்றோர்கள், பின்னை உலகத்துக்குக் கேடு சூழ்ந்

வர்களாகிறார்கள் ; எத்துணையோ பாவங்கட்கு
விதை விட்டவர்களாகிறார்கள். பிள்ளைகளை-சிறப்பாகப்
பெண் பிள்ளைகளை - வளர்ப்பதில் தாய் தந்தையர்
பெருங் கவலை செலுத்தல் வேண்டும். ஒரு பெண்
ணின் வாழ்வு அவளோடு நிற்பதில்லை. அஃது அவள்
வழித்தோன்றும் உலகையுந் தொடர்ந்து நிற்கிறது.
‘தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்’ என்பது பழ
மொழி. பெண்ணின் தாய்மைக்குரிய வித்து, அவளது
இளமை வளர்ப்பாகலின், அவளது இளமை, நல்வழி
யில் அரும்புமாறு பெற்றோர்கள் உழைத்தல் வேண்
டும். ஆகவே, தாய் தந்தையர்கள், பெண்ணின் தாய்
மை விழுப்பமுணர்ந்து, பெண்ணை வளர்ப்பார்களாக.

### நல்லிணக்கமும் வேற்றுமை நினைவும்

பெற்றோர்கள் பெண்ணை வளர்க்கும் முறை
களைப்பற்றி ஈண்டு விரிக்கிற் பெருகும். அம்முறைகளை
விரித்துக் கூறுவது இந்நூலின் நோக்கமுமன்று.
எடுத்த பொருளுக் கேற்பச் சில குறிப்புகளை மட்டும்
பொறிக்கப் புகுகிறேன்.

குழந்தைகளின் மனமொழி மெய்களில் எக்கார
ணம் பற்றியும் தீமை படியாதவாறு தாய்தந்தையர்
காத்துவரல் வேண்டும். தாய்தந்தையர்கள் தங்கள் நட
த்தையால் குழந்தைகளின் நலனைக் காத்துவருவதோடு
மற்றவர்கள் கூட்டுறவாலும், அவைகட்குக் கேடு நிக
ழாதவாறு காத்துவரல்வேண்டும். குழந்தைகள் உள்
ளத்தில் ஆண்பெண் என்னும் நினைவே
தோன்றலாகாது. அவ் வெண்ணந்
தோன்று முறையில் தாய் தந்தையர்
நடத்தல் கூடாது. மற்றவர்கள் வாயிலாகவும் அவ்

பெண் ஆண் நினைவு

வெண்ணம் குழந்தைகள் மனதில் நுழையாதவாறு காக்கவேண்டுவது தாய்தந்தையர் கடமை.

பெண் ஆண் உணர்வை உற்றவயதில் இயற்கை தோற்றுவிக்கும். அக்காலத்துக்கு முன்னர், இளமையில் அவ்வெண்ணம் பதிவது, பின்னை வாழ்வின் நலத்துக்குரிய அறிவு - மனம்-உடல் - எல்லாவற்றையும் அழிப்பதாகும். அறிவு விளக்கம் மன அமைதியைப் பொறுத்து நிற்கிறது. மன அமைதி உடல் நலத்தைப் பொறுத்து நிற்கிறது. உடல் நலம் இனத்தை அறிவிக்கும் உறுப்பின் அகப்புற வளத்தைப் பொறுத்து நிற்கிறது. அவ்வுறுப்புக்குப் பழுது நேரின், வாழ்வே குலைந்து போகும். உடலில் எவ்வுறுப்புக்கு ஊறுநேரினும் சிகிச்சை செய்தல் கூடும்.

**சிறந்த உறுப்பு**

எவ்வுறுப்பிழந்தேனும் வாழ்தல் கூடும். அந்தோ! குறிக்கு ஊறு நேரிலோ எவ்வித சிகிச்சையுமில்லை. சிகிச்சை செய்து கொள்ளினும் ஊறு நீங்காது. அவ்வூறுகொண்டு வாழ்தலும் முடியாது.

எல்லா உறுப்புக்களினும் சிறந்த உறுப்பு, பால் பிரிக்கும் உறுப்பாகும். எல்லா உறுப்புக்கட்கும் அவ்

**உயிர் நிலை**

வுறுப்பு உயிர் போன்றது; வேர் போன்றது. இந்நுட்பம் உணர்ந்தே நந்தமிழ் மக்கள் அவ்வுறுப்பிற்கு 'உயிர்நிலை' என்னும் பெயர் சூட்டினார்கள். ஆன்றோர் வழிபற்றி அவ்வுறுப்பை 'உயிர்நிலை' என்றே யானும் இனிக் குறித்து வருவன்.

இப்பொழுது மேல்நாட்டு அறிஞர்கள் உயிர்நிலை
யின் நுட்பங்களைச் செவ்வனே ஆராய்ந்து, அதன்
இயல்புகளை எவரும் உணரும் முறையில் அறிவுறுத்தி
யிருக்கிறார்கள். அவ்வியல்களை ஒவ்வொரு பெண்மக
ளும், ஆண்மகனும் உணரல் வேண்டுமென்பது எனது
வேட்கை. உயிர் நிலையின் நுட்பங்களையுணராது, நெறி
யல்லா நெறிச் சென்று, எத்துணையோ உயிர்கள் பாழ்
படுகின்றன.

உயிர் நிலையாக உள்ள உறுப்பு எக்காரணத்தால்
மெலிவுறினும், நரப்புக் கட்டுக்களெல்லாம் மெலிந்து
குலைந்து போகும். நரப்புக்கட்டுக் குலையப்பெற்ற ஒருத்
தியோ ஒருவனோ உடல் நலமிழந்து, மன அமைதி
குன்றி, அறிவு விளக்கங் கெட்டுத், தோல்பொம்மை
போலாகி, உலகிற்குப் பெருஞ் சுமையாதல் திண்ணம்.

இளமையிலேயே பெண் ஆண் நினைவு அடிக்கடி
ஊட்டக் கூடிய வளர்ப்பு, பின்னைப் பல கேடுகட்கு
இடமுண்டாக்கும். பெண், இளமையிலேயே அவ்
வெண்ணம் கொள்ளல் பெருந்தவறு. அவ்வெண்ணம்

**எண்ணமும் உயிர் நிலையும்**

அடிக்கடி இன்ப உறுப்பின்மீது கருத்
தைச் செலுத்தி, அகாலத்தில் அதை
மலர்விக்கும். எண்ணத்துக்கும், உயிர்
நிலை உணர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.
எண்ணமில்லையேல் அவ்வுணர்ச்சியும் இல்லை என்க.

பெண்ணினத்தின் படைப்பிற்குரிய உள்ளுறுப்பு,
ஏறக்குறைய பத்தாண்டு வரை எடுப்பின்றி உறக்கத்தி
லேயே கிடக்கும். பத்தாண்டிற்கு மேல் அது சிறிது
முகிழ்த்தெழுகிறது. அதற்குள் தீய எண்ணத்தால்

அதன் எழுச்சியை ஒடுக்கி, அதன் சத்தைக் கெடுத்தல் எவ்வளவு பாவம்! அதன் செழுமை குன்றின், அதன் வாயிலாகத் தசைகட்குச் செல்லவேண்டிய மூலச்சத்தின் சார ஓட்டங் குறைந்துபோகும். அச்சத்தே பெண்ணின் அழகிற்கு உணவு போன்றது. அதன் வலிமையைப் போக்கும் இளம்பெண், பின்னைப் பெண்மைக்கும் தாய்மைக்கும் இன்றியமையாத கட்டழகைக் குலைத்துக் கொள்கிறாள். அவள் பெண்ணலனெலாம் இழக்கிறாள் என்று சுருங்கச் சொல்லலாம்.

பிஞ்சிற் பழுத்தல்

ஏறக்குறைய பத்தாண்டில் சிறிது முகிழ்த்துத் தலைகாட்டும் இன்ப உறுப்பு, தன்னை முற்றும் பண்படுத்தற்குரிய தசைக்கட்டுகளைக் கட்டிக் கொள்வதில் ஊக்கம் காட்டி நிற்கும். தசைக்கட்டும், பிறவும் பின்னைய தாய்மைக்கு வேண்டற்பாலன. அத்தசையையும், பிறவற்றையும் கட்ட இயற்கை அடிகோலும் வேளையில், இளமைப்பெண் தீய எண்ணத்தாலோ சேர்க்கையாலோ இன்ப உறுப்பின் இளங்கொழுமையைப் போக்கப்புகல் அறியாமை; அறியாமை. இக்கேடு உறாதவாறு, குழந்தைப் பருவத்திலேயே பெண் ஆண் வேற்றுமை உள்ளத்தில் நுழையா வழியில், குழந்தையைப் பெற்றோர் வளர்க்க வேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ?

பின்னைப் பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயதில் இன்ப உறுப்பு மலர்ச்சியடைந்து தனது கடனாற்றத் துவங்குகிறது. அப்பொழுது கருக்குழி செவ்விய நிலை எய்தற்குவேண்டப்படும் முயற்சியில் அவ்வுறுப்புத்

தலைப்பட்டு அதை ஒழுங்கு படுத்தும். அந்நிலையிலும், கன்னியின் மனம் உறுதியினின்றும் பிறழ்தலாகாது. பிறழுமேல் பிஞ்சிற்பழுத்த கதையாக முடியும். திரு மணம் வரை, பெண்ணிற்குத் தீக்கிளர்ச்சி எண்ணம் உறுதலே கூடாது. தீய எண்ணத்துக்கு இரையாகாத முறையில் பெண்ணைப் பெற்றோர் வளர்ப்பதில் பெருங் கவலை செலுத்தல் வேண்டும்.

குழந்தைப் பருவத்தில், பெண் ஆண் வேற்றுமை உணர்வு தோன்றாத வழியில், குழந்தையை வளர்க்க வேண்டுமென்று தாய் தந்தையர்கட்கு அடிக்கடி நினை வூட்டுகிறேன். 'இஃதென்ன சிறிய காரியம்' என்று பெற்றோர்கள் கவலை ஈனமாக இருத்தல் கூடாது.

**கீழ்மக்கள் சேர்க்கை கூடாது**

கீழ்மக்கள் காற்றுக்கூட குழந்தை மீது வீசுதலாகாது. கீழ்மக்கள் வாயி னின்றும் வரும் 'வேதமொழிகளை' ஈண்டு நினைவூட்ட வேண்டுவதில்லை. அவர்கள் பேச்சில் நூற்றுக்கு எண்பது சொற்கள் பெண்ணினச் சொற்களாக ஒழுகும். அச்சொல் லொழுக்கின்றி அவர்களால் கருத்தை வெளியிடல் முடி யாது. அவர்களை அறியாமலும் 'அந்நறுமலர்கள்' அவர் கள் வாயினின்றும் உதிர்ந்துவிடும். என் செய்வார்கள் பாவம்! சிறிதும் நாணமின்றி, அக்கம் பக்கத்துள்ள குழந்தைகளையும் கன்னிகளையும் கவனியாது, கீழ்மக் கள், இன உறுப்பைப்பற்றிப் பேசுவதும் குறிப்பதும் இயல்பாகி விட்டன. இக்காட்சி காணுங் குழந்தை களும் விளையாட்டாகக் கீழ்மக்கள் உரைகளைப் பகர் கின்றன; பிறவுஞ் செய்கின்றன. விளையாட்டு, பின்னை

வினையாக முடிகிறது. ஆதலால், குழந்தைகளைக் கீழ் மக்கள் கூட்டத்தினின்றும் பெற்றோர்கள் பிரித்தே தீரல்வேண்டும்.

தாய் தந்தையர்கள் பழக்கத்தாலோ, வேறு எதனாலோ சில குழந்தைகள் கரங்களால் அடிக்கடி உயிர் நிலையைத் தொடுகின்றன. இவ்வழக்கம் மிகக்கொடியது. நாளடைவில் அவ்விடத்தில் ஒருவித உணர்ச்சி தோன்றும். அவ்வுணர்ச்சி, இன்ப உறுப்பின் நோக்கை வேறு வழியில் திருப்பி, உடலில் சத்தைப் பரப்பும் அதன் வினையைக் கெடுக்கும். அதனால் வாழ்வு இளமையிலேயே வெம்பி விழுந்துபோகும். குழந்தை அறியாது, அத்தீச்செயல் புரியும்போது, அதன் கருத்தை வேறு வழியில் திருப்பத் தாய் தந்தையர் முயலல் வேண்டும். குழந்தை, தாய் தந்தையர் வழியில் சார்ந்து நிற்றலால், அஃது அவர் சொல்வழியே நிற்கும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. ஈன்ற அன்னையார் குழந்தையை நோக்கி 'அங்கே போகாதே; பூதம் பிடித்துக்கொள்ளும்' என்று இரண்டொரு முறை சொற்றால், குழந்தை குறிப்பிட்ட இடத்திற்குப் போக அஞ்சுவது இயல்பு. பிற குழந்தைகள் அங்கே செல்லும்போதும், 'போகாதேயுங்கள். பூதம் பிடித்துக்கொள்ளும். அம்மா சொன்னார்கள்' என்று அக்குழந்தை தன் நண்பர்களையுந் தடுக்கும். இது குழந்தைகள் இயல்பு. எத்துணைத் தாய்மார்கள் 'பேய் வருகிறது; பூதம் வருகிறது; சோறுண்' என்று அச்சமூட்டிக் குழந்தைக்குச் சோறூட்டுகிறார்கள். வெறுக்கத்தக்க அச்சமூட்டி,

தாய் தந்தையர் கடமை

அவ்வச்சவழிக் குழந்தையை நிறுத்தியாளும் தாய், குழந்தை, தெரியாது பின் வாழ்வைக் கெடுத்துக் கொள்ளத்தக்க தீச்செயல் நிகழ்த்தும்போதும், ஒரு முறை இருமுறை தடுத்தால், குழந்தை மீண்டும் அத் தீச்செயலில் தலைப்படுமோ? தலைப்படாது.

சில தாய் தந்தையர்களின் மூடச் செயல்களாலும் குழந்தைகள் கெடுகின்றன. அவைகளை ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை. இரண்டொன்று குறிப்பிடுகிறேன். சில தாய் தந்தையர்கள் தங்கள் அன்பைக் குழந்தைகளின் உயிர்நிலையில் காட்ட விரும்புகிறார்கள். இதனாலும் குழந்தைகள் அடிக்கடி தங்கள் உயிர்நிலையைத் தொடும் பயிற்சி பெறுவதுண்டு. சில மூடப் பெற்றோர்கள், சிறு அறையில் விளக்கேற்றி வைத்துக்கொண்டு, குழந்தைகளையும் உடன் கிளத்திக்கொண்டு, ஆடல் பாடல்களைப் புரிகிறார்கள். சிறிது உணர்வுபெற்ற குழந்தைகள், தாய் தந்தையர் நாடகத்தை நடிக்கத் தொடங்குகின்றன. அதைப் பார்த்து மகிழும் கயவர்களும் இருக்கிறார்கள். குழந்தைகளின் அத்தீய ஆடல்களை மற்றவர்களோடு பேசிக் களிப்புறுஞ் சிற்றினங்களும் உலகில் வாழ்கின்றன. என்ன இழிவு? இப்பாவிகளா குழந்தைகளை நல்வழியில் வளர்ப்பவர்கள்? இவர்களல்லவோ குழந்தைகளைக் கொலைசெய்யும் யமன்கள்? குழைந்தைகளுடன் தாய் தந்தையர்கள் ஒரே படுக்கையிற் படுத்தலே கூடாது. படுத்து ஆடல் பாடல் புரிவது என்ன அறிவுடைமை?

தாய் தந்தையர்கள் மடமை

உயிர்நிலையைத் தொடும் பயிற்சியில் குழந்தை இறங்கும் போதே பெற்றோர் தடுத்தல் வேண்டும். அப்பயிற்சியினின்றும் குழந்தை விலகுமட்டும் பெற்றோர் பெருங்கவலை செலுத்தல் வேண்டும். குழந்தை சிறிது உணர்வு பெற்றதாயின் 'அம்மா அங்ஙனஞ் செய்யாதே. கண்ணைத் தொட்டு அழுத்திக் கொண்டே யிருந்தால், கண்ணின் நிலை என்னாகும்? கண் கெட்டாலும் உலகில் வாழலாம். உயிர்நிலை கெட்டால் மரணம் நேரும்' என்று பெற்றோர் அறிவுகொளுத்தி, எவ்வழியிலாதல் அத்தீப் பயிற்சியைத் தொலைக்க முயல்வாராக.

எவ்வழியிலும் குழந்தைகள் தங்கள் உள்ளத்தில் பெண் ஆண் என்னும் நினைவே தோன்றாவண்ணம் வளர்வதும், அவைகளைப் பெற்றோர்கள் அந்நெறியில் வளர்ப்பதும் பின்னைய பேரின்ப வாழ்விற்கு அடிகோலுவதாகும். நல்வளர்ப்புக்குக் கேடு விளைக்கவல்ல சிற்றினங்களைக் கண்ணால் காணவும் குழந்தைகளை விடலாகாது. அவர்கள் சேர்க்கையே கூடாது. குழந்தையை நல்வழியில் வளர்க்காது, பின்னை-விதி-கர்மம்-ஊழ் - பேச்சுப் பேசுவது அறிவுடைமையாகாது.

> தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
> தீயார்சொற் கேட்பது வுந்தீதே—தீயார்
> குணங்க ளுரைப்பதுவுந் தீதே அவரோ
> டிணங்கி யிருப்பதுவுந் தீது.

எனவரூஉம் ஔவையார் அறிவுரையை நோக்குக.

## கல்வியும் கற்பும்

பெண்மக்கள் வாழ்விற்குக் கல்வி இன்றியமையாதது. பெண் கல்வியைப்பற்றிப் 'பெண்ணுரிமை'த் தலைப்பிலும் கூறியிருக்கிறேன். பெண்மக்கள் கல்வியை இளமையிற் கற்றல் வேண்டும். இளமை கல்விக்குரியது. 'இளமையிற்கல்' என்றார் ஔவையார். இளமைக் கல்வி, பின்னை வாழ்விற்குப் பெருந்துணை செய்யும். பெண்ணின் இளமை, கல்வித்துறையிற் கழிவது நலம்.

பல்லாயிரம் நூல்களை மட்டும் வாசிப்பது கல்வியாகாது. பாடங்களை நெட்டுருச்செய்து பரீட்சையில் தேறிப் பட்டம் பெறுவது மட்டும் கல்வி யாகாது.

**கல்வி எது?**

கல்வி என்பது, வாழ்வில் இரண்டறக் கலந்து, வாழ்வுக்குரிய பயனை அளிப்பது. கல்வியின் பயன் என்னை? அறிவையும் ஒழுக்கத்தையும் வாழ்விற்கு வழங்குவது கல்வியின் பயன். கல்வி - அறிவு - ஒழுக்கம்-என்னும் அடுக்கு வழக்கை நோக்குக.

கல்வியாற் பெறும் அறிவு விளக்கம் மட்டும் வாழ்விற்குப் போதாது. அறிவோடு ஒழுக்கமிருத்தல்

**அறிவும் ஒழுக்கமும்**

வேண்டும். ஒழுக்கமில்லா வாழ்வு எத்தகைய தாயினும் அதனால் வாழ்வு நோக்கம் நிறைவேறாது. ஒழுக்கத்துக்குரிய கல்வியே வேண்டற்பாலது. தாய்மைக்குரிய பெண்ணிற்கு ஒழுக்கம் உயிர் போன்றது. ஒழுக்கமே பெண்ணாக வளர்தல் வேண்டும். ஒழுக்கமிலாப் பெண் பெண்ணல்லள். அவள் பேய். ஆத

லால், பெண்ணைத் தெய்வ மாக்கும் ஒழுக்கத்தை அளிக்கவல்ல கல்வியை அவள் இளமையில் பெற்றே தீரல் வேண்டும்.

இப்பொழுது பெண் மக்கள் பல விடங்களில் ஆண்மக்களைப்போலவே கல்வி பயில்கிறார்கள்; உயர் கல்வியும் பெறுகிறார்கள். இக்கல்வி பெறுவோருட் சிலர், தாய்மைநிலை பெறுதற்கஞ்சி, வாளா காலங்கழிக்கிறார். இவர்களைக் கற்றவர்களென்று யான் கூறேன்.

**தாய்மைப் பேற்றிற்கு அஞ்சுதல்தவறு**

பெண்வாழ்வின் நோக்கம் என்னை? தாய்மை நிலை பெறுதலன்றோ? இறைவன் படைப்பு நோக்கமும் அஃதே; இயற்கையின் நோக்கமும் அஃதே. இயற்கைக்கு மாறுபட்டுப் பெண்ணை வாழச் செய்யுங் கல்வி கல்வியாகுங் கொல்! இயற்கையோ டியைந்த வாழ்வை அளிக்கக்கூடிய கல்வியே பெண்ணிற்கு வேண்டற்பாலது. ஆணுக்கும் அத்தகைக் கல்வியே வேண்டற்பாலது. இளமையிலேயே இயற்கை நுட்பம் உணர்த்தக்கூடிய கல்வியைப் பெண் மக்கட்குப் பெற்றோர் ஊட்டுவது நலம்.

பெற்றோர் தமது பெண்ணிற்கு இளமையிலேயே இயற்கையைக் காட்டிக் காட்டி, ஆடல் பாடல் அறிவுறுத்தல் வேண்டும். மரம், செடி, கொடி, மலை, நிலா,

**இயற்கைக் கல்வி**

ஞாயிறு முதலிய இயற்கைப் பொருள் நினைவு தோன்றும் வழியில், பெண்ணை ஆடுமாறும் பாடுமாறும், அவர் வளர்த்தல்வேண்டும். நமது நாட்டில் பழைய தாய்மார்கள் பனைப்பாட்டு, மலைப்பாட்டு, நிலாப்பாட்டு, வானப்

பாட்டு, பறவைப் பாட்டு முதலிய இயற்கைப் பாடல்களைப் பாடிப் பாடிக் குழந்தைகளைத் தாலாட்டுவது வழக்கம். இயற்கையைப் பற்றிய பல கதைகள் பாட்டிமார்கள் சொல்வதுமுண்டு. திருடன் கதை, கொலைக்கதை, குடியன்கதை, பேய்க்கதை, அச்சமூட்டுங்கதை முதலிய ஆபாசக் கதைகளைக் குழந்தைகட்கு எவருஞ் சொல்லுதலேகூடாது. மரஞ் செடிகள் அழகாக வளர்ந்து, காய் கனிகள் தருவதையும், காற்று வீசுவதையும், ஞாயிறு ஒளி உமிழ்வதையும் காட்டி, 'இம்மரஞ்செடியும், காற்றும், ஞாயிறும் ஏதாவது பயன் கருதி இக்கடன்களாற்றுகின்றனவா' என்று பெற்றோர் அடிக்கடி இளம் பெண்ணுடன் பேசிப் பேசிப் பரோபகார சிந்தையை அவள் உள்ளத்தில் பெருக்கல் வேண்டும்.

**கடவுள் நினைவு**

பின் தாயாகும் பெண்ணுள்ளத்தில் பயன் கருதாது தொண்டாற்றும் அன்புக்கடவுளைப் பதியச் செய்யப், பெற்றோர்கள் முயலல் வேண்டும். பெற்றோர் குழந்தையைத் தமது பிள்ளை என்று கருதுவதைப் பார்க்கினும், அதைத் தாய்மைக்குரிய ஒன்று என்று வளர்ப்பது சிறப்பு.

**போலி நாவல்களின் புன்மை**

இளம்பெண்கள், தீய எண்ணங்களை ஊட்டவல்ல களிக்கதைகளை - போலி நாவல்களை - மறக்கதைகளை - இன்னோரன்னபிற கதைகளைக் கேட்டலுமாகாது; அக்கதை நூல்களைக் கையால் தொடுதலுமாகாது. இதில் பெற்றோர் பெருங்கவலை செலுத்தல் வேண்டும். போலி நாவல்கள் பெண்ணுலகையே

கெடுத்து வருகின்றன. 'தங்கள் வாழ்வை நஞ்செ்சன எரிப்பது போலி நாவல்' என்று பெண்மணிகள் கருது வார்களாக. போலி நாவல்களையும் போலி நாடகங்களை யும் படித்து, நல்வாழ்வையும் இழந்து, பின்னை வருந்தி வருந்தி மாண்ட சில பெண்மக்கள் கதைகள் எனக்குத் தெரியும். அருமைக் குழந்தைகளே! போலி நாவல்களைப் படியாதேயுங்கள்; தொடாதேயுங்கள்; உங்கள் வாழ்வு குலைந்து போகும்; நோய்வாய்ப்பட்டு வருந்தி வருந்திச் சாவீர்கள்; கடவுள் உங்களை ஏன் உலகிற்கு அனுப்பினர்? பிஞ்சில் பழுத்து உதிரவா? நோய் வாய்ப்பட்டு வருந்தவா? அண்ணன் தம்பி உற்ருர் உறவினர் ஊரார் 'சீ சீ' என்று பேசிப் பேசி உங்களை ஒதுக்கவா? அன்று; அன்று. 'நீங்கள் தாயாதல் வேண்டும்; நல்வாழ்வு பெறல்வேண்டும்; பேரின்பம் பெறல் வேண்டும்' என்பது ஆண்டவன் நோக்கம். அப்பெருவாழ்விற்கெனப் பிறந்த நீங்கள், சிறுநாவல் பித்துக்கொண்டு வாழ்வையா குலைத்துக் கொள்வது? போலி நாவல்களைப் படியாதேயுங்கள்; படியாதேயுங்கள். போலி நாவல்கள் இளம்பெண்கள் கண்களிற் படாதவாறு பெற்ருேரும் ஆசிரியன்மாரும் காப்பாராக.

உடற்கூற்றுக் கல்வி

பெண் மக்கட்கு உடற்கூறு நன்ருகத் தெரிதல் வேண்டும். உடற்கூற்று நூல்கள் செவ்வனே பெண் மக்கட்குப் போதிக்கப்படல் வேண்டும். உடற்கூறு தெரியாது எத்துணையோ பெண்கள் பலவழியிலும் கெடுகிருர்கள். உடல் இயல்பு நன்ருகத் தெரிந்தால், அதற்கேற்ற வண்ணம் வாழ்வு நடாத்தல் அவர்களால்

இயலும், கருக்குழியைப் பற்றியும், அதன் சினைகளாக உள்ள சிறு சிறு உறுப்புக்களைப் பற்றியும், அவைகளின் தொடர் உறுப்புக்களைப்பற்றியும் பெண்மக்கள் போதிய உணர்வு பெறுதல் அவசியம். சில பெண்மக்கள், உறுப்புக்களின் நிலையுணராது, வழிதுறை தெரியாது உழன்று, இன்பமிழந்து நிற்பதோடு, வேறு பல நோய்களையும் தேடிப் பாழ்படுகிறார்கள். உடற்கூறு உணர்ந்து கொள்வதோடு, அகத்திணை (உள்ளொழுக்கு-மனோதத்துவம்) தெரிந்து கொள்ள, அதைப் பற்றிய நூல்களைப் பெண்மக்கள் பயிலுதல் நலம். மக்கள் இயல்பை அளந்தறியும் ஆற்றல் பெண்மக்கட்கு இருத்தல் அவசியம்; அவசியம்.

**பலகலை யறிவு**

இல்லறம் நடாத்தவும், பிள்ளைகளைத் தக்க வழியில் வளர்க்கவும், சமயம் நேர்ந்துழி வேறு பல துறைகளில் இறங்கிக் கடனாற்றவும் பெண்மக்கள் பலதிறக் கலைஞானம் பெறுதல் இன்றியமையாமை. எல்லாப் பெண்மக்கட்கும் பதார்த்த குணம், வைத்தியம், கணிதம், அரசியல் முதலிய கலைகளில் பொது அறிவு இருத்தல் வேண்டும். பெண் எனில், அவள் ஒரு பல்கலைக் கழகமாய் இருத்தல் வேண்டும். இல்லையேல் அவள் தாயாகிப் பிள்ளைகளை எப்படி வளர்த்தல் முடியும்?

**சமயக் கல்வி**

எல்லாக் கல்வித் துறைகட்கும் மேலாகப் பெண்மணி கற்கத்தக்க ஒரு சிறப்புக் கல்வியுளது. அதாவது சமயக்கல்வி. மேற்கூறிய கல்வித் துறைகளெல்லாம் உடல்போன்றன. சமயக் கல்வி உயிர்போன்றது. அவ்வுயிர்க்

கல்வி மிக மிக இன்றியமையாதது. இயல்பாகப் பெண்மக்களிடத்துக் கடவுட்டன்மையுண்டு. இது குறித்து முன்னருங் கூறியிருக்கிறேன். அவ்வியல்பு அரும்ப, அதைத் தூண்டுதற்குச் சமயக் கல்வி வேண்டற்பாலது.

பெண்மக்கள், உலகியற் கல்வியையும், கடவுளியற் கல்வியையும் முறையே பெறுவார்களாயின், அவர்கள் உடல்நிலை, ஒழுக்கநிலை, அன்புநிலை முதலியவற்றை நன்கு உணர்ந்து நற்றாய்மார்களாகக் கடவுள் தொண்டு செய்து இன்பம் நுகர்வார்கள். ஆதலால், பெண்மக்களை இளமையிலேயே கல்வித்துறைகளில் வல்லவர்களாக்கப் பெற்றோர்கள் பெருங் கவலை கொண்டு உழைப்பார்களாக.

பெண்மக்கள் கேட்டிற்குக் காரணம் கல்வி இன்மையே. கல்வி பயின்று, உடலியல், உயிரியல், ஒழுக்கவியல், அன்பியல் முதலியவற்றைப் பெண்மக்கள் செவ்வனே உணர்வரேல், அவர்கள் கனவிலும் மறந்தும் தீயொழுக்கத்தை நினையார்கள். நிறைக்கேட்டால் இன்னின்ன துன்பங்கள் உண்டு என்று இளமையில் செவ்வனே உணரப்பெறும் பெண்மணி, ஒருபோதும் ஒழுக்கந் தவறி வாழ நினையாள். தாஞ்சாக மருந்துண்போர் ஒருவரும் இல்லை.

**கற்பு**

பெண்ணிற்குள்ள பெருமை யாண்டுளது? 'கற்பில்' என்று எவருங் கூறுவர்.

> பெண்ணிற் பெருந்தக்க யாவுள **கற்பென்னுந்**
> **திண்மை** யுண்டாகப் பெறின்.

என்றார் திருவள்ளுவனார். பெண்ணிற் பெருந்தகை

யது ஒன்றில்லை. எப்பொழுது? அவள் கற்பென்னும் திண்மையுண்டாகப் பெறுவளேல், அப்பொழுது அவள் பெருந்தகைமைக்கு உடையவ ளாகிறாள். பெண்ணிற்குள்ள பெருமை எல்லாம் கற்பில் அடங்கி யிருத்தல் ஊன்றிக் கருதற்பாலது. கற்புடையாளே பெண். அஃதில்லாள் பெண்ணல்லள்.

**கற்பிழக்கும் பெண்**

கற்பிழக்கும் பெண், முதலாவது தனது உயிர் நிலை உறுப்புக்களாய இன்பக் கருவிகளின் உணர்ச்சியை நாளடைவில் இழக்கிறாள். அவ்வுணர்ச்சி குன்றக் குன்ற உடலில் இரத்த ஓட்டம் குன்றும். இரத்த ஓட்டம் குறையக் குறைய உடல் கட்டுக் குலையும். அக்கட்டுக் குலைவால் அழகெனும் தெய்வம் மறையும். பின்னை எந்நிலை உறும்? உயிர் நிலையில் பற்பல வெந் நோய்கள் தோன்றும். அவை உடலெலாம் பரவும். அப்பாழும் பெண் படுந் துயரத்துக்கு ஓர் அளவும் உண்டோ? அவள் படுந் துயர் நரகத் துயரன்றோ? அவள் நிலையை உன்ன உன்ன உள்ளம் உருகுகிறது. இந்நோய்வாய்ப்படும் பெண் தாயாகும் பேரின்பத்தை இழக்கிறாள். அவ்வின்பம் இல்லையேனும் உடலின்பமேனும் உண்டோ? இரவும் பகலும் நோயின்பம் தவிர வேறின்பம் அவளுக்கு ஏது? இவ்வளவு கேட்டிற்கும் காரணம் என்னை? கற்பிழந்தமை யன்றோ? கற்பிழந்தவள் அழகை இழக்கிறாள்; பெண்மையை இழக்கிறாள்; தூய்மையை இழக்கிறாள்; எல்லாவற்றையும் இழக்கிறாள்.

**எண்ணமும் கற்பும்**

கற்புக்காத்தல் ஒருத்தியின் மனோ நிலையைப் பொறுத்து நிற்பது. மனதில் எழுந் தீய எண்ணமே கற்பைக் குலைப்பது ; நல்லெண்ணமோ பெண்ணை வளர்ப்பது. நல்லெண்ணம் அறிவைப் பொறுத்து நிற்பது. அறிவு எண்ணங்கட் கேற்ற வண்ணம் கரு உறுப்புக்களின் தன்மை நிலவும். அந்நிலைக்கேற்ற உடல் அமையும். தூய அறிவும், தூய எண்ணமும் நிறை காத்து, நல்லுடல் அமைத்து, அழகெனுங் கடவுளைப் பெண்ணின் பால் எழுந்தருளச் செய்யும். அழகமையாப் பெண், பெண்ணல்லள். அழகென்பது வெண்தோல், மஞ்சள்தோல், சிவப்புத்தோலைப் பற்றி நிற்பதன்று. அது, தூய மனதால் அமையும் கற்புறுதியி னின்றும் எழும் இரத்த ஓட்டத்தானும், தசைக்கட்டானும் தோற்றமுறும் அருவத்தன்மையது. சுருங்கக்கூறின் 'பெண்ணின் நலன் அவள் கற்பிலிருக்கிறது' என்று கூறலாம். இடையிடையே இந்நூற்கண் இதைப்பற்றிக் குறித்துச் செல்வன்.

கற்பிழத்தலால் விளையுங் கேட்டை உணராத பெண்ணல்லளோ தன்னொழுக்கத்தைக் கெடுத்துக் கொள்பவள்? கற்பிழத்தலால் இத்துணைக் கேடுகள் உண்டு என்பதைப் பெண் இளமையிலேயே கல்வியறிவால் உணர்ந்திருப்பளேல், அவள் ஒழுக்கந் தவற உன்னுவளோ? கல்வியில்லாக் குறையால் பெண்ணுலகில் பல கேடுகள் விளைகின்றன. ஆதலால், பல கலைகளைப் பெண் இளமையில் பயிலல் வேண்டும்.

'கல்வி பயின்ற பெண்கள் நிறை தவறி நிற்பதில்லையோ' என்று சிலர் வினவலாம். ஏட்டைப் படித்தவரெல்லாரும் கல்வி கற்றவராகார்; நூல்களெல்லாம் நூல்கள் அல்ல; பெண்களைக் கெடுக்கும் நூல்களும் உண்டு. தீயர்கள் செயல்கள் எத்துணையோ நாட்டில் நிலவுகின்றன. அவர்களால் எழுதப்பட்ட நூல்களும் நாட்டில் உலவுகின்றன. அந்நூல்களைப் படிப்பவர்கள் எங்ஙனங் கற்றவர்களாவார்கள்?

சில நன்னூல்களைப் படித்தவர்களும் கெடுதல் உண்டு. நல்லுணவுடன் தீயவுணவு கலந்துண்டால் தீயவுணவின் பயனே மிகுந்து நிற்கும். நன்னூல் பயிற்சியோடு வேறு தீப்பயிற்சி பெறின் கேடு விளைதல் இயல்பு. நட்பு, கூட்டுறவு, சுற்றம் முதலியவற்றையும் வாழ்வு பொறுத்து நிற்கிறது. நன்னூல் பயிற்சியோடு இவைகளும் நல்லனவாக அமைதல் வேண்டும். தீய நூல்களை விலக்குவது போலத் தீ நட்பு முதலியவற்றையும் விலக்குதல் வேண்டும். தீ நட்பால் வாழ்வு கெடுமென்பதை விளக்க வேண்டுவதில்லை.

பெண்மக்கள், நண்பரை - அதினும் ஆண் நண்பரைத் - தெரிந்தெடுப்பதில் பெருங் கவலை செலுத்தல் வேண்டும். பெண்கள் ஆடவரோடு நட்புக் கொள்ளல் ஆகாது என்று யான் கூறமாட்டேன். அவர்கள், எவரோடும் நட்புக் கொள்ளலாம். அந்நட்பு தீ நட்பாயிருத்தல் கூடாதென்பதை மட்டும் வலியுறுத்துகிறேன். எவ்வாடவனுதல் பேசுகையில் காமக்கிளர்ச்சி எழுப்பக்கூடிய உரைபகர்வானேல், தன்னைக் கொல்லவந்த யமன் என்று அவனைக் கருதி,

**தீநட்பு களைதல்**

அவனது நட்பை உடனே பெண்மகள் களைதல் வேண்டும். ஏட்டுக் கல்வியினும் நட்பாராய்ந்து தெரியப் பயிலுங் கல்வி மிகச் சிறந்தது. அதுவும் கல்வி இனத்திற் சேர்ந்ததாகும்.

**கூட்டத்தில் நடமாடல்**

பெண்மக்கள் இனவேற்றுமை கருதாது ஆண்மக்களுடன் விளையாடலாம். வயதேற வயதேறத் தனித்து ஒரு தனி ஆடவனோடு போதலும் வருதலும் ஆடலும் பாடலும் கூடா. எதைச் செய்தாலும் பெண்மக்களும் ஆண்மக்களும் கூட்டங் கூட்டமாகக் கூடிச் செய்யின், வேறு எண்ணத்துக்கு இடம் நேராது.

**சோதனைப் பருவம்**

வயதடைந்த நாள் தொட்டுத் திருமணம் வரை, பெண்ணுக்குரிய பருவம் மிக நெருக்கடியானது; சோதனைக்கும் உரியது. அக்காலத்தில் தன்னைக் காத்துக் கொள்ளும் பெண்ணே பின்னைப் பெருந் தேவியாவாள். நற்கல்வியும், நன்னட்பும், நல்வளர்ப்பும் பின்னைத் தாய்மைக்குரிய எல்லா நலன்களையும் தரும். உற்ற வயதில் பெண்மக்கள் உள்ளத்தில் 'பின் தாயாதற்கு ஆக்கந்தேட வேண்டிய பருவம் இது. இதனை நல்வழியில் ஓம்புதல் வேண்டும்' என்னும் எண்ணமே உறுத்து நிற்றல் வேண்டும். அதற்குரிய கல்வி, நட்பு முதலியவற்றை அவர்கள் இளமையில் பெறவேண்டுவது அவசியம்.

## உடலோம்பல்

கல்வி அறிவு ஒழுக்கம் முதலிய எல்லாவற்றிற்கும் நிலைக்களன் உடல் என்று சொல்ல வேண்டுவ

தில்லை. உடலை ஓம்பாது, வெறுங்கல்வி அறிவை மட்டும் பெற முயல்வதால் என்ன பயன் விளையும்? கல்வி அறிவைப் பயன்படுத்த நல்லுடல் தேவை. ஆதலால் உடலோம்புவதிலும் பெண்மக்கள் கருத்துச் செலுத்து வார்களாக.

உடலோம்பு முறைகள் இன்ன இன்ன என்று இந்நூலில் விரித்துக் கூறவேண்டுவதில்லை. அவை கட்டெனத் தனி நூல்கள் பல இருக்கின்றன. ஈண்டுச் சிற்சிலவற்றைச் சுருங்கச் சொல்கிறேன்.

தூய்மை—அகத்தூய்மை, புறத்தூய்மை என இரண்டு வகைப்படும். அகத்தில் நல்ல எண்ணங்களே தோன்றுமாறு மக்கள் பழகல்வேண்டும். தீய எண்ணங்கள் அகத்திலுறுமேல், அவை, உடல் வளனைக்கெடுத்து, வாழ்வையே சிதைக்கும்.

**அகத்தூய்மை**

உடலோம்பலுக்கு முதல் முதல் வேண்டற்பாலது அகத்தூய்மை. அகத்தூய்மை, உடல் நலத்துக்குப் பெரிய அமிழ்தம். அகத்தூய்மைக்கு உரியது வாய்மை. 'அகத்தூய்மை வாய்மையால் காணப் படும்' என்றும், 'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற—செய்யாமை செய்யாமை நன்று' என்றும் திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்திருத்தல் காண்க. வாய்மையுள்ள இடத்தில் வேறு பல அறத்துறைகள் உறைவது இயல்பு. பிற மேலே போந்துள்ள 'நல்லிணக்கம்' என்னுந் தலைப்பின்கீழ்க் காண்க.

அகத்தூய்மையைப் போலப் புறத்தூய்மையையும் மக்கள் காத்தல்வேண்டும். புறத்தூய்மையில்லாத பெண்

மகளின் அகமும் தூய்மையாயிராது. 'அகமே புறம்' 'மனம்போல வாழ்வு' எனவரூஉம் மூதுரைகளை உற்று நோக்குக. புறத்

புறத்தூய்மை

தூய்மையில் உடல் தூய்மையையும் வீட்டுத் தூய்மையையும் சேர்த்துக்கொள்க. உடல் தூய்மை காவாது விடின், அஃது உடலில் அழுக்குச் சேர்த்துப் பலதிற நோய்களை உண்டுபண்ணும். வீடுகளிலும் அழுக்குகள் அடர்ந்திருந்தால், அவைகளினின்றும் பலதிற நச்சுப்பூச்சுகள் தோன்றி, நோய்களைப் பிறப்பிக்கும்.

புறத்தூய்மைக்குப் பல சுகாதார முறைகள் வேண்டற்பாலன. பெண்மக்கட்கு இளமையிலேயே சுகாதாரக் கல்வி பயிற்றல் வேண்டும். சுகாதார அறிவு பெறாத பெண்ணால், அவள் வாழ்விற்கும், அவளைத் தொடர்ந்தோர் வாழ்

சுகாதாரம்

விற்கும் பல கேடுகள் விளையும். சுகாதார முறைகளை ஆண்மக்கள் மட்டும் கவனிப்பதால் பயன் விளையாது. அவைகள் பெண்மக்களாலும் கவனிக்கப் பெறல் வேண்டும்.

சுகாதார உணர்ச்சியில்லாத பெண்ணுடன் எப்படி வாழ்வது? அவள் சமைக்கும் உணவை எப்படி உண்பது? அவள் சமைக்கும் உணவு நஞ்சன்றோ? பெண் தாயாகலான், அவள் வாழ்வு சுகாதார வாழ்வாயிருத்தல் அவசியம். அவள் அவ்வழி நிற்பாளாயின், அவள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளும் அவ்வழியில் நிற்கப் பயிலும். ஆன்மா சார்ந்ததன் வண்ணமாவதன்றோ?

'புறந்தூய்மை நீரால் அமையும்' என்றார் திருவள்ளுவனார். நீராடலை ஈண்டுக் குறிப்பதற்கு முன்னர்,

வேறு சில கடன் முறைகளைக் குறிப்பது நலமெனத் தோன்றுகிறது.

உறக்கம் : ஆண்மக்களினும் பெண்மக்கட்கு உறக்கம் சிறிது அதிகந்தேவை. நமது நாட்டில் இதற்கு மாறுபட்ட வழக்கம் உண்டு. பெண்மக்கள் உறக்கத்துக்கு ஆண்மக்கள் பலவழியிலும் கேடு சூழ்கிறார்கள். பெண்ணின் உடல் இயல்பையும், அமைதித் தன்மையையும் உணரும் ஆண்மகன், பெண்மகள் உறக்கத்துக்கு இடையூறு செய்யான். பெண்மணிகள் நன்றாக உறங்கி எழுவதே நலம். உறக்கம் வாழ்விற்கு வேண்டற்பாலது. உறக்கமாவது மன ஓய்வேயாகும். ஒருவரது உறக்கத்தைக்கொண்டு, அவரது உடல் நிலையை அளந்துகொள்ளலாம். உறக்கத்தின் போது பற்பல எண்ணங்களும், பற்பல கனவுகளும் தோன்றுதல் கூடாது. நல்லுடல் பெற்றிருப்போர்க்கு அவைகள் தோன்றா.நோயுள்ளார்க்கே அக்கொடுமைகள் தோன்றும். இரவில், குலையாத உறக்கம்வரும் முறையில் மக்கள் பகலில் உடற்பயிற்சி செய்தல் வேண்டும்.

உறக்க நேரம்

உறக்க நேரத்தைப்பற்றிப் பலதிறக் கருத்து வேற்றுமைகள் உண்டு. சிலர் எட்டுமணி நேரம் என்பர் ; சிலர் ஆறுமணி என்பர் ; சிலர் நான்குமணி என்பர். எட்டுமணிக்குமேலே போகாமலும், நான்குமணிக்குக் குறையாமலும் உறங்குவது நலம். ஆறு மணி நேரம் மிகப் பொருத்தம். நேரம் அவரவர் உடல் நிலைக்கேற்ற வண்ணம் அமையும். உறக்கம் இடையில் இடர்ப்படல் ஆகாதென்ப தொன்றே பெரிதுங் கருதற் பாற்று.

இரவு பத்துமணிக்குப்படுத்து வைகறையில் எழுவது நலம்.

உறங்குமிடம், நறுங்காற்று எளிதில் உலவக்கூடிய தாய், பகலில் ஞாயிற்றொளி படரக் கூடியதாயிருத்தல் வேண்டும். இவைகள் நன்கு பரவாத குகைகளில் படுத்துறங்குவது நாளடைவில் நலத்தைக் குலைத்துக் கொள்வதாகும். படுக்கை அறைக் கதவுகளும், பலகணிகளும் திறக்கப்பட்டிருத்தல் வேண்டும். கதவுகளையும் பலகணிகளையும் அடைத்து உறங்குவதால் பல நோய்கள் உண்டாகும். காச நோய்க்குச் சொல்லப்படும் பல காரணங்களுள் புழுக்கமான அறையில் படுத்துறங்குவதும் ஒன்று.

**உறங்கு மிடம்**

படுக்கைகளைத் தூய்மையாக வைத்திருத்தல் வேண்டும். அன்றாடம் ஞாயிற்றொளியில் படுக்கைகளை உலர்த்தல் வேண்டும். பெண் மக்கள் எக்காரணம் பற்றியும் அடுப்புள்ள அறையில் படுத்தல் கூடாது. ஆங்கே நச்சுக்காற்று அதிகம்.

துயிலெழல்: 'வைகறைத் துயிலெழு' என்பது ஔவையார் திருமொழி. வைகறையில் துயில் எழுவதைப் பற்றி இயற்கை நூலார் பலபடக் கூறி இருக்கிறார். பறவைகள் விலங்குகள் முதலிய அஃறிணை உயிர்கள், பெரிதும் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடாத்துகின்றன. அவைகள் எப்பொழுது துயில் எழுகின்றன? விடியற்காலத்தி லல்லவோ? ஞாயிறெழுந்த பின்னர்ப் படுக்கைவிட் டெழுவது இயற்கைக்கு மாறுபாடு. அவ்வாறெழும் பயிற்சியுடையார் விரைவில் நோய்வாய்ப்படுவர். இயற்கை எழுப்பும்போது

படுக்கையில் கிடப்பது, குருதியை வெம்மைப்படுத்தி, நாளடைவில் கொதிப்பூட்டிப் பல நோய்கட்குக் கால் கொள்வதாகும். ஆதலால், வைகறைத் துயிலெழல் இயற்கை வாழ்விற்குரிய தென்க.

காலைக்கடன் : காலையில் எழுந்ததும் மலங்கழித்தல் ஒழுங்கு. மலம் சிக்கலுறாது கழிவது நல்லுடலுக்கு அறிகுறியாகும். மலம் சிக்கலுற்றால் நோய்த் தொடக்கம் என்று கொள்ளல் வேண்டும். மலச்சிக்கல் உற்றதும் சிலர் மருந்துங் கையுமாக நிற்கிறார். அது தவறு. மலச்சிக்கல் உற்றதற்குக் காரணம் யாது என்பதைக் காண மக்கள் முயலல் வேண்டும். பொருந்தா உணவு கோடல், மீதூண் கொள்ளல், பசியெழா முன்னஞ் சாப்பிடல், கள்ளருந்தல், தீயொழுக்கம், கெட்ட எண்ணம், கவலை, புழுங்குமிடத்தில் வாழ்தல், எப்பயிற்சியுஞ் செய்யாது ஓரே இடத்தில் கிடத்தல் முதலியன மலத்தைச் சிக்கச் செய்கின்றன. இத்தீமைகளினின்றும் விலகாது, மருந்துமட்டும் கொள்வது, அந்நேரத்தில் குணங் காண்பதாகும். மருந்து முடிந்ததும் மீண்டும் மலச் சிக்கல் தலைகாட்டி நோயாளரை வருத்தும்.

மலச் சிக்கல்

'மலச்சிக்கல் தானே' என்று எவரும் ஒருநொடிப் பொழுதும் கவலையீனமாக இருத்தலாகாது. எல்லாப் பிணிகட்கும் பிறப்பிடம் மலச்சிக்கல் என்பதை மக்கள் உணர்வார்களாக. மலம், வெளியில் கழியாது உள்ளே நின்றால், அது நஞ்சாகி, உடலின் அகப்புற உறுப்புக்களை எரிக்கும்; உறக்கத்தைக் கெடுக்கும்; நோயுண்டாக்கும்; எல்லாக் கொடுமையுஞ் செய்யும்.

மலச்சிக்கலால் விளையுங் கேடுகள்

மலச்சிக்கலால் துன்புறுவோர் அன்றுடம் எனி மாவாலாதல் மலத்தை வெளிப்படுத்தி, இயற்கை வாழ்வு மேற்கொள்ளல் வேண்டும்.

மலச்சிக்கலைப் போக்க வழி

தண்ணீர்மட்டுங் கொண்டு ஒருநாளோ இரண்டுநாளோ நிலைமைக் கேற்றபடி விரதமிருந்தால்,உள்ளே கிடக்கும் அழுக்குகளெல்லாம் வெளியே வரும்; பசித்தோற்றம் உண்டாகும். நீரும், காற்றும், ஞாயிற்றொளியும் மலச்சிக்கலுக்குப் பெரு மருந்து. பழ உணவு மிகப் பொருத்தம். எளிதில் ஜீரணமாகக் கூடிய பொருந்திய உணவு கொள்ளுதல் நலம். உடற்பயிற்சிமீது கவலை செலுத்தல்வேண்டும். பொருந்திய உணவும், நீரும், காற்றும், ஞாயிற்றொளியும், உடற்பயிற்சியும் மலச்சிக்கலைப்போக்கி நிலையை ஒழுங்குபடுத்தும். இந்நூலில் இதைப்பற்றி விரித்துரைத்தல் மிகையாகும். நோய்வாய்ப் படுவோர், அவ்வப்போது இயற்கை நுட்பந்தெரிந்த மருத்துவர் மாட்டுக் கேட்டு வாழ்வு நடாத்தல் அறிவுடைமை.

பயிற்சி: உடலுக்குப் பயிற்சி மிக அவசியம்; இல்லையேல் கட்டுக்களும், தசைகளும், பிறவும் பிணிப்புண்டு, பின்னை இடர் விளைக்கும். மக்கள் பயிற்சியின் அவசியத்தை முதலாவது நன்கு உணர்தல்வேண்டும். உடற்பயிற்சி எதுவாயினுமாக. அதைக் காலையில் ஒழுங்காக மக்கள் செய்துவரல்வேண்டும். காலையிலும் மாலையிலும் பயிற்சி செய்துவரலாம். காலை நேரத்தை விடுத்து மாலை நேரத்தில் பயிற்சி செய்தல் இரண்டாந் தரமாகும். காலையில் பயிற்சி செய்ய முடியாதவர்கள்

மாலையில் செய்யலாம். பயிற்சிக்குரிய காலம் காலை நேரமேயாகும்.

பயிற்சிகள் பல திறத்தன. இங்கே அவைகளை விரித்துக்கூறாது பெண்மக்களுக்குரிய சிலவற்றின்மீது கருத்தைச் செலுத்துகிறேன். மேல் நாட்டுப் பெண்மக்கள், நடை, குதிரையேற்றம், பந்தாட்டம், தண்ணீரில் நீந்தல் முதலியவற்றைக்கொண்டிருக்கிறார்கள். இவைகளை நமது நாட்டுப் பெண்மக்களும் கொள்ளலாம். பந்தாட்டம் பழைய காலத்தில் நமது நாட்டு மகளிர் ஆட்டங்களுள் ஒன்றாயிருந்தது. இதனை நமது நாட்டுப் புராணங்களிற் காணலாம்.

ஆட்டங்கள்

நமது நாட்டு மகளிராட்டங்கள் பல உண்டு. அவை கும்மி, குரவை, கோலாட்டம், பரதநாட்டியம், இசை முதலியன. இவ் வாட்டங்கள் மகிழ்ச்சியுடன் உடல் நலனையும் ஊட்டுவன. நமது நாட்டுப் பெண் பாடசாலைகளில் இவ்வாட்டங்கள் போதிக்கப்படல் வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் இவ் வாட்டங்கள் நிகழ்தல் வேண்டும். பரதநாட்டியம் ஒவ்வோர் உறுப்புக்கும் உரமூட்டுவது. அஃது இப்பொழுது வீட்டுக் குலமகளிரை விடுத்து, மற்றவரிடம் புகுந்து, பொருளீட்டுங் களியாட்டுகளுள் ஒன்றாக ஒதுங்கிவிட்டது. பரதநாட்டியம் தலையாய பயிற்சி. இசை மிக நுண்ணிய பயிற்சி. அது பல நுண்ணுறுப்புக்களுக்கு உரமூட்டும். பெண்மக்கள் இசைப் பயிற்சியால் உடல்நலங் காத்துவரலாம்.

நமது நாட்டுப் பெண்மக்கள் வாழ்விலேயே வேறு பல பயிற்சிகளும் அமைந் திருக்கின்றன. அவை நீர் முகத்தல், வீடு பெருக்கல், அரிசி குத்தல், மாவறைத்தல், இராட்டைசுழற்றல் முதலியன. இவைகள் பெண் மக்களின் கை கால் இடுப்பு முதலியவற்றிற்கு உரமளிப்பன.

இயந்திர அரக்கன்

நாகரிகம் என்னும் பெயரால் இப்பொழுது இயந்திரம் என்னும் அரக்கன், உலகத்திலுள்ள இயற்கை ஆற்றலையும் வனப்பையும் வெட்டிச் சாய்த்து வருகிறான். அவ்வரக்கன் நமது நாட்டிலும் நுழைந்து சூறையாடுகிறான் ; நமது நாட்டுப் பெண்மக்களின் இரத்தம், சத்து, தாது, அழகு முதலியவற்றை உறிஞ்சுகிறான். பெண்மக்கள் என்புக் கூடுகளாய்க் கணீல் கணீல் என இருமல் ஓசை எழுப்புகிறவர்களாய் மருந்துங் கையுமாய் நிற்கிறார்கள். நமது நாட்டில் நெல், அரிசி, மிளகு, சீயக்காய் எல்லாவற்றையுந் தூளாக்க மூலை முடுக்குகளிலும் இயந்திரங்கள் நுழைந் திருக்கின்றன. இயந்திரங்கள் பெண்மக்களைச் சோம்பேறிக ளாக்குகின்றன ; அவர்களின் உடல் நலத்தையும் கெடுக்கின்றன.

இயந்திரங்கள் உணவுப் பொருளிலுள்ள சத்துக்களையும் போக்குகின்றன. உதாரணமாக இயந்திரத்தால் குத்தப்பெற்ற அரிசியை எடுத்துக் கொள்வோம். அரிசிமீது உமி இருக்கிறது. அரிசிமீதுள்ள சத்தின் காப்புக்கென உமி இயற்கையில் அமைந்திருக்கிறது. இயந்திரம் உமியை நீக்கும்போது அரிசிமீதுள்ள சத்தும் இல்லாதவாறு தீட்டிக் கழிக்கிறது. அந்தச்சத்தில்

சில நலன்கள் உண்டு. அதனுள் ஒன்று ஜீரணத்துக்குத் துணை நிற்பது. அத்தகைச் சத்தில்லாச் சோற்றை உண்பதால் என்ன பயன்? நோயுறலே விளையும் பயன்.

செல்வப் பெண்கள்

செல்வர் வீட்டுப் பெண்மகளிர்பலர் வீட்டு வேலையுஞ் செய்வதில்லை; வேறு ஆட்டங்களும் ஆடுவதில்லை. அவர்கள் நிலைகுறித்துப் பெரிதும் இரங்குகிறேன். அவர்கள் எத்துணையோ உயிர்க்கொலை செய்யும் பாவத்துக் குள்ளாகிறார்கள் என்று சுருங்கச் சொல்கிறேன். அவர்கள் கருவில் உயிர் தங்குதலே அரிது; தங்கினும் இடையிடையே அது கரைந்து போகும்; கரையாது நிற்பினும், கரு உயிர்க்கும்போது, குழந்தை உள்ளே இறந்து போதலும் உண்டு; சில சமயங்களில் மருத்துவர் பெருமுயற்சி செய்து கருவியால் குழந்தையைத் துண்டித்து வெளிப்படுத்துவதும் உண்டு. இக்கொலைகட்குக் காரணர் யார்? காரணம் எது? உடற்பயிற்சி செய்யாத செல்வப் பெண்மக்கள் காரணர். காரணம் அவர்கள் சோம்பல்; சோம்பல். ஆகவே, பெண் மக்களுக்குப் பயிற்சி இன்றியமையாதது; இன்றியமையாதது.

நீராடல்: நீராடலைப்பற்றி மேல் நாட்டார் பல முறைகள் வகுத்திருக்கிறார். அவைகளில் வீழ்ந்து நாம் இடர்ப்பட வேண்டுவதில்லை. குளிர் மிகுந்த அந்நாட்டிற்கு அம்முறைகள் வேண்டற்பாலன. நமது நாட்டிற்குச் சூரிய நாராயணன் திருவருளுண்டு. அத் திருவருள் எவ்வளவோ சுகாதாரக் குறைகளைப்

போக்கிவருகிறது. ஆதலால், குளிர்மிகுந்த மேல் நாட்டுமுறைகள் நமது நாட்டவர்க்கு வேண்டுவதில்லை.

காலையில் தூய நீராடுதல் வேண்டும். மெலிந்த உடலினோர் வெந்நீரில் மூழ்குவது நலம். ஊற்று நீரோ ஓடுநீரோ இல்லாதவிடத்து எல்லாரும் வெந்நீரில் மூழ்குவது சிறப்பு. ஓடுநீர் மிக நறுநீராயிருப்பின், மூன்று வேளையும் தலை மூழ்குவது நலம்.

நீராடும்போது உடம்பிலுள்ள அழுக்குகளை நன்றாகத் தேய்த்துக் கழுவுதல் வேண்டும். பச்சைப் பருப்போ சீயக்காயோ உபயோகிக்கலாம். சோப் அநாவசியம்.

நாடோறும் நீராடுவோரை நோய் அணுகாது; மற்றவரை நோய் வருத்தும். நீராடல் மிகமிக அவசியம். நீராடாத பெண்மகள் எவ்வினையும் நிகழ்த்தலாகாது. 'கூழானாலும் குளித்துக்குடி - கந்தையானாலும் கசக்கிக்கட்டு' என்னும் பழமொழியை உற்று நோக்குக.

நீர் மூழ்கலைப்போலவே வேறு இரண்டு மூழ்க்குகள் இருக்கின்றன. ஒன்று காற்று மூழ்க்கு; மற்றொன்று ஞாயிற்றொளி மூழ்க்கு. இவ்விரண்டிற்கும் நீண்ட நேரமும் பெருமுயற்சியும் வேண்டுவதில்லை. சிறிது நேரம் தூயகாற்று வீசுமிடத்தில் கதிரொளி பட நிற்றல் சாலும். அதிகாலையில் புறப்படும் இளஞ் செஞ்ஞாயிற்றொளியும், மாலை ஞாயிற்றொளியும் உடல் நலத்துக்குரியன. ஞாயிற்றொளி ஒவ்வோர் உறுப்பிலும் படருமாறு புரண்டு புரண்டு படுத்தல் மிகவும் நன்று.

இக்காலைக் கடன்களைக் குறைவறச்செய்து, சிறிது நேரம் அன்புவடிவான ஆண்டவனை உன்னிப் பொருந்திய உணவு கொள்ளல் வேண்டும்.

உணவு: அடக்கம் பெண்மக்கள் உடைமை என்று மேலே சொல்லப்பட்டிருக்கிறது. அவ் உடைமை குழந்தைப் பருவத்திலேயே பெண்மக்கட்கு அணியப்பெறல் வேண்டும். அடக்கநிலைகள் பல திறத்தன. அவைகளுள் தலையாயது நாச்சுவை அடக்கம். அவ்வடக்கம் இருபாலார்க்குந் தேவை. அது பெரிதும் பெண்மக்கள்பால் சிறந்து விளங்கல் வேண்டும். நாச்சுவை அடக்கமிலாப் பெண், பின்னைப் பிற அடக்கங்களையும் இழப்பாள். ஆதலால், அவ்வடக்கம் பெண் மக்கட்கு மிக மிக இன்றியமையாதது.

**சுவை யடக்கம்**

குழந்தையில் கண்டதைத் தின்று பழகும்பெண், பின் நாவடங்கி வாழ்தல் அரிது. பெண்மகள் குழந்தையில் கண்டதைத் தானே தின்னமாட்டாள். தாய் தந்தையர்கள் மடமையால் குழந்தை கண்டதைத் தின்பதுண்டு. குழந்தையில் பெண்மகள் கண்டதைத் தின்பது பின்னை வாழ்வைக் குலைக்குமென்பது மூடத் தாய் தந்தையர்க்குத் தெரிவதில்லை. குழந்தைப் பருவத்திலேயே கண்டதைத் தின்று கொழுத்தால், பின்னை வாழ்வில் பெண் மிக வலிமை உடையவளாய் இருப்பாள் என்பது அத்தாய் தந்தையர்கள் கருத்துப் போலும்! குழந்தைகட்கு அளவாக உணவளித்து, நாவடங்க அவைகளை வளர்க்கத் தாய் தந்தையர்கள் பயில்வார்களாக.

சில தாய் தந்தையர்கள் அன்பு அன்பு என்று கண்டதை வாங்கிக் குழந்தைகட்குக் கொடுப்பதுண்டு. இவ்வன்பு பின்னைப் பெண்ணை எலும்பாக்கும் என்பதைப் பெற்றோர் உணர்ந்து நடப்பாராக. பிள்ளைகளுக்குக் கண்டதை வாங்கிக் கொடுக்கும் வழியில்தான் பெற்றோர் அன்பைக் காட்டல்வேண்டும் போலும்! அவ்வன்பு அன்புமாகாது. அது, பெண்ணை விரைவில் சுடுகாட்டுக்கு அனுப்பும் அன்பாக முடியும். அம்மூட அன்பு எத்துணையோ பெண்மக்கள் வாழ்வைக் குலைக்கும் யமனாகிறது. பின் வாழ்வில் பெண் தாயாதற்கு வேண்டப்படும் இயல்பும் உடலும் அமைதற்குரிய உணவு ஊட்டுவதில், பெற்றோர்கள் கவலை செலுத்துவது பொருந்திய அன்பாகும்.

உணவின் தன்மை, அளவு முறை, காலம் முதலியவற்றைப் பெண்ணின் இளமையிலேயே தாய் தந்தையர்கள் கணித்துப் பழக்கத்தில் கொணரல் வேண்டும். அப்பழக்கம் நாவடக்கத்தை இயற்கையில் கொணர்ந்து நிறுத்தும். கண்டபொருளைக் காணுந்தோறும் நாவூறப்பெறும் பெண்ணால், பெண்ணுக்குரிய வாழ்வு நடாத்தல் இயலாது, அவள் அடிக்கடி நோய்வாய்ப்பட்டுங் கிடப்பாள்.

நோயற்ற வாழ்வன்றோ வாழ்வு? நோய் பெரிதும் உணவைப் பொறுத்து நிற்கிறது. பலதிற நோய்கட்குக் காரணம் பெருந்திண்டியேயாகும். அன்றாடம் உண்ணும் உணவு அன்றாடம் ஜீரணமாவதா யிருத்தல் வேண்டும். ஜீரணமாகாது அரை குறையாக உணவு

**நோயற்ற வாழ்வு**

வயிற்றுள் நிற்கும்போது, மேலும் மேலும் உண்டு கொண்டிருப்பது, நோயை உண்டுபண்ணுது, பின்னை எதை உண்டு பண்ணும்? பசி எழா முன்னம் உண வருந்தும் பயிற்சியினுங் கொடியது பிறிதொன்றில்லை. பெருந்திண்டி, பொருந்தா உணவு, காலந் தவறிய உணவு முதலியன நோய்க்கு அடிகோலுவன.

'நோய்' என்னுஞ் சொற்குத் 'துன்பம்' என்பது பொருள். உடலுக்குத் துன்பம் எப்பொழுது நேர்கிறது? அவ்வவ்வுறுப்பு, தன் தன் கடனை ஆற்ற இயலாது தடைபடும்போது, அதாவது பிணிபடும்போது, துன்பம் உண்டாகிறது. அப்பிணிக்குக் காரணம் பெருந்திண்டி, பொருந்தா உணவு முதலியன. எனவே, துன்பத்துக்கு - அதாவது நோய்க்குக்-காரணம் பொருந்தா உணவு முதலியன என்க. உணவை ஒழுங்குபடுத்தி வாழ்வோர்க்கு நோய் தோன்றல் அரிது. நோயற்ற வாழ்விற்கு ஒழுங்குபட்ட உணவு தலையாய காரணம் என்று கூறலாம்.

வேளை நாழி அறியாது கண்டதை வயிற்றில் அடைத்து, நோய்வாய்ப்படும்போது, பலதிற மருந்துகளை உண்பது, பெண்ணின் கொழுமையைக் கெடுப்பதாகும். பெருந்திண்டியால் உற்ற நோய்க்கு மருந்து எற்றுக்கு? அத்திண்டியின் அரை குறையும், அதனுல் ஏற்படும் மலச்சிக்கலும், பழைய மலக்கட்டு உடலுள் பரப்பும் நஞ்சும் தொலைதற்கு விரதமிருத்தல் வேண்டும்.

**விரதம்**

விரதம், வயிற்றினுள்ளேயுள்ள ஆபாசங்களைத் தள்ளி, உறுப்புக்களுக் கேற்பட்ட பிணியையும் சோர்வையும் நீக்கி,

உறுப்புக்களுக்கு ஊக்கமூட்டும். நோய் போக்கவல்லது நோன்பன்றி, மருந்தன்று என்பதைப் பெண் மக்கள் இளமையிலேயே உணரல் வேண்டும். இது குறித்துப் பின்னருங் கூறுவன்.

ஒழுங்குபட்ட உணவை உண்டுவரின், எந்நோயும் தலை காட்டாது. பெண்மக்கள் தங்கள் நல்வாழ்விற்கு உணவில் பெருங்கவலை செலுத்துவார்களாக. 'உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கழகு' என்றார் நமது மூதாட்டியார். உண்டி சுருக்கத்தைப் பற்றி இதுபோழ்து மேல்நாட்டார் பல நூல்கள் எழுதி வருகிறார். அந்நூல்கள் பெரிதும் நமது பழைய முனிவர்கள் கொண்ட உணவு முறையையே அறிவுறுத்துகின்றன. 'உண்டி சுருங்குதல்' எனில், நாடோறும் பட்டினி கிடப்பதன்று; உண்டிப் பெருக்கம் கூடாதென்பதே அதன் கருத்து. பெருந்திண்டியால் மக்களுக்கு விலங்குணர்வு பெருகுவதோடு நோயும் பெருகும். ஆதலால், மக்கள் உண்டிப் பெருக்கை ஒழிப்பார்களாக.

உண்டி சுருங்கல்

'பெண்' என்னுஞ் சொல்லிற்குக் 'கட்புலனாயதோர் அமைதித் தன்மை' என்று மேலே எடுத்துக் காட்டப் பட்டிருக்கிறது. அவ்வமைதிக் குரிய பொருளையே பெண் மக்கள் உண்பது நலம். புளி காரம் கலந்த பதார்த்தங்களும், ஊறுகாய்களும், புலால் - காப்பி - தேயிலை - கொக்கோ - ஓவல்டைன் முதலியவைகளால் செய்யப்படும் பான வகைகளும், கள் முதலிய மயக்கப் பொருள்களும் அமைதி குலைப்பனவாம். மக்கள் இவைகளைக் கனவிலுங் கருதலாகாது.

பொருந்தா உணவு

அளவு கடந்த புளி காரம் கலந்த பதார்த்தங்களும், ஊறுகாய்களும் நமது நாட்டில் இரத்தத்தோடு கலந்து விட்டன. அவைகளில் சுவை உண்டு என்பது சிலர் எண்ணம். சுவை என்பது இயற்கைப் பொருளில் இருப்பது. அவ்வியற்கைச் சுவையைக் கெடுக்கும் ஒன்று, சுவையாகக் கருதப்படுவது பழக்கத்தின் குற்றம். பெருமித புளி மிளகாய்க் கலப்பு, கொதிப்பை உண்டாக்கி, மக்கட்குச் சீற்றம் முதலிய தீக்குணங்களை எழுப்புகிறது.

'உப்பு, புளி, காரம் இருந்தால்தானே உடலுக்கு நல்லது' என்று நமது வீட்டுத் தாய்மார்கள் சொல்வது வழக்கம். உப்பு-புளி-காரத்தில் மூழ்கியவர்கள், இரண்டொரு நாள் அவைகளை விடுத்திருப்பின், அவர்கள் வானத்தில் பறப்பது போலக் காணப் பெறுவார்கள். மேலும் மேலும் அவர்கள் அவைகளை நீக்கிவரின், நாளடைவில் அவைகளின் கொடுமை அவர்கட்குப் புலனாகும். உப்பு-புளி-காரமுண்போர், அவைகளைத் திடீரென விடவேண்டுவதில்லை. படிப்படியாக அவைகளைக் குறைத்து வருவது நலம்.

உப்பை அளவாக உபயோகித்து வரலாம். இயற்கைக் காய்கறிகளை உண்போர்க்கு உப்பே வேண்டுவதில்லை. காய்கறிகளைச் சமைத்துச் சாப்பிடுவோர் சிறிது உப்புச் சேர்த்துக் கொள்ளலாம். நாளடைவில் உப்பையும் நீக்க முயன்று வருவது சிறப்பு.

புளி மிகக் கொடியது. 'காட்டுக்குப்புலி நாட்டுக்குப்புளி' என்பது பழமொழி. புளியின் கொடுமை

உணர்ந்து, பழமொழி கண்ட நாடு, புளியில் தோய்ந்து கிடப்பது அநியாயம். புளியை விலக்கல் அவசியம். வேண்டுமேல் புளிக்குப் பதிலாக எலுமிச்சஞ்சாறு சேர்த்துக் கொள்ளலாம். இதற்குப் பழச் சாறென்றே சிறப்புப் பெயரும் உண்டு. புளியில் விருப்புடையோர், அளவைச் சுருக்கி, அதைப் பயன்படுத்தலாம்.

மிளகாயைப்பற்றி ஒன்றும் விரித்துக் கூறவேண்டுவதில்லை. பழைய காலத்தில் மிளகாய் நமது நாட்டில் இல்லை. அக்காலத்தில் காய் கறிகளிலும், ஊறுகாய்களிலும் மிளகாய் காரங்கலந்து நம்மவர்கள் உண்டார்கள் இல்லை. நம்மவர்கள் மிளகு நீர் உண்டார்களன்றி, மிளகாய் நீர் உண்டார்கள் இல்லை. மிளகு ரசம், இப்பொழுது மிளகாய் ரசமாக மாறிவிட்டது. மிளகாய் நமது நாட்டில் இடைக்காலத்தில் நுழைந்தது. அதன்பாலுள்ள காரங்கண்டு, நம்மவர்கள் அதை 'மிளகுகாய்' என்று அழைத்தார்கள் போலும்! அது மிளகுகாய் அன்று. நமது நாட்டு உணவுப் பொருளில் மிளகாய் ஒன்றன்று. மிளகாய்க்குப் பதிலாக மிளகைக் கொள்ளலாம்.

இரஜோ குணத்தை எழுப்பவல்ல கார வகைகளை அமைதி வடிவா யிலங்கும் பெண்மக்கள் உண்ணு திருப்பார்களாக. அவர்கள் இயல்புக்குச் சாத்துவிக உணவே பொருந்தியது. தாய் தந்தையர்கள், குழந்தைகளுக்குச் - சிறப்பாகப் பெண் குழந்தைகளுக்குச் - சத்துவ உணவு ஊட்டி வளர்ப்பார்களாக.

எக்காரணம் பற்றியும் பெண்மக்கள் புலால் உண்ணல் கூடாது. பெண்மக்கள் அனைவரும் தூய உணவு

கொள்வதில் உறுதிகொள்ளல் வேண்டும். அப்பொழுது ஆணுலகும் திருந்தும். மன்பதைக்குப் (பெண்மக்களோ ஆண்மக்களோ) புலால் உணவு பொருந்தா உணவேயாகும். புலால் உண்ணுமையைப்பற்றி நமது நாட்டார் எழுதிய நூல்கள் பலப்பல. நம்மவர்கள் ஜீவகாருண்யத்தை அடிப்படையாகக் கிளத்தி அந்நூல்கள் எழுதினார்கள்; மேல்நாட்டாரும் புலால் உண்ணுமையைப் பற்றிப் பலப்பல நூல்கள் எழுதிவருகிறார். அவர்கள் ஆராய்ச்சி வாயிலாக(உடல் நலங்கருதிப்) புலால் உணவை மறுத்து வருகிறார்கள். 'புலால் உணவில் வீரம் உண்டு' என்று சொல்வது ஆராய்ச்சி இல்லாதார் கூற்றெனை அதை ஒதுக்குக. அறிஞர் கொள்ளத்தக்க முறையில், காரணங்கள் காட்டி, எழுதப்பட்டுவரும் நூல்களைப் படிக்குமாறு சகோதரிகளைக் கேட்டுக்கொள்கிறேன்.

**புலால்**

புலால் உணவு குணத்தையும் கெடுக்கும்; உடல் வளத்தையும் குலைக்கும். 'புலால், உடல் வளந்தருவது' என்னும் கூற்றுக்கு இனி அறிவு உலகில் ஆதாரமில்லை. புலால் உணவு உடலுக்கு நலஞ்செய்வது அன்று; அன்று. நலத்துக்குப் பதிலாக அது நோய் செய்யும் என்க.

இயற்கையாகப் பெண்மக்களுக்கு அமைதிக் குணம் அமைந்திருக்கிறது. அவ்வமைதி, பெண்ணின் வாழ்விற்கு உரியது. அதைப் புலால் உணவு சிதைக்கும். மக்களைக் கெடுக்கும் இராஜோ குணத்தை எழுப்பும் புலாலை எக்காரணம் பற்றியும் பெண்மக்கள் உண்ணுதல் கூடாது.

தற்கால நாகரிகம் என்னும் பெயரால், காப்பி - தேயிலை-கோக்கோ-ஓவல்டைன்-இவைகளால் செய்யப் படும் பானங்கள் உலகமுழுவதும் பரவியிருக்கின்றன.

பொருந்தாப் பானங்கள்

நமது நாட்டிலும், குக்கிராமங்களிலும், குடிசைகளிலும், அப்பானங்கள் குடி ஏறி இருக்கின்றன. காப்பிக்கடைகள் இல்லாத இடமில்லை. கட்குடியை ஒழிக்கப் பல தேசபக்தர்கள் முயல்கிறார்கள். அம்முயற்சி காப்பிக் கடைமீது திரும்புங்காலம் என்று வருமோ? கள்ளுக் கடைக்காதல் சில கட்டுப்பாடுகள் இருக்கின்றன. காப்பிக் கடைக்கோ ஒருவித கட்டுப்பாடும் இல்லை. கள்ளுக் கும் காப்பிக்கும் பெருவேற்றுமை இல்லை. இருவருஞ் சகோதரர். கள்ளார் அண்ணனர்; காப்பியார் தம்பியார். இவ்வளவே வேற்றுமை. காப்பி முதலிய பானங்களால் விளையுங் கொடுமைகள் அறிஞர்களால் சொல்லப்படுகின்றன; எழுதப்படுகின்றன. ஆனல் அவைகளை ஒழித்தற்கு எவ்வித முயற்சியுஞ் செய்யப் படுவதில்லை.

காப்பியும், தேயிலையும், கொக்கோவும் வெம்மை நாட்டு மக்களை எப்படி அரிக்கும் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. நாட்டில் - காசம் - க்ஷயம் - நீரிழிவு முதலிய நோய்களைக் காப்பி முதலிய குடிகள் பெருக்கி வருகின்றன. கொடிய நோய்கட்கு இரையாகியும், அக் குடிகளை ஒழிக்க நம்மவர்கள் துணிகிறார்கள் இல்லை. க்ஷயத்தால் பீடிக்கப்பட்டு, உடல் மெலிந்த பின்னர் - "டாக்டர்" அறிவுறுத்திய பிறகு - வேண்டா வெறுப்

பாக அக்கொடிய குடிகளை அகற்ற நம்மவர்கள் முயல்கிறார்கள். இஃதென்ன அறியாமை? இளமைதொட்டே அப்பானங்களை நீக்கி வந்திருந்தால், காசத்துக்கும் க்ஷயத்துக்கும் மக்கள் இரையாக வேண்டுவதில்லை. கண்ணிருந்தும் குழியில் விழுகிறார்கள் நம்மவர்கள்.

ஆண்மக்களில் நூற்றுக்கு ஐம்பது பேரின் நுரை ஈரல் கெட்டிருந்தால், பெண்மக்களில் நூற்றுக்கு எழுபத்தைந்து பேரின் நுரை ஈரல் கெட்டிருக்கும். நகரங்களிலுள்ள எப்பெண்மணி இருமாமலிருக்கிறாள்? வீடுகளில் அழகொழுகும் பெண்மக்களா நடமாடுகிறார்கள்? என்புக் கூடுகள் அல்லவோ நிற்கின்றன? பெண்ணுலகின் நிலை இஃதாயின், பின்சந்ததியின் நிலை என்னாகும்?

நகரப் பெண்மக்கள் நிலை

பெண் மக்களின் வயிற்றைப் பற்றிய பலதிற நோய்கட்கும், நீரிழிவு முதலிய கொடிய நோய்கட்கும் காரணமாகக் காப்பி முதலியன நிற்கின்றன. இத்துணைத் துன்பங்கட்குக் காரணம் காபி, தேயிலை, கொக்கோ முதலியன என்றுணர்ந்தும், அவைகளை விட நம்மவர்கள் மனங் கொள்கிறார்கள் இல்லை. காப்பி முதலிய குடிகள் மிகுந்துள்ள இந்நாளில், தாய் தந்தையர்கள், பொதுவாகக் குழந்தைகளைச்-சிறப்பாகப் பெண் குழந்தைகளை - அக்குடிப் பயிற்சினின்றுங் காப்பார்களாக.

காப்பி, தேயிலை, கொக்கோ முதலிய குடிகட்குப் பதிலாக, தூநீர், நீர்மோர், பழச்சாறு, இளநீர் முதலியவற்றை மக்கள் கொள்ளலாம். இவைகளால் உட

லுக்குக் கேடில்லை. இவைகள் உள்ளுறுப்புக்களுக்கு எரியூட்டா. ஜீரணத்துக்கும், இரத்த ஓட்டத்துக்கும், கல்லீரல் (Liver) ஊக்கத்துக்கும், பித்தச் சுரப்புக்கும் அவை துணைபுரியும்.

இயற்கை உணவு, அமைதிக்கும் அன்புக்கும் இன்பத்துக்கும் உரியது. குழந்தைப் பருவந் தொட்டுப் பெண்மக்கள் பொருந்திய உணவுகொண்டு வளருமாறு செய்யவேண்டுவது தாய் தந்தையர் கடன்.

உணவுக்குரிய நேரம், காலை - உச்சி - மாலை - என்று சொல்ல வேண்டுவதில்லை. இப்பொழுது ஆறு முறை உண்போரும் உளர். அவர், இன்ப வாழ்வை இழந்தவர் என்பது எனது கருத்து.

நேரம்

உணவுப் பெருக்கால் உடல் நலமுறாது. உணவை அளவாக அருந்தலே பொருத்தம். மூன்று வேளை உணவும் நமது நாட்டு அறிஞரால் மறுக்கப்படுதலும் உண்டு. 'மூன்று வேளை உண்பவன் ரோகி, இரண்டு வேளை உண்பவன் போகி, ஒருவேளை உண்பவன் யோகி' என்றொரு வழக்குத் தொடர் இந்நாட்டில் உலவுகிறது. காலை மாலை இரண்டு வேளை எளிய உணவு கொண்டு, பகல் சிறிது கொழுமையான உணவு கொள்வது நலம். மேலே குறிப்பிட்ட பொருந்தா உணவு போக, மிகுதியுள்ள நல்லுணவை அவரவர் வழக்கப்படியே உண்டு வரலாம். உணவுடன் பழம் அருந்தல் நலம். ஆரஞ்ச் எவர்க்குந் தீமை செய்யாது.

உணவை நன்றாக மென்று, வாயூறலோடு கலக்கச் செய்து, விழுங்குவது நலம் பயக்கும். பிறவற்றைத் தனி நூல்களிற் காண்க.

உடை : நாகரிகம் முதிர முதிர மக்கட்கு உடை ஏற்பட்டது. அவ்வுடை, உடல் நலத்துக்கென அணிய வேண்டுமே யன்றி, ஆடம்பரத்துக்கென அணிதல் கூடாது. உலகில் பெரும்பான்மையோர் ஆடம்பரத் துக் கெனவே உடை உடுத்துகிறார். அதிலும் பெண் மக்கள் ஆடம்பரத்தைச் சொல்ல வேண்டுவதில்லை. ஆடம்பர உடை ஒருவரை உயர்த்துவதுமில்லை; அல்லாத உடை ஒருவரைத் தாழ்த்துவதுமில்லை. உயர்வு ,தாழ்வு உடையில் இல்லை.

உடை அழகு நல்குகிறதென்றும், மதிப்பளிக் கிறதென்றும் எண்ணுவோரும் உளர். உடலில் இல் லாத அழகும், ஒழுக்கத்தில் இல்லாத மதிப்பும் உடை யில் எங்கிருந்து முளைக்கின்றனவோ தெரியவில்லை. உடையில் அழகும் மதிப்பும் இருக்கின்றன என்று கருதுவோர், தம்பால் அழகும் மதிப்பும் இல்லாதவரா யிருத்தல் வேண்டும். இயற்கை அழகே அழகு. இயற்கை மதிப்பே மதிப்பு.

**பெண்மக்களும் உடையும்**

சில விடங்களில் 'ஆண்மக்கள் தேடும் பொரு ளெல்லாம் பெண்டுகள் புடவைக்கே செலவாகின்றன' என்று சொல்வதுண்டு. பெண்மக்கள் விலையுயர்ந்த புடவைகளை விரும்புதற்குக் காரணம் என்னை? 'உடை எதற்கு' என்னும் அறிவை ஊட்டக்கூடிய கல் வியை அவர்கட்கு இளமையிலேயே பெற்றோர்

போதியா தொழிந்ததே யாகும். நல்லறிவுடைய பெண்மகள், விலை உயர்ந்த உடைகளை வாங்கித் தரு மாறு எவரையும் வலியுறுத்தாள். தூய எளிய நல் லுடையையே அவள் விரும்புவாள். இளமையில் கல்வி கொடாது, பெண்களை வளர்த்து விட்டால், அவர்கள் அழகும் மதிப்பும் ஆடம்பரத்திலுண்டு என்றே கருதுகிறார்கள். இளமையிலே பெண் மக் கட்கு இயற்கையழகு முதலிய நுட்பங்களை உணர்த் தத் தக்க கல்வி அளித்தல் வேண்டும். இளமையில் பெண்ணைத் தவறாக வளர்த்துப், பின்னை அவளை மாடென்றும் பேயென்றும் பேசுவதால் என்ன பயன் விளையும்? பெண்வளர்ப்பு, பெரிதும் தாயார் பொறுப்பில் இருப்பது. தாயார் ஆடம்பர உடை அணிவதை இளம் பெண் பார்த்துப் பார்த்துப் பழகினால், அப்பெண் ணும் வயதில் அவ்வுடைமீதே கருத்துச் செலுத்து வாள். தாயார் எளிய நல்லுடை அணிந்து வாழ்வு நடாத்துவது குழந்தைகட்குப் பெரும் பாடமாகும்.

ஆடம்பர உடைமீது கருத்தைப் பதிய வைத் துள்ள பெண்ணின் வாழ்வு,பின்னை நலமுறுதல் அரிது. நமது நாட்டில் எத்துணைப் பெண்மக்கள் வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டி, நாயகனையும் வஞ்சித்து, விலை உயர்ந்த புடவைகளை வாங்கிப், பெட்டியில் வைத்து, அழகு பார்த்து மகிழ்கிறார்கள். உடை எற்றுக்கு என்று இளமையில் உணராத குற்றமே இவ்வறியா மைக்குக் காரணம்.

பெண்மக்களின் உடைக்கோலங்களோ உலகில் பல விதம். அக்குப்பைகளை ஈண்டுக் கிளற வேண்டுவதில்லை. இரண்டொன்றைமட்டும் குறிப்பிடுகிறேன்.

உடை, உடையாக இருக்கவேண்டுமே யன்றிச் சுமையாக இருத்தல் ஆகாது. தாங்க முடியாத உடைச் சுமைகளைச் சில பெண்மணிகள் சுமப்பதை நான் காண்கிறேன். 'இவர்கள் தலை எழுத்தென்னே! சுமை தாங்கச் சுமை தாங்கிகள் இருக்கும்போது, இவர்கள் ஏன் சுமைதாங்கிகள் ஆகிறார்கள்' என்று நான் நினைப்பதுண்டு. மேல்நாட்டுப் பெண்மணிகளும் முன்னே சுமைதாங்கிகளாக இருந்தார்கள். இப்பொழுது அவர்கள் தங்களைத் தாங்குபவர்களாய் விட்டார்கள். இந்தியப் பெண்மணிகளின் உடைச் சுமையும் நாளுக்குநாள் குறைந்து வருகிறது. உடைச்சுமை, உடல் நலத்தைக் கெடுப்பதென்பதைப் பெண்மணிகள் இளமையிலேயே உணருமுறையில், அவர்களைப் பெற்றோர்கள் வளர்த்தல் வேண்டும்.

உடைச்சுமை

இன்னுஞ் சில விடங்களில் பெண்மணிகள் உடைகளை உடலில் இறுக்கி இறுக்கிப் பிணிக்கிறார்கள். இதனால் குருதி ஓட்டம் பிணிப்புண்டு தடைபடுகிறது. அவ்விடத்தில் தொடக்கத்தில் நமைதோன்றும். பின்னைப் புண்ணும், பின்னைச்சீழும் நீரும் ஒழுகும். சில இந்தியப் பெண்மக்கள் இடுப்பிலும், உடலைச் சுற்றிலும், புண்மலிந்த படைத்தழும்புகள் எழும்பி அவர்களை வருத்துகின்றன. இதற்குக் காரணம் பெண்மக்கள் புடவையையும் இரவிக்கையையும் இறுகப் பிணித்துக் கட்டுவதேயாகும். உடைகளை இறுக்கிப் பிணிக்கும் பழக்கம் மேல்நாட்டுப் பெண்க

உடைஇறுக்கம்

ளிடையும் ஒருபோது இருந்தது. இப்பொழுது அப் பழக்கம் முற்றும் அவர்களிடை மறைந்து விட்டது. நமது நாட்டிலும் அது மறைதல் வேண்டும்.

நமது இந்தியநாடு குளிர்மிகுந்த நாடும் அன்று; வெம்மை செறிந்த நாடும் அன்று; இரண்டும் ஒப்பநிற்கும் நாடு. இந்நாட்டில் உடைச்சுமையும் இறுக்கமும் எங்ஙனம் புகுந்தனவோ தெரியவில்லை.

உடையும் நாட்டியலும்

நமது நாட்டில் வாழும் மேல்நாட்டுப் பெண்மணிகள் மெல்லிய உடையை இலகுவாக அணிகிறார்கள். இந்தியப் பெண்மணிகளின் உடைக்கோலமும் மாறுபட்டு வருகிறது. அம்மாற்றம் எத்தகையதாயினும் ஆக. சுமையும், இறுக்கமும், பிணிப்பும் வேண்டாம் என்றுமட்டுஞ் சொல்கிறேன்.

பிறர் உள்ளத்தைக் கவரும் முறையில் உடைக் கோலஞ் செய்யும் பெண்மணிகள் நிலைகுறித்து இரங்குகிறேன். தூயமனமுடைய ஆண்மக்கள் நெஞ்சையும் உடைக்கக்கூடிய வேடிக்கை உடைகளைச் சில பெண்மக்கள் அணிகிறார்கள். இப்பழக்கம் நிறுத்தப்படல் வேண்டும்.

உடையியல்

உடையைக்கொண்டு ஒருவர் மனோநிலையை அறிஞர் உணர்தல் கூடும். அவரவர் நடைக்கேற்ற உடையையே அவரவர் விரும்புவர். ஒருவர் உடைகொண்டு அவரது நடையை அறிஞர் அளந்துகொள்ளலாம். இதையொட்டியே 'நடை உடை பழக்கம்' என்னுஞ் சொற்றொடர் வழக்குந் தோன்றியது போலும்! அமைதி வடிவங்களாய பெண்மக்கள், பிறர் மனதைக் கவரத் தக்க உடை அணிதல் பாவம்; பாவம். அவ்வெண்ணம்

பின்னைத் தன்னைப் பலவழியிலும் கெடுக்கும் என்பதைப் பெண்மகள் உணர்வாளாக. தீய எண்ணம் உலவும் மனமுடைய ஆண்மக்கள் மனதையும் கவரக் கூடாத அமைதி பொருந்திய உடைக்கோலமும் உண்டு. அத்தகைத் தெய்விக எண்ணமூட்டக்கூடிய உடைக் கோலங் கொள்ளவே பெண்மக்கள் இளமைதொட்டுப் பழகல் வேண்டும்.

பெண்மக்கள் தங்கள் உடையைத் தாங்களே செய்துகொள்ளல் நலம். பெண்மக்கட்குப் பெரிதும் ஓய்வு உண்டு. அவ்வேளையில் அவர்கள் சில பல வீட்டுத்தொழில்கள் செய்யலாம். வீட்டுத் தொழில் களுள் தலையாயது நூல்நூற்றல். நாடோறும் அரை

நூற்றல்

மணி நேரம் ஒவ்வொருவரும் நூற்ருல், ஆண்டுக்கு வேண்டப்படும் உடையை அவ்வவர்க்கு அந்நூல் அளிக்கும். இவ்வாறு பெண்மக்கள் தங்கட்கும், வீட்டிலுள்ள மற்றவர்கட்கும் உடை உதவலாம். ஆதலால், பெண்மக்கட்கு இளமையி லேயே நூற்றல் கற்பித்தல் வேண்டும். அவர்கட்குத் தையல் பின்னல் முடைதல் முதலிய வீட்டுத் தொழில்களும் கற்பிக்கலாம். மேல் நாட்டில் பெண் மக்கள் ஓய்ந்த வேளைகளில் நகைகளைப் பார்த்துப் பார்த்துக் களிப்புறுர்கள். அவர்கள் சிறு சிறு வீட்டுத் தொழில்கள் செய்து நாட்டுக்கு நலன் தேடுவார்கள். இளமையில் பெண்மக்கட்கு வீட்டுத் தொழின் முறைகளும் போதிக்கப்படல் வேண்டும். பின்னை வாழ்விற்கு அத்தொழின் முறைகள் எவ்வளவோ துணைசெய்யும். நூற்றல் முதலிய தொழின் முறைகள்

கற்பையும் காக்கும் என்று அறிஞர் கூறுகிறார். இதுகுறித்து, 'மனிதவாழ்க்கையுங் காந்தியடிகளும்' என்னும் நூலிலும் விளக்கியிருக்கிறேன். இது நிற்க.

நகை: நமது நாட்டுப் பெண்மக்களுக்கு மற்று மொருபித்து உண்டு; அதாவது நகைப்பித்து. அப்பித்து ஒழிதற்கு எத்துணை நாளாமோ அறிகிலேன். இந்நாட்டுப் பெண்மக்கள், நகைகளில்தான் 'அழகுண்டு-இன்பமுண்டு - வாழ்வுண்டு - எல்லாம் உண்டு' என்று கருதுகிறார்கள். நகையணியும் நாயகனை நன்னாயகனெனவ அவர்கள் கொள்கிறார்கள். பெண்மக்கள் பட்டினி கிடந்தேனும், இழிதொழில் செய்தேனும், பொருளீட்டி, நகையணியவே முயல்கிறார்கள். இதற்குக் காரணம், ஆண்மக்கள் பெண்மக்களின் உரிமை கடிந்து, அவர்கள் அறிவைக் கெடுத்து, அவர்களைக் காமப் பொருளாக்கொண்டு, நகைகளால் அணி செய்து, களிப்புற்றதென்று நான் கூறுவேன்.

நீண்டநாள் பழக்கம் இப்பொழுது நாட்டை வருத்துகிறது. சிறு வருவாயுள்ள ஒருவனுடைய நாயகியும், தன் நாயகனை வஞ்சித்தும், தன்னை வஞ்சித்தும், பொருள் சேர்த்து, நகைவாங்க எண்ணுகிறாள். பட்டினியால் நோய் மிகுந்து உயிர்

**நகைப்பித்து**

போகும் வேளையிலும் நகைப்பித்து அவளை விட்டு ஒழிவதில்லை. அவள் இறந்த பின்னரும், அவளது அறிகுறியாக, அவள் அணிந்திருந்த விலையுயர்ந்த உடைகளையும் பூண்களையும் நடுவீட்டில் வைத்து, அவளுடைய உறவினர்கள் போற்றுகிறார்கள். நகைகள் நடுவீட்டில் தெய்வங்களாகவும்

போற்றப்படுகின்றன! நமது நாட்டுப் பெண்மக்களுக்கு நகைமீதுள்ள பித்தை இந்நூல் முற்றும் எழுதிக்கொண்டே போகலாம்.

நகைப்பித்தால் சிலவிடங்களில் பெண்மக்கள் வாழ்வுங் குலைகிறது. ஒருத்திமீது எத்துணை எத்துணை ஆயிரம் ஆயிரம் ஏறி நிற்கின்றன! எத்துணை ஏழைமக்கள் உழைப்பு, பட்டினி, துயரம், கண்ணீர் ஒருத்தியின் கழுத்திலும் காதிலும் தலையிலும் ஏறி நிற்கின்றன! ஒருத்திமீதுள்ள ஒரு நகை எவ்வளவோ ஏழைமக்கட்கு உணவளிக்கும்; உடையளிக்கும்; தொழிலளிக்கும். அத்துணை ஏழைமக்களின் கலி தீர்க்க வல்லபொருள், நகைச்சுமையாய் இருப்பதால் என்ன பயன்? நகையில் அழகு உண்டா? அன்பு உண்டா? என்ன இருக்கிறது? 'அண்டை வீடுகளில் ஏழைமக்கள் பட்டினியால் வருந்த, நான் இவ்வளவு நகைகளைச் சுமந்துகொண்டிருப்பது அறமா' என்று நகைப்பித்துடைய பெண் இரங்குவாளா? நகைப்பித்து, பெண்ணின் இயற்கைக் குணமாகிய இரக்கத்தையும் சிதைக்கிறது!

நகையால் இரக்கமழிதல்

மூடப் பெண்ணின் நகைப்பித்து, ஏழைமக்களைத் தீய ஒழுக்கத்திலும் இறங்கச் செய்கிறது; அவர்களைப் பொறாமையுறச் செய்கிறது; களவாடச் செய்கிறது; சிலவேளைகளில் கொலையும் நிகழ்த்தச்செய்கிறது. நகையின் கொடுமை என்னே! என்னே! 'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்றார் திருவள்ளுவனார்.

நகையால் தீயொழுக்கம்

கல்வியறிவில்லாப் பெண்மக்கள் அவ்வொழுக்கத்தினும் நகையையே பெரிதும் ஓம்புகிறார்கள்.

நகைச்சுமையால் உடலுக்காதல் நலன் உண்டோ? ஒன்றுமில்லை. உடல் நலத்துக்கென முத்துமாலை, பவளமாலை, மணிபதிந்த தோடு முதலியவற்றை அணியலாம். சில மணிகளாலும் உடலுக்கு நலன் உண்டு என்று சொல்லப்படுகிறது. பொன்னுக்கும் அக்குணம் உண்டாம். உடல் நலத்துக்கென ஏற்பட்ட இவை, பின்னாளில் வெறுஞ் சுமை சுமைகளாக அணியப் பட்டன. இப்பொழுது முத்து முதலியவற்றின் குணநலன் கண்டு, எப்பெண்ணும் அவைகளை அணிவதில்லை. குணங்கண்டு அவைகளைப் பெண் அணிவளேல், சுமை சுமையாக அணியமாட்டாள். கலன்களாகவே அவைகள் இப்பொழுது அணியப்படுகின்றன. குணங்கண்டு நகைகளை அணியும் நல்லறிவு, மக்களுக்கு இருக்குமேல், போலி முத்து, பவளம், மாணிக்கம் இவைகளை ஏன் அவர்கள் அணிகிறார்கள்? சுகாதார முறைகளை நாடோறும் ஒழுங்காகக் கவனித்து, வாழ்வு நடாத்தும் பெண்மகள், உடல் நலத்துக்கெனவும் நகைகளை அணிய வேண்டுவதில்லை. இப்பொழுது உடல் நலத்தைக் கெடுக்கும் சுமையாகவன்றோ நகை துயர் செய்கிறது? அந் நகைப்பித்து, உள்ளத்தில் நுழையாதவாறு, இளம் பருவத்திலேயே இயற்கை வழிப் பெற்றோர் தம் பெண்மக்களை வளர்த்து வரல் நலம்.

நகையும் உடல் நலனும்

தலைமயிர்: பெண்மக்கள் தலைமயிரைப் பற்றி இரண்டோர் உரை கூற விரும்புகிறேன். தலைமயிர் உடையன்று. அஃது இயற்கைப் பொருள். அதையும் உடைபோலச் சில பெண்மக்கள் கருதுவதால், அதன் நினைவு எனக்கு இங்கே தோன்றிற்று. தலைமயிர் இயற்கைப் பொருளாதலால், அதையும் உடையெனக் கருதி, அதைப் பலவாறு அலைத்தல் அறியாமை. பெண்மக்களிற் சிலர் தலைமயிரை இப்பொழுது பலவாறு திரித்து வருகிறார். பெண்மக்கள் தலைமயிரைக் கெடுத்து வரல் அழகுக்கும், சுகாதாரத்துக்கும் ஊறு செய்வதாகும். பெண்மக்களுக்குத் தலையில் குறைந்தது பன்னிரண்டங்குலம் நீண்ட மயிர் இருப்பது நலம். இயற்கையில் அமைந்த மயிரைச் செயற்கையால் மாறுபடுத்த வேண்டுவதில்லை.

## அழகு

கல்வி அறிவு ஒழுக்கத்தானும், நல்லோர் இணக்கத்தானும், நல்வழியில் உடலோம்பிப் பொருந்திய உணவு கொண்டு, அன்புக் கடவுளைப் போற்றி, இயற்கையோடு இயைந்து வளர்ந்து வரும் பெண்ணின்பால், கண்ணுக்குப் புலனாகாத அழகுத் தெய்வம் கோயில் கொள்ளும். தூயமனதால் கற்பும், கற்பால் நல்லுடலும், நல்லுடலால் அழகும் அரும்புதல் மேலே சொல்லப்பட்டிருக்கிறது.

எல்லாவற்றிற்கும் மூலம் அகத்தூய்மை. அகத்தூய்மை புறத்தே அழகாக அரும்புகிறது. அழகுத் தெய்வம் வீற்றிருக்கும் பெண்ணே 'நன் மன

முடையாள்; நிறையுடையாள்; நல்லுடலுடையாள்' என்று கூறல் மிகையாகாது.

பெண்ணின் உற்ற வயதில் அழகு திரண்டு ஒளி வீசுகிறது. அவ்வழகோளி, ஆண்டவன் அருளொளி போன்றது. ஆண்டவன் அருளொளியால் உலகம் அலர்கிறது. பெண்ணின் அழகொளியாலும் உலகம் (பிள்ளைப் பேறு) அலர்கிறது. ஆண்டவன் படைப்பு நோக்கத்தை நிறைவேற்ற வந்தவளல்லளோ பெண்? கற்பின் திண்மையால் அரும்பும் அழகு, அன்பருக்குத் தெய்வமாகும்; புலவருக்குப் பாட்டாகும்.

அகிலத்துள்ள இயற்கை வனப்பெல்லாந் திரண்டு பெண் தெய்வமாகிக் காட்சி யளிக்கின்றன. 'பெண்ணின் முகம் எனது புத்தகம்' என்று அறிஞர் பைரன் என்பார் கூறி இருக்கிறார். இயற்கை வனப்பை ஓரிடத்தில் திரட்டிக் காட்சியளிக்கும் ஒருபெரும் அழகுநிலையம் என்றும் பெண்ணைக் கூறலாம். அத்தகை அழகு நிலையத்தை எச்சொல்லால் சொல்வது?

அழகோவியம்

எவ்வெழுத்தால் எழுதுவது? தெய்வச் சேக்கிழார் என்னும் ஓவியக்காரர் அவ்வழகு நிலையத்தை எழுத்தோவியமாக எழுதி இருக்கிறார். அவ்வோவியத்தை நோக்குவோமாக:

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்தன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ.

ஓவியநான் முகனெழுத ஒண்ணுமை உள்ளத்தான்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ.

அழகு நிலையத்தைப் படத்தில் பார்ப்பதினும் பாட்டில் பார்ப்பதில் இன்பம் உண்டு. வீடுகளில் தெய்வ உருவங்களின் படங்கள் தூங்குவதைப் பார்க்கினும், அவ்வுருவங்களின் பாட்டுகள் தூங்குவது சிறப்பு.

உற்ற வயதடைந்து, வயதுக்கேற்ற உறுப்புரம் பெற்று நிற்கும் 'புயல் சுமந்து விற்குவளை பவள மலர் மதிபூத்த விரைக் கொடி', தனது உற்ற வயதுன்னி, அகத்தூய்மை கெடுக்கும் எதையும் எண்ணுதலும் கூடாது. அவ்வெண்ணம் விரைக் கொடியை எரித்து விரை போக்கும். எத்துணைப் பேய்ச் சோதனைகட்கும் விரைக்கொடி இடந்தாராது வளர்வாளாக. அவள் பேய்ச் சோதனைக்கு இடந்தருவது, பின்னைத் தன் மாட்டுக் கனியவேண்டிய தாய்மையைக் கெடுப்பதாகும். பெண் வாழ்வின் நோக்கம், தாய்மை என்று முன்னரும் சொல்லப்பட்டிருக்கிறது. சிறு கவலைஈனத்தால் பெரும் பயனையா இழப்பது? தாய்மைக்குரிய கற்பையும், உடலையும், அழகையும் அழிப்பவள் பெரும் பாவி. அவள் இவ்வுலகிலேயே நரகத் துன்பம் எய்தல் கண்கூடு. தாய்மை நினைவின்றிக் கெட்டழிந்த பெண்மக்கள் கதைகள் பற்பல. ஆதலால், சகோதரிகள், 'இவ்வுடல், இவ்வழகு, இவ்வாழ்வு எல்லாம் தாய்மைப் பேற்றிற்கு' என்று ஒழுங்குபட்ட வாழ்வு நடாத்துவார்களாக. அவ்வாழ்வுடைய பெண்ணிற்குத் தாய்மைப் பேறு இறையருளால் காலத்தில் உண்டாகும்.

பேய்ச் சோதனை

அழகொழுக நிற்கும் பெண் மக்களிற் சிலர் மனதை வேறு வழியில் விடாமலும், திருமணம் விரும்பாமலும் வாழ்கிறார். இவ்வாழ்வுங் கூடாது. இதனால் வாழ்வின் நோக்கம் நிறைவேறாது, அரை குறையாய் அழிந்து படும். ஒருவனோடு வாழாத ஒருத்தி முழுப் பெண்தன்மை எய்தினவள் அல்லள். ஒத்த நலனும், ஒத்த கல்வியும், பிறவும் உடைய ஒருவனுடன் ஒருத்தி வாழ்ந்து, தாய்மைப் பேறு பெற்று, அன்பு நிலையைக் காண்டல் அறிவுடைமை. அது பெண்ணின் பெருமையுமாகும். இது குறித்துச் சிறிது விரிவுரை கூற விரும்புகிறேன்.

மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ
தாழிருங் கூந்தல் தையால் நின்னை.

—இளங்கோ அடிகள்

அழகெனும் அழகுமோர் அழகு பெற்றதே.

—கம்பன்



# ரு. இறைவழி



[பெண் பாதி ஆண் பாதி ஒன்றல் முழு மனிதத் தன்மை - இயற்கையின் நோக்கு - இறைவழி நிற்றல் - பிரவர்த்தி நிவர்த்தி - படைப்பு நோக்க நிறைவேற்றம் இல்லறத்தி லிருத்தல்-படைப்புப் பொருள்-உயிர்களின் வரவு - அவ்வரவுக்குத் துணை - ஆண்டவன் உதவி - கடவுள் படைப்பு நிகழ்த்தும் முறை - உடலமைப்பின் நுட்பம்-தனித்த வாழ்வு கூடாது.]

**யாவரும் மடந்தை மாரோ டில்லறத் தொழுகுந் தன்மை**
**மேவரப் பணித்தான்.** —கச்சியப்பர்

பெண் கற்பன கற்று, கேட்பன கேட்டு, நல் வழியில் வளர்ந்து, உற்ற வயதடைந்து நிற்கிறாள். அவ்வாறே ஆணும் வளர்ந்து உற்ற வயதடைந்து நிற்கிறான். பின்னர் இருவர் நிலையும் எங்ஙனம் முற்றுறல் வேண்டும்? அவள் அங்ஙனே தனித்தும், இவன் இங்ஙனே தனித்தும் வதிந்து மாய்தல் வேண்டுங்கொல்? இல்லை; இல்லை. இருவரும் தனித்து நின்று சாவார்களாயின், அவர்களது பிறவி நோக்கம் நிறைவேறுவதில்லை என்க.

**தனித்த வாழ்வு**

பெண் ஆண் சேர்ந்த ஒன்றே வாழ்வு என்பது. வாழ்வின் ஒரு பாதி பெண்; மற்றொரு பாதி ஆண். இப்பாதியாக இவர் எத்துணை நாள் உலகில் உறைவது? இருபாதியும் சேர்ந்த ஒன்றே முழு மனிதத் தன்மை. அத்தன்மைப் பேற்றிற்கென்றே பெண் ஆண் வடிவங்கள் இயற்கையில் அமைகின்றன. இல்லையேல் வடிவங்கள்

**முழு மனிதத் தன்மை**

வேறுவழியில் அமையலாமல்லவோ? படைப்பில் வடிவங்கள் அமைந்துள்ள ஒழுங்கை நோக்குழிப் பெண்ணுக்கும் ஆணுக்குமுள்ள இயற்கைத்தொடர்பு நன்கு புலனாகும்.

தனித்து ஒரு பாதியாக நிற்கும் பெண்ணையும், தனித்து மற்றொரு பாதியாக நிற்கும் ஆணையும் இயற்கை கூட்டும் அழகை என்னென்று சொல்வேன்?

**இயற்கையின் நோக்கு**

இருவர்பாலும், உற்ற வயதில் ஒரு வித இன்ப உணர்வு எழுகிறது. இவ்வுணர்வு ஏன் எழுதல் வேண்டும்? அதற்கு ஏதாயினும் பொருள் இருத்தல் வேண்டுமன்றோ? அவ்வுணர்வே, இரு பாதியையும் ஒன்றாகப் பிணித்துப் பிறவி நோக்கை நிறைவேற்றும் இயற்கை அன்புக் கயிறென்க.

இறைவன், பிறப்பில் பெண் ஆண் வடிவ அமைப்பு வகுத்து, அவ்விரண்டையும் ஒருமைப்படுத்த இயற்கையில் இன்ப உணர்வளித்துள்ள நுட்பத்தை ஓர்ந்து,

**இறைவழி நிற்றல்**

ஒருத்தியும் ஒருவனும் அன்பால் ஒன்றி வாழ்வது, அவ்விறை வழி நிற்பதாகும். அங்ஙனமின்றி, இருவரும் தனித்து நின்று, இறைவனை மட்டும் வழிபடல், அவ்விறைவன் வழி நிற்பதாகாது.

இறைவன் ஆணை வழியே உலகில் ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழும் வாழ்வே பெரிதும் நடைபெறுகிறது. இறைவழியே உலகம் இயங்கி வருகிறது. இதைப்பற்றிப் பேச்சும் வேண்டுவதில்லை; எழுத்தும்

வேண்டுவதில்லை. ஆயினும் இடைக்காலத்தில் இறை வழிக்கு மாறுபட்ட போலித்துறவு என்னும் ஒன்று

**போலித் துறவு**

தோன்றி, அருள்நெறிக்கு இடையூறு செய்து வரலான், அதுபற்றிச் சில உரையாதல் பகரவேண்டுவது எனது கடன்.

'பெண்ணும் ஆணும் கூடி வாழ்வது இறைநெறி யல்லாத 'பிரவர்த்திமார்க்க' மென்றும், பெண் ஆணைத் துறந்தும், ஆண் பெண்ணைத்துறந்தும், தனித்து நின்று தவங்கிடப்பதே இறைநெறி நிற்கும் 'நிவர்த்தி

**பிரவர்த்தி நிவர்த்தி**

மார்க்க' மென்றும், பெரியோர்களும் நூல்களும் முழங்கா நிற்க, நீவிர் முற் றும் மாறாக இறை வழி குறிப்ப தென்னை?' என்று சிலர் வினவலாம். இதற்கு ஒல் லும் வகை இயைந்த விடை பின்னை இறுப்பன். ஈண்டு எடுத்துக்கொண்ட 'இறைவழி' என்பதற்கேற்பச் சிறிது கூறுகிறேன்.

பெண்ணும் ஆணும் பிரிந்து வாழல் நிவர்த்தி என்று கொள்வோர், கடவுள் வழி விடுத்து வேறு வழிச் செல்வோராவர். கடவுள் படைப்பு முயற்சிக்

**கடவுள் வழி நிற்றல்**

குத் துணை செய்யா தொழிவோர், எங் ஙனங் கடவுள் வழி நிற்போராவர்? இறைவன் படைப்புத் தொழில் எவர் பொருட்டு நடாத்துகிறான்? தன் பொருட்டா? உயிர் கள் பொருட்டே அவன் அத்தொழில் புரிகிறான். அம் முயற்சிக்குத் துணைநில்லாதார், எங்ஙனங் கடவுளிடத் தும் உயிர்களிடத்தும் அன்புடையவராவர்?

கடவுள் படைப்புத் தொழிலைப்பற்றிப் பலதிறக் கருத்து வேற்றுமைகள் உண்டு. அவைகள் சமயவாதங்களின் பாற்படும். அவைகளில் நுழைய வேண்டுவதில்லை. அஃதும் இந்நூலிற்கு வேண்டற்பாலதன்று.

கடவுள் ஓரிடத்திருந்து கையால் படைப்புத் தொழில் செய்கிறார் என்பது எனக்கு விளங்கவில்லை. கட

**படைப்பு என்பதன் பொருள்**

வுள் என்பது இன்ப அன்பாக யாண்டும் நீக்கமற நிறைந்துள்ள ஒரு பேரறிவு. அஃது இயற்கை வாயிலாகத் தன் வினையை ஆற்றி வருகிறது. அவ்வினைகளுள் ஒன்று 'படைப்பு' என்பது. 'படைப்பு' என்பது, இல்லாத ஒன்றையோ அல்லது இல்லாத ஒன்றினின்றும் ஒன்றையோ புதிதாக உண்டுபண்ணுவதன்று. உள்ள ஒன்றே காரியப்படுவது 'படைப்பு' என்று சொல்லப்படுகிறது. அதற்குக் 'கடவுள்' என்னும் அறிவு, நிமித்தமாக நிற்றலான், அது, 'கடவுள் படைப்பு' என்று வழங்கப்படுகிறது. இஃது உபசாரம்.

இனி எடுத்த பொருள்மீது செல்வோம். ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழாதொழிவது, கடவுளிடத்தும் உயிர்களிடத்தும் அன்பின்மையை எங்ஙனங் குறிக்கும் என்பதைச் சிறிது ஆராய்வோம்.

எவ்வாராய்ச்சிக்கும் கண்ணுக்குப் பொருளாக உள்ள உலகையும், ஒருவனது அநுபவத்தையும் அடிப்படையாகக் கொள்வது வழக்கம். அவ்வழி பற்றியே யானுஞ் செல்கிறேன். இவ்வுலகில் யான் பிறந்தேன்; வளர்கிறேன். எனது அநுபவத்தில் அறிவு அறியாமை, இன்ப துன்பம், ஒளி இருள், நினைப்பு மறப்பு

ஆகிய இரு நிகழ்ச்சியும் என்மாட்டு உறுதல் காண்கிறேன். முழு அறிவோ, முழு இன்பமோ, முழு ஒளியோ, முழு நினைவோ தோன்றக் காண்கிறேனில்லை. அவ்வாறே முழு அறியாமையோ, முழுத்துன்பமோ, முழு இருளோ, முழுமறப்போ தோன்றக் காண்கிறேனில்லை. இவ்வுலகில் இரண்டும் விரவி நிற்கின்றன. எனக்கு அறிவும் விளங்குகிறது; என்னை அறியாமையும் மறைக்கிறது. என்னில் இன்பமும் எழுகிறது; என்னைத் துன்பமும் சூழ்கிறது. நான் ஒளியையும் காண்கிறேன்; இருளையும் பார்க்கிறேன். எனக்கு நினைப்பும் உண்டு; மறப்பும் உண்டு.

**அறிவு அறியாமை முதலியன**

இச்சிறு அறிவு-இன்பம்-ஒளி-நினைவு - கொண்டு, முழு அறிவு-இன்பம்-ஒளி-நினைவு-உண்மையை நிறுவலாம். அங்ஙனே சிறு அறியாமை முதலியன கொண்டு, முழு அறியாமை முதலியவற்றை நிறுவலாம். முதலின்றிச் சினை எங்ஙனந் தோன்றும்? எனவே, முழு அறிவு முதலியன நிலவும் இடத்துக்கும், முழு அறியாமை முதலியன மலியும் இடத்துக்கும் இவ்வுலகம் இடைப்பட்ட தென்க.

**உயிர் வரவு**

இவ்வுலகில் வாழும் யான் யாண்டிருந்து ஈண்டுப் போந்திருத்தல் வேண்டும்? முழுஅறிவு-இன்பம்-ஒளி நினைவு-உள்ள ஓரிடத்திருந்தா அல்லது முழு அறியாமை-துன்பம் - இருள்-மறப்பு-செறிந்த ஓரிடத்திருந்தா ஈண்டுப் போந்துளேன் என்பது சிந்திக்கப்படல்வேண்டும். முழுஅறிவும்-இன்பமும் - ஒளியும் - நினைவும் - நிலவும் ஓரிடத்திருந்து,

அறிவு அறியாமையும்-இன்ப துன்பமும்-ஒளியிருளும்-நினைப்பும் மறப்பும் - விரவி நிற்கும் இவ்வுலகை நான் ஏன் நோக்கல் வேண்டும்? நிழலில் வாழும் ஒருவன் கானலில் வாழ ஒருப்படுவனோ? கானலில் வருந்தும் ஒருவன் நிழல் நாடி ஓடுதல் இயல்பு. ஆகவே, யான் முழு அறியாமை - முழுத் துன்பம்-முழுஇருள் - முழு மறப்பு - செறிந்த இடத்திருந்தே, இரண்டும் இலங்கும் இவ்வுலகம் போந்திருத்தல் வேண்டும். ஈங்கிருந்து முழுஅறிவு - முழுஇன்பம் - முழுஒளி - முழுநினைவு - பெற முயன்று வருகிறேன்.

முழு அறியாமையால் விழுங்கப்பெற்றுத் துன்ப இருளில், எனது நிலையுணராது, செயலின்றிக் கிடந்த யான், இவ்வுலகிற்கு எப்படி வந்தேன்? எனக்கோ அந்நிலையில் அறிவு விளக்கமும் இல்லை; செயலும் இல்லை. பாம்புதீண்டிய ஒருவனது நிலைக்கு எனது நிலையை ஒப்பிடலாம். அந்நிலையிலிருந்த யான், பிறர் துணையின்றி, இங்கு எங்ஙனம் வருதல்கூடும்? ஒருவர் துணைகொண்டே யான் ஈண்டுப் போந்திருத்தல் வேண்டும்.

**வரவுக்குத் துணை**

அவ்வொருவர் யாவர்? அவர் எத்தன்மையராய் இருத்தல் வேண்டும்? அவர் என்னைப்போல அறியாமையால் விழுங்கப் பெற்றுத் துன்ப இருளில் கிடப்பவராய் இருத்தல் கூடாது. அறியாமைத் துன்ப இருளில் செயலின்றிக் கிடப்போர், அந்நிலையிலுள்ள மற்றொருவர்க்கு என்ன செய்தல்கூடும்? குருடனுக்குக் குருடன் வழிகாட்டிய கதையாகவே முடியும். ஆதலால், அறியாமைத் துன்ப

**துணைவர்இயல்**

இருட்கட்டில்லா ஒருவரே, எனக்குத் துணை நின்று, இவ்வுலக வாழ்வை நல்கியிருத்தல் வேண்டும். அவ்வொருவரையே உலகம் கடவுள் என்று போற்றுகிறது.

கடவுள், அறியாமை - துன்பம் - இருள் - மறப்பு- முதலிய எக்கட்டும் இல்லாதவர் என்பதை ஈண்டுப் பெரிதுங் கவனித்தல் வேண்டும். எக்கட்டு மில்லாக் கடவுள், கட்டிலா அறிவாய் இன்பமாய் ஒளியாயிருத்தல் வேண்டுமென்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. கட்டிலா அறிவில் என்றும் இன்பம், அன்பு, இரக்கம், பிறர் நலநாட்டம் முதலிய அருட் குணங்கள் இருத்தல் இயல்பு. இதனை வலியுறுத்த வேறோர் எடுத்துக்காட்டும் வேண்டுவதில்லை. மக்களாகிய நமது அநுபவமே சாலும். நமது அறிவு, கட்டினின்றும் நீங்கி, விளக்க முறும்போது, நம்மாட்டு அன்பு, பொறை, இரக்கம், பிறர்க்குதவல் முதலிய நற்குணங்கள் தோன்றுதல் உணர்கிறோம். நம்மாட்டு அறியாமை மிகுந்து நிற்கும்போது, அவா, பொறாமை, வன்கண்மை, பிறர்க்குக் கேடு சூழல் முதலிய தீக்குணங்கள் எழுதல் உணர்கிறோம். நல்லெண்ணங்கட்கும் இன்பத்துக்கும் பிறப்பிடம் அறிவு என்பதும், தீய எண்ணங்கட்கும் துன்பத்துக்கும் தோற்றுவாய் அறியாமை என்பதும் அவரவர் அநுபவத்தில் உணரக் கிடப்பனவாம். கட்டினின்றும் வெளியாகும் அறிவிற்கே அன்பு இரக்கம் முதலிய குணங்கள் உண்டெனில், அநாதியாக எக்கட்டு மின்றி என்றும் அறிவாய் ஒளிரும் பரம்பொருளிடத்து எத்தகை அன்பு-எத்தகை அருள்-இருக்கும்

அறிவு அறியாமை இயல்

என்பதை எழுத்தால் எழுதல் முடியாது. அன்பே அது. அருளே அதன் வடிவம்.

நீரில் தண்மை போலவும், நெருப்பில் வெம்மை போலவும், மலரில் மணம் போலவும் ஆண்டவனிடத்தில் அருட் குணம் இயல்பாய் அமைந்திருக்கிறது. அவ்வருள் வாளா கிடக்குமோ? ஒவ்வொன்றும் தன் தன் வேலையை நிகழ்த்துவது போல, அருளும் தன் வேலையை நிகழ்த்தி வருகிறது. ஒருவனுக்கு அருள்-இரக்கம்-தயை-பெரிதும் எப்பொழுது சுரக்கிறது? பிறர் துன்பம் காணும்பொழுதன்றோ? உயிர்களின் துன்பத்தைக் காணக் காண இறையருள் சுரந்த வண்ணமாயிருக்கிறது. உயிர்களின் துன்பத்துக்கும் ஓய்வில்லை; ஆண்டவன் அருள் சுரப்பிற்கும் ஓய்வில்லை. உயிர்களிடத்துத் துன்பமுள்ள மட்டும் ஆண்டவன் அருளும் சுரந்து கொண்டேயிருக்கும். இரண்டின் எல்லை கண்டு கூறல் எவரால் இயலும்? ஆகவே இரண்டும் அநாதியென அறிஞர் கூறுகிறார்.

அருளியல்

உயிர்கள் அறியாமையால் விழுங்கப் பெற்றுத் துன்ப இருளில் கட்டுப்பட்டுக் கிடப்பதைத் திருவருளையே திருமேனியாக உடைய ஆண்டவன் கண்டு வாளா கிடப்பனோ? ஆண்டவன், அவைகள் மீது இரக்கங்கொண்டு, அவைகளைத் துன்பத்தினின்றும் நீக்கித், தன்னைப்போலாக்கத் திருவுளங் கொள்கிறான். அறிவு விளக்கமுஞ் செயலுமின்றிக் கிடக்கும் உயிர்கள் மீது, ஆண்டவன் அருளொளி பட்டதும், அவைகட்குத் தனு கரண புவன போகங்கள் கூடு

ஆண்டவன் உதவி

கின்றன. 'கண்ணுதலோன் தன் கருணைக் கண் காட்ட வந்தெய்தி' என்றார் மாணிக்கவாசகனார். கட்டிற்கிடந்த உயிர்கட்குத் தனு முதலியன கிடைத்ததும், அவைகள் சிறிது அறிவு விளக்கமும் செயலும் பெறுகின்றன. இந்நிலையே, அறிவு அறியாமை, இன்ப துன்பம், ஒளி இருள், நினைப்பு மறப்பு முதலிய இரண்டுங்கலந்த உயிர்களின் இவ்வுலக வாழ்வென்க. இந்நிலையினின்றும் முழு அறிவு விளக்கம்பெற்று, முழு இன்பநிலை எய்த முயலவேண்டுவது உயிர்கள் கடமை.

அறியாமைத் துன்ப இருட்கட்டில் கிடந்த உயிர்கள், அறிவு விளக்கமும் செயலும் பெறும்பொருட்டு ஆண்டவன் புரியுந் துணையன்றோ துணை! ஆண்டவன் உயிர்கள்மீது கொண்டுள்ள அருட்பெருக்கிற்கோர் அளவும் உண்டோ? அப்பெருக்கை ஏழையேன் என்னென்று புகழ்ந்துரைப்பேன்?

கடவுள் படைப்பு நிகழ்த்தும் முறை

இனித் துன்ப இருட்கட்டில் கிடக்கும் உயிர்கட்குத் 'தனு' என்னும் உடலை இறைவன் எவ்வழியில் கூட்டுகிறான் என்பதை உன்னுவோமாக. கட்டிற் கிடக்கும் உயிர்களை, இறைவன் தனது கையாற் பிடித்துத் தூக்கி, உடல் தந்து, அவைகளை இவ்வுலகில் கொணர்ந்து விடுகிறானில்லை. ஆண்டவனோ கைகால்கள் இல்லாதவன். பின்னை எவ்வழியில் ஆண்டவன் தன் படைப்புத் தொழிலைச் செய்கிறான்? ஆண்டவன் எதையும் இயற்கை வாயிலாக நிகழ்த்துகிறான். ஆண்டவன் இயற்கையில் நீக்கமற நிறைந்திருப்பவன். அண்டபிண்ட சராசரங்க

ளெல்லாம் அவன் வடிவம். அவன் எங்கும் பொருந்தி இருத்தலால், அவனை 'இறைவன்' என்று போற்று கிறோம். எங்கும் அறிவாகக் கலந்து நிற்கும் இறைவன் ஓரிடத்திருந்து படைப்புத் தொழிலைச் செய்கிறு னில்லை. அவனது படைப்புத்தொழில் ஆங்காங்கே எங்கணும் நிகழ்கிறது. இயற்கை வாயிலாக ஆண்டவன் எல்லாஞ் செய்கிறுன். உயிர்கள் தோற்றத்துக் கென, முன்னரே உடல் தாங்கித் தோன்றிய உயிர்களிடத்துச் சில இயற்கை அமைப்புகளை ஆண்டவன் வகுத்திருத்தல் ஈண்டுக் கருதற்பாலது.

பெண் ஆண் என்னும் இரு பாலாரும் உற்ற வயதடைந்ததும், இருவர் மாட்டும் ஒருவித இன்ப உணர்வு இயல்பாக எழுகிறது. இவ்வுணர்வு உயிர்களிடத்து அமைந்திருப்பதன் நோக்கம் என்னை? அவ்வின்பந்தோன்ற உறுப்புக்கள் அமைந் திருப்பதன் நோக்கம் என்னை? அன்பர்களே! உன்னுங்கள். இன்பத் தோற்றத்துக்கென மெல்லுறுப்புக்களும், அவைகளின் காப்புக்கெனப் பருவுறுப்புக்களும்,

உடல் அமைப்பின் நுட்பம்

அவைகளின் அரணுக்கென நரம்பு-என்பு-தசை-தோல் முதலியனவும் இயற்கையில் அமைந்திருக்கும் நுட்பத்தை உன்ன உன்ன, அவைகளின் நோக்கம் புலனுகும். உடற்கூற்றின் அமைப்பும், அதன் பயனுக எழும் இன்பமும், பெண் ஆண் சேர்க்கை இயற்கையில் பொருந்திய தொன்று என்பதைச் செவ்வனே அறிவுறுத்துகின்றன. இதைப்பற்றி விரிவுரைவேண்டுவதில்லை. இச்சேர்க்கையின் வழித் துன்ப இருளிற்

கட்டுண்டுகிடக்கும் உயிர்கட்கு ஆண்டவன் உடல் ஈந்து இவ்வுலக வாழ்வை நல்குகிறான். ஆண்டவன் படைப்பு இவ்வழி நிகழ்ந்து வருகிறது.

பெண் ஆண் சேர்க்கை, உயிர்களின் துன்ப நீக்கத்துக்கு இன்றியமையாததாயிருக்க, அதை வெறுப்பதும் துறப்பதும் அறமா என்று கேட்கிறேன். பெண் ஆணை விடுத்துத் தனித்து நிற்பதும், ஆண் பெண்ணை விடுத்துத் தனித்து நிற்பதும், துன்ப இருளில் கிடக்கும் உயிர்களின் கட்டை நீக்க மறுத்து நிற்றலாகும். இதனால் உயிர்களின் துன்பமும் நீங்குவதில்லை; ஆண்டவன் நோக்கமும் நிறைவேறுவதில்லை. எனவே, துறவு என்னும் பெயரால் ஒருவரை ஒருவர் நீத்து நிற்போர் உயிர்களிடத்தும் கடவுளிடத்தும் எங்ஙனம் அன்புடையராவர்? உயிர்களின் துன்ப நீக்கத்துக்கு ஆண்டவன் கோலியுள்ள வழிநில்லாது, ஆண்டவனைப் போற்றுவோர் எங்ஙனம் அவன் அருள் பெறுதல் கூடும்? இறைவழி நிற்போரே இறைவனிடத்தும் உயிர்களிடத்தும் அன்புடையராவர்.

**தனித்த வாழ்வு கூடாது**

'துறவு துறவு' என்று ஒதுங்கும் பெண்மகளும் ஆண்மகனும் யாண்டிருந்து முளைத்தனர்? அவர் தாய்தந்தையரின்றியோ முளைத்தனர்? அன்னார் உடல் தாங்கி இவ்வுலக வாழ்வைப்பெற்றதுபோல, மற்ற உயிர்களும் அவ்வாழ்வைப் பெறுதல் வேண்டாமா? அதற்குத் தடையாக நிற்பது அறிவுடைமையா?

உயிர்கள் உடலோடு கூடி வாழ்வு பெற்ற பின்னரே, அறிவு விளக்கமும் செயல் நிகழ்ச்சியும் பெறு

கின்றன. அவ்வறிவுப் புணை கொண்டே உயிர்கள் பிறவிக்கடல் கடந்து இன்பக்கரை நண்ணுதல் வேண்டும். அவ்வின்பக்கரை நண்ணுதற்குக் கருவியாகவுள்ள உடல்வாழ்வைப் பெறப் பெண்ணும் ஆணும் கூடி வாழா தொழிவரேல், உயிர்கள் நிலை என்னாகும்? கருணையில்லா மக்களே மணவாழ்வை வெறுப்பார்கள்.

ஒவ்வொரு பெண்ணும் ஆணும் 'துறவு துறவு' என்று மணவாழ்வை வெறுத்து நிற்பின் உலகவளர்ச்சி அற்றுப்போகும். உயிர்களின் துன்பமும் நீங்காது. இறைவனது படைப்பு நோக்கமும் நிறைவேறாது. இத்துணை இடருக்குக் காரணராக உள்ள கூட்டத்தார், கடவுளிடத்தும், உயிர்களிடத்தும், தம்மிடத்தும் அன்பில்லாதவர் என்று பன்முறை அறை கூவுகிறேன்.

துறவொழுக்கம் நிவர்த்தி மார்க்கம் என்று பெரிதும் நமது நாட்டு நூல்கள் கூறுவ துண்மை. துறவொழுக்கமும் நிவர்த்தி மார்க்கமும் பெண்ணை வெறுக்குமாறு ஆணிற்கும், ஆணை வெறுக்குமாறு பெண்ணிற்கும் அறிவுறுத்தவில்லை. அவைகளின் நுட்பங்களைப் பின்னே கூறுவேன்.

பெண்ணும் ஆணும் கூடி வாழல் இறைவழி நிற்றலென்றும், அங்ஙனம் வாழாதொழிவது இறைவழி நிற்பதாகாதென்றும் இவ்வதிகாரத்தில் கூறினேன். இனி இயற்கை நெறிக்கும் பெண் ஆண் சேர்க்கை வேண்டற்பாலதென்பதையும், இல்லையேல் உலகில் பல துன்பங்கள் விளையும் என்பதையும் சிறிது விரித்துக் கூறப் புகுகிறேன்.

"Marriage is the nursery of heaven"—*Jeremy Taylor.*



# ௬. இயற்கை அறம்



[இறையும் இயற்கையும்-நீத்தற் பொருள் - குணத் தொகுதிகள் - இயற்கை செயற்கை - திருக்குறள் உலகம் - அறம் கடவுள்நிலை-பொருளும் இன்பமும் - அரசும் இல்லரசும் - அறமும் கடவுளும் - படைப்பை வெறுத்தல் கடவுளை வெறுத்தல் - விடுதலைக்கு வழி-இயற்கை நிலை - போலித் துறவால் விளையுங்கேடு - அமைப்பின் நோக்கம் - உயிர்நிலைச் சிறப்பு - செயற்கை வினைகள் (வேசையர் கூட்டம்; காமுகர் ஈட்டம்; நோய்க் குழு ; முஷ்டிமைதுனம் ; மருந்துண்ணல்; புலனடக்கம்; வாளாகிடத்தல்) - அஞ்ஞானம் மெய்ஞ் ஞானம் - நீத்தல் அல்லது துறவு (தொல்காப்பியனார் இறையனார் திருவள்ளுவனார் மாணிக்கவாசகனார் கோலிய அறநெறி - ரவீந்தரர் போக்கு - கருத்து வேற்றுமைக்கு மதிப்பு - மூவாசை - பெண்ணை நீத்தல் ஞானமாகாது - திருவள்ளுவர் வழி விளக்கம் - பெண்ணை விடுத்தோடல்துறவன்று-காமக்கொடுமை-மனமாசகற்றும் வழி - மாசற்ற நெஞ்சில் அன்புக் கடவுள் கோயில் கொள்ளல் - கல்விப் பயன் இல்லறம் - இல்லறத்தில் தன்னலக்கேடு - பிள்ளைப் பேற்றில் தியாகம் - பெண்ணை வெறுத்தவன் ; பெண்ணைக் கொண்டவன் - இல்லறத்தால் அன்பு உயிர்களிடம் பரவல் - விருந்தோம்பலின் நுட்பம் - நீத்தார் பெருமை - உண்மைத் துறவு - துறவைப் பற்றிய ஐயப்பாடு - பெண்ணுடன் வாழலும் ஆசை துறத்தலும் - நீத்தார் பெருமை - அந்தணர் நிலை செந்தண்மை பூண்டொழுகல் - 'பெண் வழிச்சேறல்' என்னும் அதிகாரம் - திருவள்ளுவரும்

துறவும் - பிறப்பில் சாதிவேற்றுமை இல்லை என்பது- ஆச்சிரம நோக்கம் - தவம் என்பது பெண்ணைத் துறப்பதன்று) - போலித்துறவும் உண்மைத் துறவும் (போலித்துறவின் நுழைவு - மகாத்மா காந்தியும் இல்லறமும் - காலமும் விதியும் - புத்தர் பெருமான்- தொண்டும் இல்வாழ்வும் - கிறிஸ்து மணிமேகலை-புத்தர் பெருமான் காலத்திய அறம் - தொண்டு நிலையின் பின்னை மாற்றம் - மடாதிபதிகளும் வாழ்க்கைத் துணையும் - பெண்ணை வெறுக்கும் போலித்துறவு - தற்காலச் சந்நியாசம் - அறத்தின் பொருள் மாற்றம் - அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை - சிற்றினக்கட்குப் புகலிடம் போலிச் சந்நியாசம்-உண்மை வேதாந்தமும் பெண்ணும் - பெண்ணை வெறுத்த சந்நியாசிகள் பாடு - போலிச் சந்நியாசிகள் எழுதிய நூல்கள்- அறம் வேறு, போலிச் சந்நியாசம் வேறு - சீர்திருத்தக்காரர்கள்) - ஞானிகள் - பட்டினத்தார்; அருணகிரியார்; நம்மாழ்வார்; மாணிக்கவாசகர் - இல்லறம் (இல்லறம் துறவறம் - திருவள்ளுவர் கருத்து - துறவு இல்லறத்தின் ஒரு கூறு - பெண்ணுடன் வாழும் நோக்கம் - பேரின்பம் சிற்றின்பம் - வீடு) - மகாத்மா காந்தி, ரவீந்தரர், நக்கீரனார், நச்சினார்க்கினியர் இவர்களின் கருத்து.]

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன். —திருவள்ளுவர்

இறைவழி எதுவோ அதுவே இயற்கை என்பது. எவன் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடாத்துகிறானோ, அவன் இறைவழி நிற்பவனாகிறான். இயற்கையோடு இயைந்து நிற்றலை உலகோர் அறமெனக் கூறுப. அக்கருத்துப் படவே ஈண்டு இயற்கை

நெறியை 'இயற்கை அறம்' என்று குறித்தேன். உலகில் அறமெனும் பெயரால், சில செயற்கை முறைகளும் நிகழ்ச்சியிலிருத்தலால், நேரிய அறத்தை இயற்கை அறமெனக் கோடல் தவறாகாது.

இறையும் இயற்கையும்

இறை-இயற்கை-என்னுஞ் சொற்களைக் கொண்டு, இரண்டிற்கும் பிரிவு கற்பித்தல் கூடாது. இறைவனை விடுத்து இயற்கை இயங்குவதில்லை. இயற்கையை நீத்து இறை நிற்பதில்லை.

இறைவனைப் பற்றி ஏழையேன் என் சொல்ல வல்லேன்! இறைவன் வாக்குமனங் கடந்து நிற்பவன்; உருவில்லாதவன்; யாண்டுங் கட்டின்றி அகண்டமாக நீக்கமற நிற்பவன். அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்து நிற்கும் அவ்விறைவனை, இயற்கை வாயிலாகவே, மெய்யறிவால் உணர்தல் வேண்டும். இறைவனது உண்மையை உணர்த்துங் காட்சிப் பொருள் இயற்கையேயாகும். அவ்வியற்கை வாயிலாகவே இறைவன் அருட்டொழில் நிகழ்ந்து வருகிறது. இயற்கை, இறைவனது தொழிற் சக்தியாய் விளங்குகிறது. இறையுண்மை யுணர்ந்து, அழியாத இன்பம் நுகரவேண்டுமேல், அதற்குக் காட்சிப் பொருளாய இயற்கைப் புணையையே பற்றல் வேண்டும். இயற்கையை விடுத்து, இறைவனை உணர முயல்வது, கானற்சலத்தை நம்பி ஓடினவன் கதையாக முடியும். இறைக்குரிய வழி இயற்கை இயற்கையே. அவ்வியற்கைக்கு அரணாமாறு வாழ்வு நடாத்துவோர் இறையின்பம் நுகர்தல் திண்ணம். 'இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ

டிசைந்த வாழ்வு' என்னுந் திருவாக்கின் நுட்பத்தை ஓர்க.

இறை இன்பத்துக்கு 'அதை விடல்வேண்டும் இதை விடல் வேண்டும்' என்று சொல்வோரும் உளர்; அவர்களால் எழுதப்பெற்ற நூல்களும் உண்டு. 'விடல்' எனில் எதை விடுவது? எதுவும் இயற்கையின் கூறுகவே இருக்கிறது? அவ்வியற்கையே இறை உண்மையைத் தெரிவிக்கிறது. அதை விடுத்து இறை இன்பத்தை எங்ஙனம் நுகர்தலகூடும்? இயற்கையை நீத்து எங்ஙனம் உலகில் வாழ்தல் முடியும்? இயற்கையை நீக்கப்புகின், முதலாவது இயற்கையாலாய உடலை நீத்தல் வேண்டும். உடலை நீத்து ஞானத்தைப் பெறுவது எப்படியோ தெரியவில்லை!

பின்னை 'நீத்தல்' என்று சொல்லப்படுவதன் பொருள் என்னை? இயற்கைக்கு மாறுபட்ட செயற்கையை நீத்தலையே, 'நீத்தல்' என்பது குறிப்பதாகும்.

**நீத்தற் பொருள்**

செயற்கை எது? அதை இருகூறுகப் பிரிக்கலாம். ஒன்று புற உலகில் மனிதன் கையால் செய்வது; இன்னொன்று மக்களின் அக உலகிலிருப்பது. அக உலகிலுள்ள செயற்கை அழியின், புற உலகச் செயற்கை தானே அழியும். அகத்தில் இயற்கை இன்பம் தோன்றப் பெறுவோர், புறத்தேயுள்ள இயற்கை இன்பத்தையும் செவ்விதில் நுகர்வர். உலகில் மக்கள், செயற்கைப் பொருட்களில் வேட்கை கொள்வதற்குக் காரணமாக நிற்பன, அவர்கள் உள்ளத்துள்ள செயற்கைக் குணங்களேயாம். அக்குணங்களை நீத்தால், மக்கள் செயற்கை நரகத்துக்கு இரையாக

மாட்டார்கள். எனவே, 'நீத்தல்' என்பது அக்குணங் களினின்றும் நீத்தலைக் குறிப்பதென்க.

அக்குணங்கள் யாவை? அழுக்காறு - அவா - வெகுளி முதலியன. அவைகள் இயல்பாக மக்களிடத் தில் பதிந்து கிடக்கின்றன. இயல்பாக உள்ள இக் குணங்களைச் 'செயற்கையெனச் செப்பல் நியாயமோ' என்று சிலர் வினவலாம். இச்செயற்கை, உலக வழக் கில் சொல்லப்படுஞ் செயற்கை போன்றதன்று. இதனை இயற்கைச் சேயற்கை எனச் செப்பல் பொருந் தும்; அதாவது மக்களுடன் இயல்பாகத் தோன்றி, மக்களை அழிப்பது. அது பயிருடன் முளைக்கும் களை போன்றதென்க.

மக்களிடத்து இருவித குணத்தொகுதி காண் கிறோம். ஒன்று, பொறுமை-அன்பு - அருள் - முதலிய குணத்தொகுதி; மற்றொன்று, அழுக்காறு - அவா - வெகுளி முதலிய குணத்தொகுதி.

**குணத் தொகுதிகள்**

முன்னையது மக்கள் வாழ்விற்குக் கேடு சூழாது, இயற்கையோடு இயைந்து இறைஇன்பத்தைக் கூட்டுதற்குத் துணைநிற்பது;பின்னை யது மக்களை இயற்கைவாழ்விற் செலுத்தாது,செயற்கை நரகில் தோய்த்து, இறைஇன்பத்தைக் கூட்டாது, அவர் கள் வாழ்விற்குக் கேடு சூழ்வது. இவ்விரண்டனுள் மக்கள் நல்வாழ்விற்கு உரியது எது? உரியதாகாதது எது? பொறுமை - அன்பு - அருள் முதலிய குணத் தொகுதி மக்கள் நல்வாழ்விற்கு உரியது. பொறாமை - அவா-வெகுளி-முதலியகுணத்தொகுதி அவ்வாழ்விற்கு உரியதாகாதது. மக்கள் வாழ்விற்கு உரியதை இயற்கை

என்று கொண்டேன்; மற்றதைச் செயற்கை என்று கொண்டேன். 'அழுக்காறு முதலிய குணங்கள், மக்களுடன் இயல்பாய், அநாதியாய் உண்மையான், அவைகளைச் செயற்கை என்று எங்ஙனங் கூறலாம்?' என்று சிலர் வாதமிடுவர். வாதத்துக்கும் எனக்கும் நெடுந்தூரம். வாதங்கடந்த ஒன்றே எனக்கு உரிய இயற்கை வாழ்வு. அழுக்காறு முதலியவற்றை ஆதி என்று சொல்வோரும் உளர்; அநாதி என்று சொல்வோரும் உளர். ஆதியோ அநாதியோ அதைப்பற்றிய ஆராய்ச்சி ஈண்டு வேண்டுவ தில்லை. மக்கள் வாழ்விற்கு உரியதை இயற்கை என்றும், உரியதாகாததைச் செயற்கை என்றும் யான் கொண்டு என் கருத்தை வெளியிடுகிறேன். அன்பர்கள் சொற்போரை ஒழித்துக் கருத்தை மட்டும் நோக்கு வார்களாக.

இயற்கை செயற்கை

மக்கள், தங்கள் மாட்டுள்ள அழுக்காறு முதலிய தீக்குணங்கள், தங்களை விடுத்து விலகும் முறையில் வாழ்வு நடாத்தல் வேண்டும். அவ்வாழ்வு பெறுவது எப்படி? இயற்கை வாயிலாக இறைவன் அதைக் கோலி இருக்கிறான். அஃது இஃதெனச் சில அறிஞர் உலகிற்கு அறிவுறுத்தி இருக்கிறார். அவருள் நந்தமிழ் நாடளித்த தெய்வத் திருவள்ளுவனாரை யான் கொள்கிறேன்.

திருவள்ளுவனார்

திருவள்ளுவனார் அருளிய திருக்குறள், மக்கள் வாழ்விற்குரியது. மக்கள் வாழ்வுக்குரிய முறைகளும் துறைகளும் திருக்குறளாக அமைந்திருக்கின்றன.

திருக்குறள்

திருக்குறள் ஒரு நூலன்று. அஃது உலகம்; மக்கள் வாழ்வு. ஆதலால், அந் நூலை ஈண்டுப் போற்றி ஏற்கிறேன்.

திருக்குறள், அறம்-பொருள்-இன்பம் என்னும் மூன்றையும் அறிவுறுத்துகிறது. அறம் என்பது ஒரு பெரும் நிலை. அது கடவுள் நிலை. கடவுள் நிலை எய்

அறம் கடவுள் நிலை

தற்கு இயற்கை வாழ்வு வேண்டற்பாலது என்று முன்னே சொல்லப்பட்டிருக்கிறது. இயற்கை வாழ்வாவது இவ்வுலக வாழ்வு. இவ்வுலக வாழ்விற்குரிய துறைகளைப் பொருட்பாலில் திருக்குறள் வகுத்துக் கூறுகிறது. இப்புற உலகவாழ்வுடன் நின்றுவிடுவதா மக்கள் வாழ்வின் நோக்கம்? இல்லை. மேலான அறநிலை என்னுங் கடவுள் நிலை எய்தவேண்டு மென்பது மக்கள் வாழ்வின் விழுமிய நோக்கம். அம்முறைகளை

பொருளும் இன்பமும்

'இன்பத்தில்' திருக்குறள் கோலியிருக்கிறது. எனவே, பெரிய அறநிலைக்குப் 'பொருளும்' 'இன்பமும்' வேண்டற்பாலன. பொருள் புறத்துக்குரியது; இன்பம் அகத்துக்குரியது.

புறவுலகில், கொலை களவு முதலிய கொடுமைகள் நிகழாதவாறு காக்க அரசு வேண்டற்பாலது. அவ்

அரசு

வரசு நன்கு நடைபெற, அமைச்சு, கல்வி, முயற்சி, செல்வம் முதலியன வேண்டும். இவையாவும் ஒழுங்குபட அமைந்துள்ள நாட்டில் கொடுமைகள் எரியாது அமைதி நிலவும். இவ்வமைதி அகத்துக்குந் தேவை. புறத்தில் அமைதியின்றிக் கிளர்ச்சி நிகழின், அகத்தே அமைதி நிலவுதல் அரிது. ஒருவனது உடற்றுன்பம் அவனது உள்ளத் துன்பமாகவும் இருத்தல் கண்கூடு. ஆகவே, புற

வாழ்வின் நிலை, அகவாழ்வின் நிலையைப் பெரிதும் பொறுத்து நிற்கிறது. புறவாழ்வின் அமைதிக்கு அரசு முதலியன குறித்த திருக்குறள், அகவாழ்வின் அமைதிக்கும் இன்பத் துறையெனும் இல்லறத்தைக் குறித்து நிற்கிறது. அகத்தில் அமைதி கெடுப்பன யா? அழுக்காறு, அவா, வெகுளி முதலியன அல்லவோ? அவைகளைக் கெடுக்க இல்லரசு என்னும் மனைவாழ்க்கையைத் திருக்குறள் குறிக்கிறது. திருக்குறள் குறிக்கும் அவ்வறமே இயற்கை அறம் என்க.

முதலாவது அறத்தின் இயல்பைச் சிறிது ஆய்வோம். மாசிலா மனத்தில் - அதாவது அழுக்காறு அவா வெகுளி முதலிய தீக்குணங்கள் அற்ற விடத்தில் - அறக்கடவுள் பொலியும் என்க. 'மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன் - ஆகுல நீர பிற' என்றும், 'அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் - இழுக்கா இயன்றது அறம்' என்றும் திருவள்ளுவனார் அறத்தின் இயல்பு ஓதியிருத்தல் காண்க. அழுக்காறு முதலிய தத்துவக் கூட்டங்களைக் கடந்து ஒளிர்வது கடவுள் என்னுஞ் செம்பொருள். அப்

அறமும் கடவுளும்

பொருளை அறம் என்று திருவள்ளுவனார் கூறுகிறார். எனவே, கடவுளையும் அறத்தையும் ஒன்றென்றும் கொள்ளலாம். மேலும் அறத்தின் மேன்மை தோன்ற 'அறத்தினூஉங் காக்கமு மில்லை அதனை - மறத்தலினூங் கில்லை கேடு' என்றார் நம்பெரியார். திருவள்ளுவனார் அருளிய திருக்குறளின் முழு நோக்கம் அறன் வலியுறுத்தல் என்பது உன்னற்பாற்று. இக்

காரணத்தான் அறன் வலியுறுத்தல் பாயிரத்துள் வைக்கப்பட் டிருக்கிறது.

அறம் ஒரு மரம் போன்றது. மற்றப் பால்களும், அதிகாரங்களும், பாக்களும் மரத்தின் கவடு கோடு இலை முதலியன போன்றன. திருக்குறளின் ஒவ்வொரு பாட்டும் அறத்தின் ஒவ்வொரு கூறு என்க. திருக்குறள் அறிவுறுத்தும் வழியில் ஒருவன் வாழ்வு நடாத்துவனேல், அவன் முடிவில் அறநிலை எய்தல் ஒருதலை. அவ்வாழ்வு இயற்கைக்கு அரண்செய்யும் வாழ்வாகவும் இருக்கும்.

திருக்குறள் அறநிலையம்

மக்கள், அழுக்காறு-அவா-வெகுளி முதலிய கட்டுகளினின்றும் விடுதலை அடையக் கொள்ளத் தக்க வழிதுறையை நோக்குவோம். மக்கள், கட்டுகளினின்றும் விடுதலை அடையக் கடவுளைப் போற்ற வேண்டுமென்றும், மாயா உலகைத் துறத்தல்வேண்டுமென்றும், சிறப்பாகப் பெண்ணைத் துறத்தல் வேண்டு மென்றும், துறந்து நாட்டை விடுத்துக் காட்டுக்கோடிக் கண்ணை மூடி உடலை வருத்தி யோகஞ்செய்தல் வேண்டு மென்றும் சிலர் கூறுப. இதைப் பற்றி முன்னருஞ் சிறிது தொகையாகக் குறிப்பிட் டிருக்கிறேன். அத்தொகையை இங்கு வகைப்படுத்திச் சில உரை பகர்கிறேன்.

உலகம் கொடியதாயின், கடவுள் படைப்பில் அவ்வுலகம் அமையவேண்டுவதில்லை. பெண் மாயையாயின், அப்பொருளும் இயற்கையில் தோன்ற வேண்டுவதில்லை. உலகமும் பெண்ணும் கடவுள் படைப்பில்

தோற்றமுற் றிருப்பதால், அவைகள் மக்கள் வாழ்விற் கென்றே தோன்றி யிருத்தல் வேண்டும். ஆதலால், 'உலகையும் பெண்ணையும் துறந்து வாழல்' என்னும் எண்ணம், கடவுளின் படைப்பு நோக்கை அறியாது, கடவுளை மறப்பதாகும். கடவுளின் படைப்பை வெறுப்பது கடவுளை வெறுப்பதாகும்.

பின்னை எங்ஙனம் அழுக்காறு அவா முதலியவற்றைத் தொலைப்பது? அதற்கொரு வழி, செயற்கை முறையில் நாம் வலிந்து கோல வேண்டுவதில்லை. அவ்வழி இயற்கையில் அமைந்திருக்கிறது. எல்லா

**விடுதலைக்குவழி**

வற்றையும் அளித்த ஆண்டவன், மக்களின் துன்பத்துக்குக் காரணமாக உள்ள கட்டினின்றும் விடுதலையடைய ஒரு வழியையா கோலா தொழிவன்? கட்டினின்றும் மக்களை விடுதலை அடைவிக்கவே அவர்கட்கு இவ்வுலக வாழ்வை ஆண்டவன் நல்கியிருக்கிறான். அவ்வருள் சான்ற ஆண்டவன் கட்டு நீக்க வழியையும் கோலியிருக்கிறான். இயற்கையில் அவ்வழி அமைந்திருக்கிறது.

## இயற்கை நிலை

இயற்கை, பெண் ஆண் வடிவாகப் பொலிவது என்பது தொடக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்பெண் ஆண் சேர்க்கையால் உலகம் வளர்ந்து வருகிறது. பெண்மகளும் ஆண்மகனும் இயற்கையின் கூறுகளேயிருப்பவர். அக்கூறாக உள்ள அன்னார், அதற்கியைந்த வாழ்வு செலுத்தலே அறிவுடைமை. அன்னார் வேறுபட்ட வாழ்வு நடாத்தப் புகின், அவர் வாழ்வில் பலதிற இன்னல் விளைவது திண்ணம். 'உல

கத்தோ டொத்துவாழ்' எனவும், 'உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்-கல்லார் அறிவிலாதார்' எனவும் வரூஉம் ஆன்ளோர் மொழிகளை ஊன்றி நோக்குக. மற்ற உயிர்கள் இயற்கையுலகோ டியைந்த வாழ்வு செலுத்துவது போல, மக்களும் அவ்வாழ்வு செலுத்தக் கடமைப்படல் வேண்டும். தாவரம், பறவை, விலங்கு முதலிய எல்லா உயிரும் பெண் ஆண் சேர்க்கை வாழ்வையே நடாத்துகின்றன. இயற்கை நிலை அவ்வாறாக, ஆறறிவுடைய மக்கள் மட்டும், அவ் வாழ்வு துறந்து நிற்கவேண்டுமென்று வலியுறுத்துதற்கு இயற்கையில் எந்நியதி அமைந்திருக்கிறது?

வாழ்விற்கு நீர், காற்று, ஒளிமுதலியன வேண்டப்படுவது போலப் பெண்ணிற்கு ஆண் வேண்டற்பாலன்; அவனுக்கு இவள் வேண்டற்பாலள்.

**போலித் துறவால் விளையுங் கேடு**

இரண்டொரு நாள் நீரின்றியும், சிறிது போழ்து காற்று ஒளியின்றியும் வாழ்வு நடாத்தல் இயல்வதில்லை. போதிய நீரும், காற்றும், ஒளியுமின்றி வாழ்வோர் முகத்திலும் உடலிலும் வெளுப்பேறி யிருத்தல் காண்கிறோம். இதன் பயனாகப் பலதிற நோய்கள் தோன்றி விரைவில் வாழ்வையே குலைக்கின்றன. இவ்வளவிற்குங் காரணம் என்னை? இயற்கையிலுள்ள நீரையும், காற்றையும், ஒளியையும் அவமதித்த குற்றமன்றோ? இவ்வாறே இயற்கையின் கூறாகிய பெண் ஆணைத் துறத்தலும், ஆண் பெண்ணைத் துறத்தலும் குற்றமாகும். அத்துறவு, இயற்கைக்கு மாறுபட்ட தொன்றாகலான், பின்னை நாளடைவில், பலதிற நோய்

களைத் தோற்றுவித்து, வருத்தி, வாழ்வைக் குலைப்பது ஒருதலை. இயற்கையோ டியைந்த வாழ்வு நடாத்தலே ஒழுங்குபட்ட வாழ்வாகும்.

## அமைப்பின் நோக்கம்

மக்கள் வடிவம் பெண் ஆண் சேர்க்கைக் கேற்ற வாறு அமைந்திருத்தல் கருதற்பாலது. அவ்வமைப் புக்கு ஒரு நோக்கமும் இருத்தல் வேண்டும். ஒரு நோக்கமுமில்லா ஒன்று இயற்கையில் அமைதல் அரிது. உடலிலுள்ள ஒவ்வோர் உறுப்பையும் உற்று நோக்கு வோம். ஒவ்வொன்றற்கும் ஒவ்வொருவித கடன் இருத் தல் காண்கிறோம். ஒவ்வோர் உறுப்பும் தன் தன் கடனை ஆற்றுதொழியுமேல், அவைக ளால் ஆக்கப்பட்ட உடல் செழுமை யுறாது சூம்பிப் போகும். உடற் செழுமை காக்கவேண்டி ஒவ்வோர் உறுப்பும் இயங்கு முறையில் பயிற்சி செய்கிறோம். அப்பயிற்சியால் உறுப்புக்கட்கும், உட லுக்கும் நலன் விளைவதைக் கண்கூடாகக் காண் கிறோம். உறுப்புக்களின் இயக்கம், குருதி ஓட் டத்தை ஒழுங்குபடுத்தி, நரம்புகட்கு உரமேற்றி, கொழுமை திரட்டித் தசையாக்கி, அதனின்றும் அழ குத் தெய்வக்காட்சியை வழங்குகிறது.

**உறுப்புப் பயிற்சியின் இன்றியமையாமை**

உறுப்புக்களுக் கெல்லாம் உயிர்போன்றது உயிர் நிலையேயாகும். அப்பெயரானே அதன் பெற்றி விளங்கும். அதற்குங் கடன் உண்டு. அக்கடனாற்ற அதற்கும் பயிற்சி இருத்தல் வேண்டும். உயிர் நிலைப் பயிற்சி குன்றின், அதன்நிலை என்னுகும்? அதனை

உயிராகக் கொண்ட மற்ற உறுப்புகள் நிலை என்னாகும்? தற்கால மேல்நாட்டறிஞர், உயிர்நிலையின் நுட்பங்களைத் துருவித் துருவி ஆராய்ந்து, அது மற்றைய உடலுறுப்புக்களுக்கு எங்ஙனங் கொழுக்கொம்பாக இருக்கிற தென்பதையும், அதற்கு எவ்வழியிலாதல் கேடு நிகழின், அக்கேட்டான் எங்ஙனம் உடல் வளன் குன்றுகிற தென்பதையும் உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெள்ளத்தெளிய விளக்கிக் காட்டியிருக்கின்றார்.

உயிர்நிலைச் சிறப்பு

இளமையிலோ அல்லது உற்ற வயதிலோ உயிர்நிலைக்கு எவ்வழியிலாதல் ஊறு நிகழ்த்திக் கொள்வோரது பின்னைய நிலை இரங்கத்தக்கதாக முடியும். சிலர் நோய்வாய்ப்பட்டு இறந்து படுவர்; சிலர் முகப்பொலிவும் உடல் வளமும் குன்றப் பெற்று, குரலொடுக்குற்று, கண்ணொளியிழந்து, அழகுடைந்து, பார்வைக்கினிமை பயவா உடல் தாங்கி ஒழிவர். ஒருவரது உடல் வளம் அவரது உயிர்நிலை வளனைப் பொறுத்து நிற்கிற தென்று சுருங்கச் சொல்லலாம்.

விதை அடிக்கப்பெற்ற மாட்டுக்கும் குதிரைக்கும், மற்ற மாட்டுக்கும் குதிரைக்கும் வேற்றுமை இருத்தல் கண்கூடு. முன்னையவற்றிற்கு ஊக்கம் எழுச்சி சுறுசுறுப்பு உரிமை யுணர்வு முதலியன போதிய அளவு இல்லை; பின்னையவற்றிற்கு அவை உண்டு. அஃறிணை உயிர்களின் உயிர்நிலைக்கேட்டினும், உயர்திணை உயிர்களின் உயிர்நிலைக்கேடு பேரிடர் விளைக்கும்.

உயிர்நிலைக்கேடு, அறிவுவிளக்கத்துக்கும் ஞாபக சக்திக்கும் பெருங்கேடு விளைக்கும் என்பதை ஈண்டுச்

சிறப்பாகக் குறிப்பிடுகிறேன். அறிவு விளக்கங்குன்றி, ஞாபகசக்தி இழந்து, உலகில் வாழ்வது வாழ்வாகுமா?

இளமை தொட்டு உயிர்நிலையை எப்படிக் காத்து வரல் வேண்டும் என்பது பற்றிப் 'பெண்ணின் வளர்ப்பு' என்னுந் தலைப்பின் கீழும் உரைத்திருக்கிறேன். உற்ற வயதில் உயிர் நிலையின் இயற்கை அமைப்புக்கேற்ற பயிற்சி இருத்தல் வேண்டும். அப்பொழுதே அவ்வமைப்பின் நோக்கம் நிறைவேறும். உயிர்களின் துன்ப நீக்கத்தையும், இன்ப ஆக்கத்தையும் குறிக்கொண்டு நிற்பது அந்நோக்கம் என்பதை மீண்டும் ஈண்டு வலியுறுத்துகிறேன்.

## செயற்கை வினைகள்

'உற்ற வயதில் உயிர் நிலைக்குப் பயிற்சிதானே தேவை' என்று மக்கள் செயற்கைத் துறைகளில் இறங்குவது தற்கொலைக்குக் கால்கொள்வதாகும். செயற்கை முறைகள் பற்பல. அவைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். அவைகளுள் சிற்சிலவற்றை ஈண்டுச் சுருங்கக் குறிக்கிறேன். அவைகள் வேசையர் கூட்டம், காமுகர் ஈட்டம், நோய்க்குழு, முஷ்டிமைதுனம், மருந்துண்ணல், புலனடக்கல், வாளாகிடத்தல் முதலியன. இவைகள் எப்படிச் செயற்கை முறைகளாகும் என்பதைச் சிறிது ஆராய்வோம். ஈண்டுக் கூறுவன யாவும் பொதுவகையில் பெண் ஆண் என்னும் மக்களினத்தைக் குறிப்பனவாம்.

வேசையர் கூட்டம்: வேசையர் கூட்டம் பெண் மக்களிலும் உண்டு; ஆண் மக்களிலும் உண்டு. ஆனல்

அப்பெயர் பெரிதும் பெண்ணினத்திற்கே வழங்கப்பட்டு வருகிறது. அன்புப் பொறுப்புடன் ஒருவனோடு வாழ ஒருப்படாது, பிழைப்புக்கென மானம்விற்றுப் பொல்லா வாழ்வு நடாத்தும் பெண்கள், 'வேசையர்கள்' என்று சொல்லப்படுகிறார்கள். தெய்வத்தன்மை பொருந்திய பெண்ணினத்தில் இக்கூட்டம் தோன்றியதற்குக் காரணம் ஆண் மக்களின் மூடச்செயலேயாகும். ஆணுலகம் தூய்மை காத்திருக்குமேல், பெண்ணுலகில் வேசையர் கூட்டம் தோன்றி இராது. எப்படியோ வேசையர் கூட்டம் தோன்றி இருக்கிறது. அதை ஒடுக்கவேண்டுமாயின், ஒருவன் ஒருத்தியோடு வாழும் இயற்கை அறம் உலகில் யாண்டும் பரவுதல் வேண்டும். 'ஒருவன் ஒருத்தியுடன் வாழும் பொறுப்பேலாது, நினைந்த போது வேசையர்பால் துயின்றெழுவதால் விளையுந் தீமை என்னை? 'எங்ஙனமாவது பெண் சேர்க்கைதானே வேண்டும்' என்று கொள்வோரும் உளர். இவர் இயற்கை செயற்கை நுட்பம் தெரியாதார் என்க.

கலவி என்றால் எல்லாங் கலவியாகுங் கொல்? பெண் ஆண் கலவி என்பது காதல் இன்பத்தை அடிப்படையாகக் கொண்டிருத்தல் வேண்டும். அக்

கலவி நுட்பம்

காதல் இன்பம், அறிவு மனம் உடல் ஆக மூன்றும் ஒன்றிய அன்பின் வழிப் பிறப்பது. அன்பில்லாவிடத்தில் அவ்வின்பம் பிறவாது. அறிவும் மனமும் உடலும் அன்பால் ஒன்றி நிகழுங் கலவியில், பெண்மகளின் உயிர்நிலையின் உட்கருவிகளிலுள்ள சினையுறுப்புக்களினூடே ஒருவித

இன்பம் துளும்பி ஊறும். அதன் பயனாக ஒருவித சத்து எழும்பி (ஆண்மகன் சுக்கிலம் விழுந்ததும்) ஆணுள் நுழையும். அந்தச்சத்து ஆண்மகன் சுக்கிலச் செலவிற்கு ஈடு செய்யும் அமிழ்தாய் உடல் நலனைக் காப்பதாகிறது. இஃது இயற்கைக் கலவி. இதற்கு மாறுபட்ட கலவி செயற்கை முறையின் பாற்படுவதே யாகும்.

அறிவும் மனமும் ஒன்றாத கலவியில் சத்துப் பிறப்பதில்லை. பொருட் பெண்டிர் கலவி, அன்பு வழி அறிவும் மனமும் ஒன்றாத வெறும் உடற்கலவி என்பதை விளக்க வேண்டுவதில்லை. அக்கலவியில் பெண் மகளின் உட்கருவியின் சினைகளில் இன்பக் கிளர்ச்சியும் நிகழாது; அதனின்றும் சத்தும் எழாது. அச்சத்து எழாவிடத்தில் கூடுவது, வெறும் உடற் கூடலாகலின், அக்கூடல், செயற்கை முறையின் பாற்படுவதாகும். அது முஷ்டிமைதுனத்தை ஒத்த தெனச் சில அறிஞர் கருதுகிறார்.

பொருட் பெண்டிர் கலவி

பொருளொன்றே குறிக்கொண்டு, சில பெண் மக்களோடு கூடித்திரியும் ஆடவரும் வேசையர் கூட்டத்திற் சேர்ந்தவராவர். இவர் கலவியும்—மனமும் அறிவும் ஒன்றாத அன்பில்லாததாகலின், அதுவும் செயற்கை முறையின் பாற்பட்டதேயாகும். அன்பு வழி நிகழாத கலவி யாவும் செயற்கை முறையின் பாற்பட்டன என்று சுருங்கச் சொல்லலாம். இதைக் கீழ்வரும் இனங்களிலும் கூட்டிக்கொள்க.

ஆகவே, பொருளில் கருத்து வைத்து, மானம் விற்பதைத் தொழிலாக உடைய வேசையர் கூட்டம்,

உடலுக்கு நலன் பயவாத செயற்கைத் துறைகளில் ஒன்றுதல் காண்க.

காமுகர் ஈட்டம்: சில இடங்களில் பொருள் வேட்கையின்றி, வெறுங் காமக் கிளர்ச்சியால் இருவர் சேர்க்கை நிகழ்வதுண்டு. காமம் (Lust) என்பது வெறியால் உடலளவில் எழும் ஒருவிதத் துன்பக் கிளர்ச்சி. இவ்வெம்மைக் கிளர்ச்சியால் நிகழும் புணர்ச்சி மனதில் உறுவதில்லை. சேர்க்கையின் போழ்தும் காமுகர் மனம் பெரிதும் அலைந்து திரிவதுண்டு. காதலால் விழுங்கப்பட்ட மனம் அவ்வாறு அலைவதில்லை. அம்மனம் அன்பில் ஒன்றி நிற்கும். அலையும் மனதுடன் கூடுவது வெறும் உடல் சேர்க்கையேயன்றி மனங் கலந்த சேர்க்கையாகாது.

சிலசமயங்களில் மனம் அலையாமலும் காமுகர் சேர்க்கை நிகழ்வதுண்டு. மனம் அலையாத ஒரு காரணங்கொண்டு, மனங்கலந்த காதற்சேர்க்கை என்று அச்சேர்க்கையைக் கோடலாகாது. என்னை ? இவ்வொருத்திக்கும் ஒருவனுக்கும் விளைந்த வேட்கை மற்றவரிடத்தும் செல்கிறதா இல்லையா என்று பார்த்தல் வேண்டும். அவ்வேட்கை மற்றவரிடமும் சென்று தாக்குவதாயின், அவ்விருவர்க்கும் மனக்கலப்பில்லை என்று உணர்ந்து கொள்ளலாம்.

சில காலம் பிறரிடத்து வேட்கை செல்லாத வழியிலும் சில இடங்களில் ஒருத்திக்கும் ஒருவனுக்கும் காமச்சேர்க்கை நிகழ்வதுண்டு. இதை எங்ஙனம் அறிவது ? இருவரையும் சிறிது காலம் பிரித்து வைத்திருப்பின், இவன் இவளையும், இவள் இவனையும் மறந்து விடுவர். சமயம் நேரின், இவர் மற்றக் காமுகரிடத்திலும் திருவிளையாடல் புரியத் துணிவர்.

காமுகர் சேர்க்கையில் மனக்கலப்பிராது. சில சமயத்தில் போலிக்கலப்பு நிகழும். மனங்கலந்த சேர்க்கையாயின், அது காதல் சேர்க்கையாகும். அக்காத லுடையார் பிறரைக் காமுறூர்; எவ்வளவுநாள் பிரிந் திருப்பினும் ஒருவரை ஒருவர் மறவார். அவர் உள்ளத் தில் பிரிவே நிகழாது. இதற்கு மாறுபட்டு வாழும் கூட்டமே காமுகர் ஈட்டமாகும்.

காமுகர் பலரிடங் கூடலால் அவர்பால் நோயும் நிரம்பியிருக்கும். புணர்ச்சிக் காலத்தும் மனதைப் பிறரிடஞ் செலுத்தும் காமத்தின் சிறுமையை என் னென்று கூறுவது ?

காமுகர் ஈட்டமும்—அன்பும் மனக்கலப்பும் இல்லா ஒருவழியில் உழன்று, உடலுக்குக் கேடுதேடிக்கொள்வ தால், அதுவுஞ் செயற்கைத் துறையின் பாற்படுவ தாகும்.

நோய்க்குழு : நோயாளியின் சேர்க்கையைப் பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை. நோய் வாய்ப்பட்ட பெண்ணுடன் ஆணோ அல்லது ஆணுடன் பெண்ணோ கூடுவதைப் போன்ற செயற்கை நரகம் பிறிதொன் றிருக்குமோ ? அந்நோய், அவளுடனும் அவனுடனும் ஒழிவதில்லை. சில இடங்களில் அஃது அவர் வழி வழித்தொடர்ந்தும் வளர்கிறது. இக்கொடுமையைப் பற்றிப் பின்னுங் கூறப்போவதால், இவ்விடத்திற்கு ஏற்ற அளவில் நின்று மேற்செல்கிறேன். நோயாளர்க்கு முதலாவது அறிவு விளக்கம் இராது; மனோ உரம் இராது. இரண்டும் இன்மையால் அவரைச் சிறு காமத் தீ என்றும் எரித்துக் கொண்டேயிருக்கும். நினைந்த

வுடன் கிளர்ச்சி எழும். அந்நினைவன்றி வேறு நினைவு அவர்க்கு உறுதலும் அரிது. அவர் சேர்க்கை, உடல் அளவிலும் நிகழ்வதில்லை. இதை எங்ஙனம் இயற்கை முறை என்று கூறுவது? ஆதலால் நோய்க்குழுவினர் ஆடலையும் செயற்கைத் துறையெனத் தள்ளுக.

முஷ்டி மைதுனம்: இது கைமுட்டி என்றும் வழங்குவதுண்டு. இஃதொரு கொடிய செயற்கை முறை. அறிவும் மனமும் கலவாத ஒருத்தியும் ஒருவனும் கூடுவதே செயற்கை முறையெனில், இருவர் சேர்க்கையேயின்றி, ஒருவரே இன்பங் காணப் புகும் முயற்சித் துறையை எத்தகைக் கொடிய செயற்கை முறை என்று சொல்லால் சொல்வது? இதுவே சுத்த செயற்கை முறை.

இச்செயற்கை முறையின் கொடுமை தெரியாது பலர் இந்நரகத்துக்கு இரையாகிறார். இப்பயிற்சியால் வாழ்வில் விளையுங் கேடுகளை மேல்நாட்டு மருத்துவர்கள் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் வெளியிட்டுள்ள கருத்துக்கள் மக்களிடையில் பரவுதல் நலம்.

இக்கொடுஞ் செயற்கைப் பயிற்சி, பல காரணங்களால் இளமையில் சில பெண்மக்களிடத்தும் ஆண்மக்களிடத்தும் நுழைந்து, அவர்கள் பிறவிப் பயனைக் கொல்கிறது. குழந்தைகள் அப்பருவத்திலேயே அடிக்கடி உயிர் நிலையைத் தொடுவதாலும், தேய்ப்பதாலும், சில மூடத் தாய் தந்தையர்கள் குழந்தைகளின் உயிர் நிலையைத் தொட்டும் கசக்கியும் முத்தமிடுவதாலும், பீடங்களின் மீதோ மற்றெதன் மீதோ

குழந்தைகள் சாய்ந்து, உயிர் நிலையை உறுய்வதாலும், இன்னோரன்ன பிற காரணங்களாலும், உயிர்நிலையின் நரம்புகளில் ஒருவிதக் கிளர்ச்சி தோன்றும். நாளடைவில் வயது ஏற ஏற, அக்கிளர்ச்சி, குழந்தைகளை முஷ்டி மைதுனத்தில் செலுத்தும். இதற்குக் காரணம் பெற்றோர்களின் கவலை ஈனமே. இது குறித்துப் 'பெண்ணின் வளர்ப்பு' என்னுந் தலைப்பின் கீழும் உரைத்திருக்கிறேன்.

தீயோர் இணக்கத்தாலும் இத்தீப் பயிற்சி நுழைவதுண்டு. ஆயிரக் கணக்கான மாணுக்கர்கள் பயிலுங் கல்லூரிகளிலும், மாணுக்கர்கள் வதியும் விடுதிகளிலும், இளைஞர்கள் கூடும் எந்த இடங்களிலும் இக்கொள்ளை நோய் வாடை சிறிதும் வீசாதவாறு ஆசிரியன்மார்களும் மற்றவர்களும் பார்த்துக்கொள்ளல் வேண்டும். பெண் பாடசாலைகளும், அவைகளை ஒட்டிய விடுதிகளும் நன்மக்கள் பார்வையில் நடைபெறல் வேண்டும். சில இடங்களில் மணவாழ்வு கொள்ளாத பெண்மக்கள் ஆசிரியன்மார்களாகவும், விடுதித்தலைவர்களாகவும் அமர்கிறுர்கள். அவர்களில் நல்லோர் பலர் இருக்கலாம். இத்தீப் பயிற்சியும், வேறு சில தீப் பயிற்சியும் புகுந்துள்ள சிலரால் அப்பாடசாலையும் விடுதியும் பாழாகிவிடும். இது குறித்துத் தாய் தந்தையர்கள் மிக எச்சரிக்கையா யிருப்பார்களாக.

முஷ்டி மைதுனத்தில் ஒரு 'நல்லகுண' முண்டு! அது விரைவில் தன்னைக் கொண்டோரைக் காட்டிக் கொடுக்கும்! முஷ்டி மைதுனம் தொடங்கப் பெற்ற சில ஆண்டுகளுக்குள்ளாக, அது தன்நண்பருடலில்

சில மாறுதல் நிகழ்த்தும். அம்மாறுதல் கண்டு பெற்றோரோ மற்றவரோ அப்பயிற்சி யுடையாரை எச்சரிக்கை செய்து, அதனால் வாழ்வில் விளையுங் கேடுகளை எடுத்துக் காட்டினால், அவர் உடனே அதை விட்டொழிப்பர். அப்பயிற்சியில் தலைப்பட்டோர் உற்ற வயதடைந்தவராயின், உடனே அவர்கட்கு மணவினை முடிப்பது நலம்.

முஷ்டி மைதுனத்தால் விளையுங் கேடுகளை இளமையில் உணர்வோர் அத்துறையில் தலைப்படல் அரிது. தலைப்பட்டோர், கேடுகளை உணரப்பெற்றதும், அவரும் உடனே அதைத் தொலைப்பர். பல ஆண்டு அப்பயிற்சியில் உழன்று பழுத்தோர், பழுத்து விழவேண்டியவரே. அன்னார்க்குத் துன்பம் நரகம்போலத் தோன்றும். தோன்றினும் அப்பயிற்சியினின்றும் அவர் விடுதலை அடைதல் அரிது. அவர் அப்பயிற்சிக்கு அடிமையாய் விட்டவர். அவர் அதன் கொடுமை உணர்ந்து, அதனை விட முயலினும், அஃது அவரை விடாது. எந்நோய்க்கும் மருந்து உண்டு; எப்பேய்க்கும் மந்திரம் உண்டு. இந்நோய் பேய்கட்கு மருந்தும் இல்லை; மந்திரமும் இல்லை. பின்னை அவர் உய்யும் வழி யாது? 'ஒன்றும் இல்லை' என்று சிலர் கூறுவர். உய்யும் வழி உண்டு என்று கூறலாம். அவ்வழியை மற்றோரிடத்தில் (பெண்ணலனில்) குறிப்பன். துன்பம் முதிர்ந்தபின்னர்க் காணும் வழியினும், அது முதிரா வண்ணம் அதைத் தகைவதே அறிவுடைமை.

முஷ்டி மைதுனம் எவ்வழியில் தன்னை உடையானைக் காட்டிக் கொடுக்கும் என்பதைச் சிறிது பார்ப்

போம். அப்பீடை, முதலாவது முகத்தில் சில மாறுதல் நிகழ்த்தும். முகத்தில் இளமை குன்றும்; ஒருவித பழுப்புத் தோன்றும். அப்பழுப்பில் கருஞ் சாம்பற் பூசல் போன்றதொரு சாயல், மிக மென்மை யாகத் தோன்றி மறையும். பின்னே கண்களின் கீழ்க் கருங் (கோட்டுக்) கீற்றுக்கள் விழும். கண் களில் குழிவிழும். சோர்வு களைப்பு தலைகாட்டும். படிப்பிலோ தொழிலிலோ மனஞ் செல்லாது. நாளடை வில் உயிர் நிலையின் நரப்புக் கட்டுகள் குலைந்து சோர் வுற்றுக் கிளர்ந்தெழுந் தன்மையை இழந்து வாட்ட முறும். உயிர் நிலையில் நரப்புக்கட்டுக் குலைவு தன் னளவில் நின்று விடாது. அஃது எல்லாவற்றிற்கும் தாயகமாகலான், அது மற்ற இடங்களிலுள்ள நரப்புக் கட்டுகளையும் குலைக்கும். மூளையின் உரங்குன்றும். குடர்கள் மெலிவுறும். மண்ணீரலும் குண்டிக்காயும் சுறு சுறுப்பா யிருக்கமாட்டா. இவைகளால் ஜீரண சக்தி குறையும். மலச்சிக்கல் உண்டாகும். இம்மாந்தர் கட்கு ஞாபகசக்தி இராது; பெரிய நூலாராய்ச்சியில் நாட்டம் செல்லாது. கூட்டங்களிலிருக்க அவர்கள் மனம் ஒருப்படுவதில்லை. ஆடவராயின் அவர்க்கு மகளிர் கூட்டம் நஞ்செனத்தோன்றும்; மகளிராயின் அவர்க்கு ஆடவர் கூட்டம் வெறுப்பாகத் தோன்றும். இப் 'பெரி யோர்கள்' தனித்து ஒதுங்கி வாழவே விரும்புவார்கள். இன்பூட்டும் இயற்கை இவர்கட்குத் துன்பூட்டுவது போலத் தோன்றும். இன்னும் விரிக்கிற் பெருகும். மேல்நாட்டு அறிஞர்கள் எழுதிய மருத்துவ நூல்களில் முஷ்டி மைதுனத்தால் விளையுங்கொடுமைகளைப் பரக்கக்

காண்க. இப்பயிற்சியில் பழுத்த மாக்களே உயிரொடு நரகில் இவ்வுலகத்தில் அழுந்திக் கிடப்பவர்கள்.

இவ்வளவுந் துன்பத்துக்குங் காரணம் என்னை? ஒருத்தி ஒருவனுடனும், ஒருவன் ஒருத்தியுடனும் வாழா தொழிவதன்றோ? ஆண்டவன் விதித்த இயற்கை முறைக்கு இடர்விளைத்த பாவம் வீண்போமா? இருவர் சேர்க்கைக்கென அமைக்கப்பட்ட உறுப்பில் ஒருவர்க்கு என்ன விளையாட்டு? இவரல்லரோ இறையாணையை மீறியவர்; இயற்கைத் தாயை மறந்தவர்; முடிவில் தம் வாழ்விற்கே கேடு சூழ்ந்தவர். இவரே பேர்பெற்ற தற்கொலையாளர். இன்பத்துக் கென அளிக்கப்பட்ட அரிய பிறவியை - பெறற்கரும் பெரு வாழ்வை - துன்பமாக்கிக் கொள்ளும் மடமையினும் மடமை பிறிதொன்றுண்டோ!

இத்துணைக் கேடு விளைவிக்கவல்ல முஷ்டி மைதுனத்தைச் செயற்கை முறை என்று சொல்லவும் வேண்டுமோ?

மருந்துண்ணல்: இயல்பாக எழும் வேட்கையை ஒடுக்கச் சிலர் மருந்து உண்கிறார். இம்மருந்தார் முஷ்டி மைதுனத்தார்க்குத் தம்பியார் என்க. இயற்கையை மருந்தால் கட்டுப்படுத்தப் புகலே அறிவுடைமையன்று. மருந்து என்ன செய்கிறது? தாதுவைக் கெடுக்கிறது. மருந்துகளிற் சில, மூலாதாரத்தையே கெடுக்கின்றன; வேறு பல நோய்களையும் உண்டு பண்ணுகின்றன. தொடக்கத்தில் மருந்து, வேட்கையை அழிப்பது போன்றதொரு உணர்வளிக்கும். உண்மையில் மருந்து, வேட்கையை அழிக்கவில்லை. அவ்வேட்கைக்கு நிலைக்களனாக உள்ள உறுப்

புக்களின் பசையை மருந்து அழிக்கிறது. அப்பசையின் அழிவு பின்னே படிப்படியாக முஷ்டி மைதுனத்தால் விளையுங் கேடுகளைப் பொறுத்துப் பொறுத்து விளக்கும். இக்கேடுகளை விளக்கும் மருந்துண்ணலும் செயற்கை முறையாகும்.

புலனடக்கம்: மேற்போந்த முறைகளைச் செயற்கை என்பதில் வாதப்போர் நிகழாது. புலனடக்கத்தைச் 'செயற்கை முறை' எனில், வாதப்போர் அளவின்றி எழும். 'புலனடக்கம் பல பெரியோர்களால் கொள்ளப்பட்டது; நூல்களால் முழங்கப் பெறுவது. அதை எப்படிச் செயற்கை முறை என்று கூறலாம்' என்று பலர் வாதம் நிகழ்த்துவர். புலனடக்கப் பயிற்சி இல்லாதாரே, பெரிதும் வாதப் போருக்குப் புறப்படுவர். பெரியோர்கள் மீதும், நூல்கள் மீதும் அவர்கள் கொண்டுள்ள பற்றே இப்பிடிவாதத்துக்குக் காரணம். உண்மைப் பெரியோர்கள் கருத்துக்கும், உண்மை நூல்களின் உள்ளக்கிடக்கைக்கும், அநுபவத்துக்கும் எனது கருத்து முரண்பட்டு நில்லாது என்று உறுதி கூறுகிறேன். பெண்ணை இழிந்த பொருளெனக் கருதி, அவளை வெறுத்து, அவள் நினைவு உள்ளத்தில் பதியாவாறு காக்கப் புலனடக்கம் வேண்டுமென்று சொல்வோர் கூற்றுக்கு எனது கருத்து மாறுபட்டே நிற்கும். பெண்ணை வெறுக்கும் எண்ணத்துடன் புலனடக்கல், செயற்கை முறை என்பது எனது கோள்கை. யான் பெரியாரெனக் கொண்டுள்ள அறிஞர் கொள்கையும் அதுவே.

புலனடக்கம் பல ஆன்றோர் நூல்களில் பேசப்பட்டிருத்தல் உண்மை. 'அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை' என்று திருவள்ளுவனார் திருவாய் மலர்ந்

திருக்கிறார். 'மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத்து' என்று மாணிக்க வாசகனார் அருளிச் செய்திருக்கிறார். இக்கருத்தடங்கிய நமது நாட்டவர் பாடல்களை மலைமலையாகக் குவிக்கலாம். திருமூலனார் என்னும் பெரியார்,

அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கில்லை
அஞ்சும் அடக்கில் அசேதனம் ஆமென்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே.

என்று அறிவுறுத்தியிருத்தல் ஊன்றி நோக்கத்தக்கது. அத்திருமூலரே,

ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே.

என்றுங் கூறியிருக்கிறார்.

பெரியோர் கருத்துக்கள் ஒன்றோடொன்று முரண்படுவது போலத் தோன்றும். அவ்வுரைகளை நுணுகி ஆராய்ந்தால் முரண்பாடின்மை காணலாம்.

**அடக்கம் என்பதன் பொருள்**

முதலாவது 'அடக்கம்' என்னுஞ்சொல்லின் பொருளுணர்தல் வேண்டும். நெறியல்லாநெறிச் செல்வதினின்றும் தன்னைக் காத்தலே அடக்கமென்பது. முற்றுஞ் செயலின்மை அடக்கமாகாது. நாவடக்கம் என்றால் என்னை? நாவைச் செயலின்றிச் செய்வதா? அன்று. கண்டதைத் தின்னலாகாது என்பது அதன் பொருள். 'வாயடக்கமாயிரு' எனில், 'பேசாமல்

ஊமையாயிரு' என்றோ பொருள் கூறுவது? 'பேசத் தகாததைப் பேசாதே' என்பதன்றோ அதன் உண்மைப் பொருள்? அவ்வாறே புலனடக்கம் என்பதற்கும் பொருள் கொள்ளல் வேண்டும். புலனடக்கம் என்பதற்குப் புலன்களை வழியல்லா வழியில் உழற்றலாகாதென்பது பொருள். புலன்களின் செயல் கெடுத்தல் என்று பொருள்கோடல் தவறு. புலன்களின் செயல் கெடின், மனிதன் அசேதனன்; அதாவது அறிவற்ற சடப்பொருளாவன். புலன்களின் செயல் கெடுத்து அழிவோரை நோக்கியே திருமூலனார் 'அஞ்சும் அடக்கில் அசேதனமாம்' என்று நல்லறிவு கொளுத்தினர். அத்திருப்பாட்டிலேயே 'அஞ்சும் அடக்கா அறிவறிந்தேனே' என்று புலனடக்கத்தின் நுட்பத்தை அவர் நுவன்றுள்ளார். புலன்களை வினை கெடச்செய்யாது, அவைகளைச் செம்மையில் நிறுத்தி வாழ்வோர்க்கு, மன ஒற்றுமையும் அறிவு விளக்கமும் உண்டாகும்.

ஆகவே, புலனடக்கம் என்று ஆன்றோர் கூறிய மொழிகளில் வேற்றுமைப் பொருளில்லை என்க. புலனடக்கம் வேண்டற்பாலதே. அசேதனமாய் அழிமுறையில் புலனடக்கம் வேண்டற்பாலதன்று.

**திருவள்ளுவர் கருத்து**

உலகிற்கு இயற்கை அறத்தை அறிவுறுத்தப் போந்த திருவள்ளுவனார் புலன்களைக் கெடுத்து அறிவழியும் முறையையா அறிவுறுத்துவர்? ஒருபோதும் அப்புன்னெறியை அவர் அறிவுறுத்தார்.

உரன்என்னுங் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து.

என்றார் அப்பெரியோர். 'உரன் என்னுங் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்' என்று அவர் அருளியிருத்தல் காண்க. உரனால் அதாவது அறிவால் ஓரைந்தும் நெறியல்லா நெறிச்சென்று உழலாதவாறு காத்தல் வேண்டுமே யன்றி, அவைகளை அழித்தல் கூடாது. அழித்தால் உரன் விளக்கம் ஏது? 'அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை' என்றதென்னை எனில், ஐந்தன் புலம் தீநெறியில் செல்வதை அடல் வேண்டுமென்று கொள்க. ஐம்புலன், அடங்காது முனைந்தெழுந்து தீநெறியில் பாயும் நீர்மையுடைமையால், அவைகளின் முனைப்பை அடல்வேண்டும் என்று புலவர் விரைந்து கூறுகிறார்.

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

என்னுந் திருக்குறளை உற்று நோக்குக. ஈண்டு ஐந்து அவித்தான் என்றது கௌதமனாரை. (கௌதமனாரெனப் பரிமேலழகர் பகர்ந்துள்ளார். மணக்குடவர் கௌதமனாரைக் குறித்திலர்.) கௌதமனார் ஐம்புலவழி உழலாது, ஐம்புலனைத் தம் அறிவின் வழிச் செந்நெறியில் இயக்கும் ஆற்றல் வாய்ந்தவர். அவரும் அகலிகை என்னும் மனைவியோடு வாழ்ந்தவர். இந்திரன் புலனடக்கும் ஆற்றல் இலனாய், சிற்றின்பத்துக் கெளியனாய், அகலிகையின் கற்பழித்துத் துன்புற்றான். இவ்விருவருள் ஐந்தின் வழியுழலாதவர் ஒருவர்; உழன்றவன் ஒருவன். உழலாதார் ஆற்றலை மேற்

போந்த குறளில் காண்க. கௌதமனார் ஐந்தையுஞ் செயலின்றி ஒடுக்கி மாயவில்லை என்பது கவனிக்கற் பாலது.

> சுவைஒளி ஊறுஓசை நாற்றம் என்றைந்தின்
> வகைதெரிவான் கட்டே உலகு.

என்னுங் குறளிலும் ஆசிரியர் 'ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு' என்று அருளியிருக்கிறார். ஐந்தினை அழித்து வினை கெடுத்தவன் கண்ணதே உலகு என்று அவர் அறைந்தாரில்லை.

'புலனடக்கல்' 'பொறியடக்கல்' எனவரூஉம் இடங்களில் 'அடக்கம்' என்பதற்குச் செயலின்மை கொள்ளாது, அறிவுவழிச் செந்நெறியில் நின்றொழுகல் என்று கொள்ளக் கடவேமாக.

இவ்வுண்மை தேறாது, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தைக் கெடுக்கு முறையில் புலனடக்கப் பயிற்சி செய்யப்புகுவது செயற்கை முறையாகும். இவ்வைந்தும் கெட்டால், மகன் அறிவற்ற பொருளாதல் உறுதி. அறிவு கெடும் முறையில் சிலர், புலனடக்கம் என்னும் பெயரால், பெண்ணை வெறுத்து, யோகம் யோகம் என்று போலி யோகஞ் செய்து, மண்ணீரல் இயக்கங் கெடுத்து, உடல் வெளுப்பேறச் சோகை, காமாலை, இருமல் முதலிய நோய்வாய்ப் பட்டு, வாழ்வைக் குலைத்துக் கொள்கிறார்.

அன்புநெறி இன்னதென்று உணராது, உடலைக் கெடுக்கும் வெம்மை நெறியில் நுழைந்து திரியும் போலி யோகிகள், தங்கள் மறச் செயலுக்குத் திருவள்ளுவனார் போன்ற அறவோர் உரைகளை எடுத்

தாண்டு, பொல்லாப்பழியை அப்பெரியோர்மீது சுமத்தா திருப்பார்களாக. திருவள்ளுவனார் ஆங்காங்கே அறி வுறுத்தும் புலனடக்க நுட்பத்தை,

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.

என்று அவரே விளக்கியிருத்தல் காண்க. திருவள் ளுவனார் அருளிய திருக்குறளை முற்றும் ஆய்ந்து, அவர் உள்ளக்கிடக்கை இன்னதென்று உணராது, ஆங்காங்கே ஒவ்வோர் உரை எடுத்துத் தங்கோள் நிறுத்த முயல்வது நியாயமாகாது. திருவள்ளுவனார் அருளிய திருக்குறள், இயற்கை அறவாழ்க்கையை உல கிற்கு அறிவுறுத்த எழுந்த நூல் என்பதை அன்பர் கள் உணர்வார்களாக.

ஆகவே, புலனை நல்வழியில் நிறுத்தி ஆளுந் திற னின்றிப், புலனையே கெடுத்து, புலனை அறிவற்றபொரு ளாக்க முயல்வதும் செயற்கை முறையேயாகும்.

வாளாகிடத்தல் : மேற்போந்த முறைகளெல்லாம் உடல்நலனைக் குலைத்தலால், அத்துறைகளில் இறங்காம லும், மணவாழ்வு கொள்ளாமலும் வாளா கிடத்தல் நலமெனச் சிலர் கருதலாம். வாளா கிடத்தலும் பிழையே. ஒவ்வோர் உறுப்பும் ஒவ்வொரு வினையாற் றினாலன்றி உடல் நலன்பெறாது. உயிர்நிலைக்கென உள்ள கடனை ஒருத்தியோ ஒருவனோ ஆற்றா தொழி வதும் இயற்கைக்கு மாறுபட்டு நிற்பதாகும். மேற் போந்த முறைகள் விரைவில் கேட்டை வெளிப்படுத் தும். வாளாகிடத்தல், நாட்பொறுத்து உடல் நலனுக்கு ஊறு நிகழ்த்தும். இறைபடாத கேணியின் நிலை என்னை

கும்? அத்தகைத்தே வாளாகிடக்கும் வாழ்வும். வாளா கிடக்கக்கிடக்க உயிர்நிலையின் இயக்கங் குன்றிப்போகும். அதனால் நரம்புக்குத் தளர்ச்சி உண்டாகும். மனைவியோடு வாழாமலும், வேறு நீப்பயிற்சியில் நண்ணாமலும் இருப்போர்க்கும் கண்மங்கல், மண்டையிடி முதலியன தோன்றும். இந்நோய்களுக்கு உரிய மருந்து காதல் மணவாழ்வேயாகும். ஆதலால் வாளாகிடத்தலும் இயற்கைக்கு மாறுபட்டு நிற்பதாகும்.

இன்னும் பல செயற்கை முறைகள் உண்டு. அவ்விழிவுகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். இயற்கை அறத்துக்கு மாறுபட்ட ஒவ்வொன்றும் செயற்கையின் பாற்படுமென்று சுருங்கச் சொல்லி மேலே செல்கிறேன்.

செயற்கை முறைகளில் தலைப்பட்டால் உடல் நலத்துக்கே கேடு விளையும். உற்ற வயதில் வாளா இருந்தாலும் உயிர் நிலைக்குப் போதிய பயிற்சியின்றி உடல் நலன் கெடும். பின்னை என்ன செய்கிறது? வேறு வழி உன்னாது இயற்கை அமைப்பு வழி வாழ்வு நடாத்த ஒருப்படல் வேண்டும். இயற்கை அமைப்பு, பெண் ஆண் சேர்க்கையைக் குறிக்கொண்டு நிற்றல் வெள்ளிடைமலை. அந்நோய்க்கு ஏன் மாறுபட்டொழுகி, வாழ்வைக் கெடுத்துக்கொள்ளல் வேண்டும்? அவ்வியற்கை வழி நிற்க ஒருப்படுவதே அறிவுடைமை.

## அஞ்ஞானம் மெய்ஞ்ஞானம்

'மக்கள், இயற்கை அமைப்பு வழி நின்றால் உடல் நலமுறல் உண்மை. ஆனால் அவ்வழி அஞ்ஞானத்தை அகற்றி, மெய்ஞ்ஞானத்தைக் கூட்டுமா' என்று ஐயுறுவோரும் உளர். இயற்கைக்கு முரண்பட்டு நிற்குமட்டும்

அஞ்ஞானம் அகலாதென்றும், அதற்கு அரணாக நிற்க நிற்க மெய்ஞ்ஞானம் கூடுமென்றும் அவ்வன்பர்கள் அறிவார்களாக. இயற்கைக்கு அரணாக வாழ்தலாவது ஒருத்தி ஒருவனுடனும், ஒருவன் ஒருத்தியுடனும் வாழ்வதாகும். 'அந்தோ! இஃதென்னை? முற்றும் மாறு பட்ட கருத்து! இல்வாழ்க்கையா மெய்ஞ்ஞானத்தைக் கூட்டும்? அநியாயம்! அநியாயம்!' என்று கடிந்துரைப் போர் இல்லாமற் போகார்.

அழுக்காறு அவா வெகுளி முதலியன உள்ள இடத்தில் அஞ்ஞானமும், அவை அற்ற இடத்தில் மெய்ஞ்ஞானமும் நிலவும் என்பது எவரும் ஒப்ப முடிந்த உண்மை. இதில் கருத்து வேற்றுமை இல்லை. அழுக்காறு முதலிய தீக்குணங்களின் நீக்கத்துக்கும், மெய்யுணர்வின் ஆக்கத்துக்கும் கடைப்பிடிக்கத் தக்க வழி யாது? இல்லறத்தை அஞ்ஞானமென்றும் பிர வர்த்தி யென்றும் பேசுவோர் என்ன வழி குறிக் கிறார்? அவ்வழி செயற்கை வழியாயின் உடலுக்குக் கேடு விளையும். மெய்ஞ்ஞானத்துக்கு உடல் நலன் மிக இன்றியமையாதது. 'உடலார் ஒழிந்தால் உயிரார் ஒழி வார் - திடம்பட ஞானம் சேர வொட்டாது' என்றார் திருமூலனார். எவ்வழி நுழையினும் அது செயற்கை வழியாய் முடிகிறது. எஞ்சி நிற்பது இல்வாழ்வு ஒன்றே. அதை அஞ்ஞான வழி எனில், வேறு வழி என்னை? வேறு வழி நீத்தல் அல்லது துறவு என்று அவ்வன்பர்கள் கூறலாம். நீத்தல் அல்லது துறவைப் பற்றி இந்நூலின் இடையிடையே சொல்லி வருகிறேன். புலனடக்கத்திலும் குறிப்பாக அதுபற்றிச் சில உரை

பகர்ந்திருக்கிறேன். ஆயினும் இன்னும் சில மொழி கூறுதல் தவறாகாது.

## நீத்தல் அல்லது துறவு

புலனடக்கம் எவ்வாறு சில இடங்களில் திரிபாகக் கொள்ளப்பட்டிருக்கிறதோ, அவ்வாறே நீத்தலும் திரிபாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. அத்திரிபு பலஆண்டுகளாக நிலைத்தும் நிற்கிறது. அத்திரிபில் மயங்கிக் கிடப்போர்க்கு என்போன்றார் கூற்று, கூற்றாகவேதோன்றும்.

யான் புதிதாக ஒன்றுங் கூறுகிறேனில்லை. பண்டைத் தமிழ் மக்கள் கொண்ட ஓர் அறத்தையே இன்று வலியுறுத்துகிறேன். இடைக்காலத்தில் தோன்றிய திரிபும் மயக்கமும் நாட்டையே அலைக்கின்றன. தொல்காப்பியனார், இறையனார், திருவள்ளுவனார், மாணிக்கவாசகனார் கோலிய அறநெறியே யான் வலியுறுத்துஞ் செந்நெறியாகும். இப்பொழுது ரவீந்திரநாத் தாகூர் அவ்வறநெறியையே உலகிற்கு அறிவுறுத்தி வருகிறார்.

எனது உள்ளக்கிடக்கையைச் செவ்வனே உணராது, 'புது முறை' என்று என்மீது பழிசுமத்தும் அன்பர்கட்கு எனது வணக்கத்தைச் செலுத்துகிறேன். யான் குறிப்பது புது முறையன்று. அது பழைய முறையே. புது முறை காண்பதும் குற்றமாகாது. அதற்கும் மக்கட்கு உரிமை இருத்தல் வேண்டும். 'தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா' என்று உமாபதிசிவம் உரைத்திருத்தல் காண்க.

நமது நாட்டில் கருத்து வேற்றுமைக்கு மதிப்பு ஏற்படல் வேண்டும். கருத்து வேற்றுமை கொண்டு பகைமை பாராட்டலும் கேடு சூழலும் அறியாமை. கருத்து வேற்றுமைக்கு இடமும் மதிப்பும் கொடுப்பது சிறந்த நாகரிகமாகும். அவரவர் கருத்தை அவரவர் வெளியிடுவாராக. உலகம் கொள்ளத்தக்கதைக் கொள்ளும்; தள்ளத்தக்கதைத் தள்ளும். பழமை என்று மடமையைப் போற்றலும், புதுமை என்று செம்மையைத் தூற்றலும் அறிவுடைமையாகா. அக்குணமுடைய நாடு ஒருபோதும் வளர்ச்சியுறாது. கருத்து வேற்றுமைக்கும் புதுமைக்கும் இடந்தர இடந்தர நாடு வளரும். இதுநிற்க.

**கருத்து வேற்றுமை**

நீத்தல் என்பதற்கு உலக ஆசையை நீப்பது என்று சொல்லப்படுகிறது. அவ்வாசை, மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை என்று தொகுக்கப்பட்டிருக்கிறது. அம் மூவாசையுள் பெண்ணாசையை நீத்தால், மற்ற ஆசைகள் தாமே நீங்குமென்றும் அறையப்படுகிறது. 'மண்ணாசை தன்னிற் பொன்னாசையின் மயக்க வாழ்க்கை - பெண்ணாசை நீத்தல் எளிதோ பெரியோர் தமக்கும்' என்றும் பெண்ணாசையின் கொடுமை குறிக்கப்படுகிறது. பெண்ணாசையால் எல்லா ஆசையும் வளரும் என்பது அச்சகோதரர்கள் கருத்துப் போலும்!

**மூவாசை**

இடைக் காலத்தில் ஆணுலகில் எழுந்த அடக்குமுறை, பெண்ணுலகை மாயையாகவும் அஞ்ஞானமாகவும் கருதச் செய்திருக்கிறது. பெண்ணுடன் வாழ்தல் பிரவர்த்தி மார்க்கமாம்! அஞ்ஞானமாம்! அவ்வாழ்வு

துறத்தல் நிவர்த்தி மார்க்கமாம்! மெய்ஞ்ஞானமாம்! இந்த ஞானம் பேசும் 'அறிஞரை' நோக்கிச் சில கடாக்கள் கடாவ விரும்புகிறேன். அறிஞரே! நீவிர் யாண்டிருந்து முளைத்தீர்? நுமது தந்தை ஒரு பெண்ணுடன் கூடி வாழா தொழிந்திருப்பரேல், நீவிர் இப்பொழுது இந்த ஞானம்பேச முடியுங் கொல்! நுந் தாய்தந்தையர் சேர்க்கை யன்றோ நுமது துன்ப இருட்கட்டை அவிழ்த்து, இவ்வுடலீந்து, இவ்வுலக வாழ்வு தந்து, உம்மை ஞான ஆராய்ச்சி புரியுமாறு செய்திருக்கிறது? அவரைப் போல நீவிரும் ஒரு பெண்ணுடன் கூடி வாழ்ந்து, துன்ப இருளிலுள்ள சில உயிர்கட்கு உடலீந்து, அவைகளை இவ்வுலகில் கொணர வேண்டுமென்றோ? நீவிர்மட்டும் ஞானம் பெற்று விடுபேறெய்துவது அறமாகுமோ? இது தன்னலமா பிறர் நலமா? தன்னலமுடையார்க்கு ஞானம் உண்டோ? அன்பு உண்டோ? நீவிர் பெண்வாழ்வை மறுப்பது இறைவன் படைப்பு நோக்குக்கு இடையூறு செய்வதாகாதோ? புத்தர், கிறிஸ்து, மகம்மது, காந்தி போன்ற பெரியோர்கள் உலகிற்கு வேண்டாமோ? பெண்ணுடன் வாழ்தலை வெறுத்தால், அத்தகைப் பெரியோர்கள் எப்படி உலகில் தோன்றுவார்கள்? அறிஞரே! ஓர்மின். பெண்ணின் வயிற்றிற் பிறந்து ஞானம் பேசும் ஒருவர், அப்பெண்ணை - 'மாயை - அஞ்ஞானம் - பிரவர்த்தி' என்று பேசுவது எத்தகை நன்றியறிதல்! எத்தகைக் கைம்மாறு! வெட்கம்! வெட்கம்!

பெண்ணை நீத்தல் ஞானமாகாது

அஞ்ஞானம் எது? மெய்ஞ்ஞானம் எது? பெண் தெய்வத்தை மாயையாகக் கருதுவதும், அங்ஙனங்

கருதி அவளைத் துறப்பதும் அஞ்ஞான மென்றும், பெண்ணைக் கடவுள் வடிவம் என்று உணர்வதும், உணர்ந்து அவளுடன் அன்பு வாழ்வு நடாத்துவதும் மெய்ஞ்ஞான மென்றும் நான் சொல்கிறேன். இங்ஙனமே பெண்ணுடன் கூடி வாழல் நிவர்த்தி என்றும், கூடி வாழாதொழிவது பிரவர்த்தி என்றும் சொல்கிறேன். எப்படி?

**திருவள்ளுவர் வழி விளக்கம்**

திருவள்ளுவனார் வழியே நின்று எனது கருத்தை வெளியிடுகிறேன். திருவள்ளுவனார், 'மனத்தின் கண் மாசிலனாதல் அனைத்து அறன்' என்றும், 'அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்' என்றும் அறத்தின் இயல்பு கூறியிருக்கிறார். இவ்வறநிலை முன்னருங் கூறப்பட்டிருக்கிறது. அழுக்காறு முதலிய குற்றங்களினின்றும் நீங்கி மன மாசு அகற்றுவது எப்படி? ஏட்டுப் படிப்புக் கொண்டு எல்லாவற்றையும் நீத்தால் மனமாசு அகன்றுவிடுமோ? வாய்வேதாந்தம் மிக எளிதில் பேசிவிடலாம்.

**பெண்ணை விடுத்தோடல்**

எவ்வெண்ணத்தோடு வாய் ஞானிகள் துறவு கொள்ள விரும்புகிறார்கள்? 'பெண் மாயை; காமப் பொருள்' என்னும் எண்ணத்தோடன்றோ? இவ்வெண்ணத்துடன் அவர்கள் காட்டுக்கோடினாலென்ன? மூக்குப் பிடித்துக் கிடந்தாலென்ன? அவர்கள் உள்ளத்துள்ள காமநோய் போமோ? காமம் என்னும் எண்ணம் உள்ளமட்டும் அது மலையிலும் எரிக்கும்; நீரிலும் எரிக்கும்; காட்டிலும் எரிக்கும்; நாட்டிலும் எரிக்கும்; எங்கும்

எரிக்கும். அவ்வெரியால் 'இத்துறவோர்' கூடா ஒழுக்கத்திலோ வேறு எச்செயற்கைத் துறையிலோ வீழ்ந்து ஒழியினும் ஒழிவர். வீழா தொழியினும் பெருநிலை இவர்க்குக் கூடப் போவதில்லை. என்னை? மனமாசு அகலா ஒருவர்க்கு எங்ஙனம் பெருநிலை கூடும்? இவர் மனதிலுள்ள மாசன்றோ பெண்ணிடத்துள்ள கடவுட்டன்மையை மறைத்து, அதை மாயையாகக் கருதித் துறக்கச் செய்தது? அம்மாசு எவர் பாலது? பெண்ணின் பாலதா? 'இத்துறவோர் பாலதா? தம்பாலுள்ள மாசினைத் துடைக்க வழிதேடாது, அம்மாசு துடைக்க வந்த பெண் தெய்வத்தை - அன்பு வடிவை - மாயை என்று கருதி யோடுவது அஞ்ஞானமாகாது, பின்னை எஞ்ஞானமாகும்?

காமக் கொடுமை

'மனத்தின்கண் மாசிலனாதல்' என்று அறநிலை கூறிய திருவள்ளுவனார், அம்மனமாசு அகற்றுதற்கு வழி கூறாதொழிந்தாரில்லை. அவ்வழி எது? பாயிரத்துள் அறன் வலியுறுத்தி, அவ்வறநிலை பெறுதற்குப் படிப்படியாக அவர் வழி கோலியிருக்கிறார். முதலாவது திருவள்ளுவனார் இல்வாழ்க்கை குறிக்கிறார்; பின்னை அதற்குரிய வாழ்க்கைத் துணை நலம் வகுக்கிறார்; அதற்குமேல் மக்கட்பேறு புகல்கிறார்; அதனின்றும் அன்புடைமை, விருந்தோம்பல் முதலிய அறத்துறைகளை முறை முறையே அணி அணியாகத் தொகுத்துச் செல்கிறார். இவ்வதிகார வைப்பின் நுட்பத்தைச் சிறிது கூர்ந்து நோக்குவோம்.

மனமா சகற்றும்வழி

அழுக்காறு அவா முதலிய மாசு படர்ந்த மனதில் தன்னல உணர்வே பெரிதும் இருக்குமன்றிப் பிறர் நலங்கருதும் அன்பு நிகழ்தல் அரிது. அன்பும் கடவுளும் ஒன்றே. அழுக்காறு முதலியன குறையக் குறையத் தன்னலப் பேயுணர்வுந் தேய்ந்து தேய்ந்திறுகும். பின்னை அவ்விடத்தில் அன்புக்கடவுள் உணர்வு வளர்ந்து வளர்ந்து, மற்ற உயிர்களிலும் அக்கடவுள் கோயில் கொண்டிருத்தலைப் புலப்படுத்தும். அதனால் எவ்வுயிர்கட்கும் தீங்கு, நெஞ்சிலும் நினையாது, அவ்வுயிர் நலன் நாடிப், பயன்கருதாத் தொண்டாற்ற இயல்பாக ஒருணர்வு எழும். அவ்வுணர்வு பெறவே மக்கள் பிறக்கிறார்கள். அவ்வுணர்வு பெறுவிக்கவே கடவுள் உயிர்கட்குத் தநு கரண புவன போகங்களைக் கொடுக்கிறார். இவ்வுலக வாழ்வின் நோக்கமும் இவ்வுணர்வு பெறல்வேண்டு மென்பதே.

அன்புக் கடவுள் கோயில் கோள்ளல்

இப்பெரு நிலையைப்பற்றி மக்கள் முதல் முதல் கலைஞானத்தளவில் உணர்கிறார்கள். 'எட்டுச் சுரைக் காய் கறிக்கு உதவாது' என்பது பழமொழி. எட்டில் படித்தது நடையில் - செயலில் - வரல் வேண்டும். 'எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' என்று வாயால் சொல்வது எளிது. அதைச் செயலில் கொணரல் அரிது. அழுக்காறு அவா முதலிய மாசுகளைத் துடைத்தால் தன்னிடத்தும் பிறரிடத்தும் விளங்கும் அன்புக் கடவுள் தோற்றமுறும் என்று பேசலாம்; எழுதலாம். அப்பெரு நிலையைச் செயலில் பெற்றாலன்றோ வாழ்

கலைஞானத் நால் பயனின்மை

வின் நோக்கம் நிறைவேறும்? வெறுங் கல்வியுடன் நின்றால் மனமாசு எங்ஙனம் அகலும்? அன்பு ஊற்று எங்ஙனம் திறக்கும்?

'இக்கல்வி' அறிவோடு வளரும் ஒருத்தியும் ஒருவனும் ஒன்றி வாழப்புகுவரேல், கல்வி அறிவாலாய பயன் பெறுவர். இல்லையேல் அவர் அப்பயன் பெறாதொழிவர். கல்விப் பயனைப் பெறுதற்குரிய நிலை ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழும் நிலை என்க. அந்நிலைகூட்ட இயற்கை, தன் நாட்டத்தைச் செலுத்திக் கொண்டிருக்கிறது.

கல்விப்பயன் இல்லறம் என்பது

உற்றவயதில் இருவர்க்கும் ஓரின்ப உணர்வு ஏன் தோன்றுதல் வேண்டும்? அவ்வுணர்வின் நோக்கம் என்னை? இருவரையும் சேர்க்கவேண்டுமென்பதன்றோ? இருவரும், இயற்கை கூட்டும் வழிச் சேர்ந்தால், வாழ்வின் நோக்கங் கைவரப் பெறுவர். வாய்வேதாந்தம் பேசிப் போலித்துறவில் அவர் தலைப்படுவரேல், வாழ்வு நோக்கம் பெறாது இடர்ப்பட்டொழிவர். இயற்கைவழி என்னும் ஆண்டவன் ஆணைவழி நிற்றலே அறிவுடைமை. அதற்கென்றே படைப்புகளும் அமைந்திருக்கின்றன. ஒருத்தி ஒருவனுடன் வாழ்தலும், ஒருவன் ஒருத்தியுடன் வாழ்தலும் இயற்கை; இயற்கை.

இயற்கைவழி ஒருத்தியும் ஒருவனும் கூடி இல்வாழ்வில் நுழைகிறார். நுழைவதால் வாழ்வு நோக்கம் எங்ஙனம் நிறைவேறும்? இங்கே கூர்ந்து கூர்ந்து வாழ்வின் வளர்ச்சியை நோக்குவோமாக. நாளடைவில் படிப்படியாக இவளிடத்துள்ள அழுக்காறு அவா முதலிய

இல்லறத்தில் தன்னலக்கேடு

மாசுகளும், அங்ஙனே இவனிடத்துள்ள அம்மாசு களும், தேய்ந்து தேய்ந்து, அவ்விடத்தில் பொறுமை, தியாகம், இவை எல்லாவற்றிற்கும் அடிப்படையாக வுள்ள அன்பு, படிப்படியாகக் கால்கொண்டு கோயில் கொள்ளும் அழகை என்னென்று சொல்வது? சுருங்கச் சொல்லின், தன்னலங்கெட்டுப் பரநலம் பெருகுகிறது என்னலாம்.

**மணத்தின் பின்னர் விளையும் மாறுதல்**

மணவாழ்விற்கு முன்னர், ஒருத்தி பெரிதுந் தன்னையே நேசித்துத் தன்னலத்திலேயே நாட்டஞ் செலுத்துகிறாள். ஒருவனும் அவ்வாறே தன்னலத்தில் தோய்ந்து கிடக்கிறான். காரணம் பரநலத்துக்குரிய அன்பு ஊற்றை, அழுக்காறு அவா வெகுளி முதலிய மாசுகள் மறைத்து மூடிக்கொண் டிருப்பதேயாகும். மணவாழ்விற்குப் பின்னை ஒரு பெரும் மாறுதல் இருவர்பாலும் நிகழ்கிறது. இவள் இவனை நேசிக்கிறாள்; இவன் இவளை நேசிக்கிறான்; அந்தோ! எத்தகை நேசம்! சொல்லவும் இயலுமோ! இவள் இவன் ஆகிறாள்; இவன் இவள் ஆகிறான். இருவரும் ஒருயிர் ஈருடலெனப் பொலிகிறார். இவள் நோயுற்றால் இவன் நோயுற்றதுபோல வருந்துகிறான். இவன் நோயுற்றால் இவளும் அங்ஙனே வருந்துகிறாள். என்ன நேசம்! ஒருவரிடத்தில் முன்னே கட்டுப்பட்டுக் கிடந்த அன்பு இப்பொழுது இருவர்பால் பரவலாயிற்று. எவ்வளவு அன்பு பரவுகிறதோ, அவ்வளவில் அழுக்காறு அவா முதலிய மாசும், அதனாலாகுந் தன்னலமும் கெடும்.

இருவரும் கூடி வாழும் பொழுது இவர்களது அன்பின் பயனாகக் குழந்தைகள் பிறக்கின்றன. அக் குழந்தைகள் இவ்விருவருடைய உயிர் என்று கூறல் மிகையாகாது. தாயும் தந்தையும் அக் குழந்தைகளை எப்படி நேசிக்கிறார்கள் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இருவரிடையே பரவி முட்டிக்கொண்டிருந்த அன்பு, இப்பொழுது மூன்றாவது உயிர்களிடைப் பரவி நிற்கிறது. அவ்வளவில் அழுக்காறு அவாமுதலியன கெடுகின்றன. பிள்ளைகள் பால் அழுக்காறு முதலியன செலுத்தும் தாய்தந்தையர் அரியர். தாய் தந்தையர் தமக்கெனக் கொண்ட வாழ்வு இப்பொழுது பிள்ளைகளுக்கென்று அர்ப்பணஞ் செய்யப்படுகிறது. அன்பர்களே! பாருங்கள்; தன்னலம் கெடுவதையும், தியாக உணர்வு பெருகுவதையும் உன்னிப் பாருங்கள். அன்பு நிகழும் இடத்தில், அழுக்காறு முதலிய மாசுகள் தலை காட்டுமோ? இப்பொழுது தாய் தந்தையர் தம்மை மறந்து மூன்றாவது உயிர்களாகிய பிள்ளைகள் நலத்துக்கென வாழ்பவராகிறார். அழுக்காறு முதலியன குறைதலும் அன்பு வளர்தலும் 'நிவர்த்தியா பிரவர்த்தியா' என்று, பெண்ணை வெறுக்கும் 'பெரியோர்களை' நோக்கி வினவுகிறேன்.

பிள்ளைப் பேற்றல் தியாகம் பெருகல்

இல்வாழ்வு ஏற்ற ஒருவன், தன்பாலுள்ள மாசு குறைந்து, அன்பு ஊற்றுத் திறக்கப் பெற்று, அவ்வன்பு, மனைவி மக்கள் மீது பொழிவது காணும் பேறு

பெற்றிருக்கிறான். பெண்ணை 'மாயை' என்று வாய் வேதாந்தம் பேசித் திரியும் ஒருவன், அன்பின் தன்மை இன்னதென்று உணராது, மாசடர்ந்த இருள் மனமுடையனாய் நிற்கிறான். எவன் நிவர்த்தி மார்க்கத்தில் இருப்பவன்? எவன் பிரவர்த்தி மார்க்கத்தில் இருப்பவன்? நேயர்களே! சிந்தித்து உண்மை காணுங்கள்.

பெண்ணை வெறுத்தவனும் கொண்டவனும்

ஒருத்தியும் ஒருவனும் இளமையில் ஏட்டில் படித்த அன்பை இப்பொழுது வாழ்வில் காண்கிறார். இளமையில் இவ்விருவரும் கற்றவராகலான், பிள்ளைகளைப் பெற்று, அவர்கள் நலனுக்குப் பயன் கருதாத் தொண்டு செய்துவரும் வேளையில் 'இவ்வுயிர்கட்கும் மற்றவுயிர்கட்கும் என்ன வேற்றுமை? இவர்கட்குள்ள பசி பிணி முதலியன மற்றவர்கட்கும் உண்டு. இவர்கள் நம் வயிற்றிற் பிறந்தமையான், இவர்களை நாம் பாதுகாக்கிறோம். அங்ஙனமே மற்றவர்களும் தங்கள் தங்கள் மக்களை வளர்த்து வருகிறார்கள். இஃது ஆண்டவன் கோலியுள்ள ஒழுங்குமுறை. உதவியின்றி வருந்தும் உயிர்கட்கும் நாம் உதவுதல் வேண்டும்' என்னும் எண்ணம் அடிக்கடி அவர்கள் உள்ளத்தில் தோன்றும். அப்பரோபகார எண்ணம் முதிர முதிர அழுக்காறு அவா முதலியன கெடுகின்றன. அவை கெடக் கெட அவர்கள் அன்பு, மற்ற உயிர்களிடத்தும் பரவத் தொடங்குகிறது. பின்னை அவ்வன்பு அஃறிணை உயிர்களிடத்தும் பரவுகிறது. இப்பாவல் முறையை விரித்

மற்ற உயிர்களிடம் அன்பு பரவல்

துக்கூற வேண்டுவதில்லை. பரோபகார எண்ணம், மன மாசைத் துடைத்து, மக்களைத் தூய்மைப்படுத்தி, எவ் வுயிரினும் நிறைந்துள்ள அன்புக் கடவுளைக் காட்டும். இம்முழுநிலை பெற்றோர் முழு நிவர்த்தி அடைகிறார். இந்நிலைக்கு இல்வாழ்வும் பிள்ளைப் பேறும் கருவியா யிருத்தல் கருதற்பாலது. பிள்ளைப் பேற்றிற்குப் பின் னரே மக்களிடத்து அன்பு உளமும்-பரோபகார சிந்தை யும்-திறக்கப்படுதலும் கவனிக்கத் தக்கது. ஒருத்தியும் ஒருவனும் இளமையில் கற்ற 'எவ்வுயிர்க்கும் அன்பா யிரு' என்னும் கல்வியை இப்பொழுது அவர் வாழ்வில் காண்கிறார். எவ்வுயிர்க்கும் அன்பா யிருத்தலாவது தம்பாலுள்ள குற்றங்களை முற்றுங் களைந்த ஒரு நிலை என்க. இஃதன்றோ மெய்ஞ்ஞானம்? நிவர்த்தி மார்க் கம்? திருவள்ளுவனார் உலகிற்கு அறிவுறுத்திய நெறி இச் செந்நெறி என்க.

திருவள்ளுவனார் 'மனத்தின்கண் மாசிலனாதல் அனைத்தறம்' என்றும், 'அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்' என்றும் கூறி, அழுக்காறு அவா முதலிய மனமாசுகளை அகற்றும் வழி கோலுவான், இல்வாழ்க்கை, வாழ்க் கைத்துணை நலம், மக்கட் பேறு, அன்புடைமை, விருந் தோம்பல் முதலிய அதிகாரங்களை முறை முறையாக அமைத்தனர். அம்முறையில் அழுக்காறு முதலியன தேய்தலும் அன்பு முதலியன வளர்தலும் அமைந் திருத்தல் காண்க.

மக்கட் பேற்றிற்குப் பக்கத்தில் அன்புடைமையை யும் விருந்தோம்பலையும் பொருத்தியிருத்தல் கருதற்

பாற்று. ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழ்வு நடாத்தி மக்களை ஈன்ற பின்னரே அன்னார் அன்பின் தன்மை இன்னதென்று அநுபவத்தில் உணர்கிறார். அந்நிலையில் அவர்தம் அன்பு ஊற்றுத் திறக்கிறது.

**அன்புடைமையும் விருந்தோம்பலும்**

அவர்க்கு அப்பொழுது அன்பு உடைமையாகிறது. பிள்ளையில்லா ஒருவன் அடாத செயல் நிகழ்த்தும்போது, அவனை நோக்கிப் 'பிள்ளையில்லாப் பாவி' என்று உலகோர் சொல்வது வழக்கம். அதன் பொருள் என்னை? அன்பில்லாதவன் என்பது. பிள்ளைப் பேற்றிற்கும் அன்பொழுக்கத்துக்கும் உள்ள தொடர்பு வாழ்வில் அநுபவத்தில் உணரத்தக்கது.

அன்புடைமைக்குப் பின்னே 'விருந்தோம்பல்' வைக்கப்பட் டிருக்கிறது. பிள்ளைப்பேற்றிற்குப் பின்னெழும் அன்பு, தொடர்புடைய அப்பிள்ளையளவில் நில்லாது, தொடர்பில்லா உயிர்களிடத்தும் பாய்தலை அவ்வதிகாரம் தெரிப்பதென்க. இதுபற்றி மேலேயுஞ் சொல்லியிருக்கிறேன்.

புதிதாக வருவோரே விருந்தினராவர். விருந்து என்னுஞ் சொல்லிற்குப் புதுமை என்பது பொருள். உற்றார் உறவினர் நண்பர் முதலியோர் விருந்தினராகார். முன் பின் பழக்கமின்றி வருவோரே விருந்தினராவர். அவர்க்கு உதவுதல் தொடர்பில்லா மற்ற உயிர்கட்கு உதவுதலைக் குறிப்பதாகும். இக்காரணம்பற்றியே விருந்தோம்பல் அன்புடைமைக்குப் பின்னே பொலிகிறது. அன்பில்லாவிடத்தில் விருந்தோம்பல் ஏது?

மற்றைய மற்றைய அதிகாரங்களெல்லாம் ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழும் வாழ்வில் கொள்ளத்தக்க

முறைகளையும் தள்ளத்தக்க முறைகளையும் வகை வகை யாக விரித்துக் கூறுவனவாகும்.

இப்பொழுது நீத்தல் எது? பெண்ணை மாயை என்று இல்வாழ்வை விடுத்து ஓடுவதா அல்லது இல் வாழ்வு கொண்டு அழுக்காறு முதலியவற்றை நீக்கு வதா என்று உன்னுதல் வேண்டும். இல்வாழ்வு, அழுக் காறு அவா முதலிய மாசுகளை நிவர்த்தி செய்யும் மார்க்கம் என்பது செவ்வனே எடுத்துக்காட்டப்பட் டிருக்கிறது. திருவள்ளுவனார் கோலிய வழியும் அதுவே என்பதும் விளக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் பெண்ணை மாயை என்று விடுத்து ஓடல்—நீத்தல் ஆகாதென்றும், அது மாயையில் தோய்ந்து கிடக்கும் பிரவர்த்தி மார்க்க மென்றும் உணர்க.

திருவள்ளுவனார் பாயிரத்தில் 'நீத்தார் பெருமை' என்றோர் அதிகாரமும், அறத்துப்பாலில் 'துறவு' என் றோர் அதிகாரமும் அருளியிருத்தல் என்னை என்று சிலர் வினவலாம். அவ்விரண்டதிகாரமும் எனது கருத் துக்கு அரண் செய்வனவேயாகும். மனமாசகற்றுதற்கு இல்வாழ்க்கை முதலிய வழி காட்டிய ஒருவர், அதற்கு மாறுபட்டு மற்றவிடங்களில் வேறு வழி காட்டுவரோ? காட்டார். 'நீத்தல்' 'துறவு' என்னுஞ் சொற்களைக் கொண்டு, அவை பெண்ணை வெறுக்கும் போலித் துற வைக் குறிப்பன என்று, திருவள்ளுவனாரை மற்றவர் தம்வழி ஈர்க்க முயலலாகாது. பெண்ணை வெறுத்தல் துறவெனக் கொள்வோர் கொள்க. அதைப்பற்றிய கவலை எனக்குச் சிறிதும் இல்லை. திருவள்ளுவனாரை 'அத்துறவோர்' தமக்குத் துணை கோடல் குறித்து

வருந்துகிறேன். இயற்கை வாழ்வு நடாத்தி, 'இயற்கை அறவழியே உய்யும் வழி' என்று உணர்த்திய ஒருவர் மீது ஏன் வீண்பழி சுமத்தல் வேண்டும்?

'நீத்தார் பெருமை' 'துறவு' என்னும் இரண்டதிகாரங்களில் யாண்டாயினும் பெண்ணை மாயை என்று துறக்குமாறு திருவள்ளுவனூர் மொழிந்திருக்கிறூரா என்பது ஆராயற்பாற்று. அவ்விரண்டதிகாரங்களும் வருமாறு :—

### நீத்தார் பெருமை

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று.

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

குணமென்னுங் குன்றேறி நின்றூர் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

திற மணங்கள் காணலாம். பண்டைக் காலத்தின் முடிவி லிருந்த அறிஞர்கள் மணத்தை எட்டு வகையாகப் பிரித் தார்கள். நக்கீரனாரும், நச்சினார்க்கினியரும் முறையே தமது இறையனார் அகப்பொருள் உரைக் கண்ணும், தொல்காப்பிய உரைக்கண்ணும் அவ்வெட்டுவகை மணங் களை விளக்கி உரைத்திருக்கின்றார். அவர் உரைகளை ஈண்டு எடுத்துக் காட்டுகிறேன். அவை வருமாறு:—

'**பிரமம்** என்பது நாற்பத் தெட்டியாண்டு பிரமசரியங் காத்தாற்குப் பன்னீராட்டைப் பிராயத்தாளை அணிகலன ணிந்து கொடுப்பது. கொடாவிடின், ஓரிருதுகாட்சி ஒரு வனைச் சாராது கழிந்தவிடத்து ஒருபார்ப்பனக் கொலை யோடு ஒக்குமென்பது; அதனை அறநிலை யென்பது. **பிரசாபத்தியம்** என்பது மைத்துன கோத்திரத்தான் மகள்வேண்டிச் சென்றால் மறாது கொடுப்பது ; அதனை ஒப்பென்பது. **ஆரிடம்** என்பது ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற் குளம்பினவாகச் செய்து அவற் றிடை நீரிற்கொடுப்பது ; அதனைப் பொருள்கோளென் பது. **தெய்வம்** என்பது, வேள்வியாசிரியற்கு வேள்வித் தீமுன் வைத்துக் கொடுப்பது; அதனைத் தெய்வமென்று வழிபடப்பட்டது. **அசுரம்** என்பது, கொல்லேறு கொண் டான் இவளையெய்தும், வில்லேற்றினான் இவளை யெய் தும், திரிபின்றி எய்தான் இவளை யெய்தும், மாலை சூட் டப்பட்டான் இவளை யெய்தும், இன்னதொரு பொருள் தந்தான் இவளையெய்துமென இவ்வாறுசொல்லிக்கொடுப் பது: அஃது அரும்பொருள் வினைநிலை யென்பது. **இராக் கதம்** என்பது அவள் தன்னினுந் தமரினும் பெறாது வலிந்து கொள்வது. **பைசாசம்** என்பது மூத்தாண் மாட் டுந் துயின்றாண்மாட்டுங் களித்தாண்மாட்டுஞ் சார்வது : அது பேய்நிலை யெனப்படும். **கந்தர்வம்** என்பது இருவர்

ஒத்தார் தாமே கூடுங் கூட்டம்; அதனை யாழோர் கூட்ட மென்ப. —**நக்கீரனர்.**

**பிரமமாவது** :—ஒத்த கோத்திரத்தானாய் நாற்பத்தெட் டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண் டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது. ‘கயலே ரமருண்கட் கன்னிபூப் பெய்தி - யயல்பே ரணிகலன்கள் சேர்த்தி - யியலி - னிரலொத்த வந்தணற்கு நீரிற் கொடுத்தல் - பிரமமண மென்னும் பெயர்த்து.’ **பிரசாபத்தியமாவது** :— மகட்கோடற்கு உரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம் மகட்கு ஈந்து கொடுப்பது. ‘அரிமத ருண்க ணயிழை யெய்துதற் - குரியவன் கொடுத்த வொண்பொருளிரட்டி திரிவின் றந்தை திண்ணிதிற் சேர்த்தி - யரியதன் கிளை யோ டமைவரக் கொடுத்தல் - பிரித லில்லாப் பிரசா பத் தியம்.’ **ஆரிடமாவது** :—தக்கான் ஒருவற்கு ஆவும் ஆனே றும் பொற்கோட்டுப் பொற் குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன்அணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது. ‘தனக்கொத்த வொண்பொரு டன்மகளைச் சேர்த்தி - மனைக்கொத்த மாண்புடையாற் பேணி - யினக்கொத்த - வீரிடத் தாவை நிறீஇயினி தீவதே - ஆரிடத்தார் கண்டமண மாம்.’ **தெய்வமாவது** :— பெருவேள்வி வேட்பிக்கின்றார் பல ருள் ஒருவற்கு அவ்வேள்வித் தீமுன்னர்த் தக்கணையாகக் கொடுப்பது. ‘நீளி நெடுநகர் நெய்பெய்து பாரித்த - வேள்வி விளங்கழன் முன்னிறீஇக் - கேள்வியாற் - கை வைத்தாம் பூணுளைக் காமுற்றாற் கீவதே - தெய்வ மணத் தார் திறம்.’ **அசுரமாவது** :—கொல்லேறு கோடல் திரி பன்றி யெய்தல் வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல். ‘முகையவிழ் கோதையை முள்ளெயிற் றரி

வையைத் - தகைநலங் கருதுந் தருக்கினி ருளரெனி. னிவையிவை செய்தாற் கெளியண்மற் றிவளெனத் - தொகைநிலை யுரைத்த பின்றைப்பகைவலித் - தன்னவை யாற்றிய வளவையிற் - றென்னிலை யசுரந் துணிந்த வாறே.' **இராக்கதமாவது** :— தலைமகடன்னிலுந் தமரிலும் பெறாது வலிதிற் கொள்வது. 'மலிபொற்பைம் பூணாளை மாலுற்ற மாந்தர் - வலிதிற்கொண் டாள்வதே யென்ப - வலிதிற் - பராக்கதஞ் செய்துழலும் பாழி நிமிர்தோ - ளிராக்கதத்தார் மன்ற லியல்பு.' **பைசாசமாவது** :—மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோளை மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும் பிறவுமாம். 'எச்சார்க் கெளிய ரியைந்த காவலர் - பொச்சாப் பெய்திய பொழுதுகொ ளமையத்து-மெய்ச்சார் பெய்திய மிகுபுகழ் நண்பி - னுசாவார்க் குதவாக் கேண்மைப் - பிசாசர் பேணிய பெருமைசா லியல்பே'. 'இடை மயக்கஞ் செய்யா வியல்பிணி னீங்கி - யுடைமயக்கி யுட்கறுத்த லென்ப - வுடைய - துசாவார்க் குதவாத வூனிலா யாக்கைப் - பிசாசத்தார் கண்டமணப் பேறு.' இனிக் **கந்தருவமாவது** :—கந்தருவ குமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்தது போலத் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது. 'அதிர்ப்பில்லைம் பூணரு மாடவருந் தம்மு - ளெதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப - கதிர்ப்பொன்யாழ் - முந்திருவர் கண்ட முனிவறு தன்காட்சிக் - கந்தருவர் கண்ட கலப்பு' என இவற்றானுணர்க.

—**நச்சினார்க்கினியர்**

இவ்வெட்டனுள் பண்டைக் காலத்தில் நிலவியது களவு மணம். அக்கால இறுதியில் எட்டுவித மணவகைகள் தோன்றின என்பது தெரிகிறது. அவ்

வெட்டும் நிலவியபோதும் அறிஞர்கள் பண்டை மண மாய களவு மணங்கொண்டே வாழ்ந்தார்கள். தொல் காப்பியனாரும், இறையனாரும் களவு மணத்தையே போற்றிப் பிறவற்றின் இயலைக் குறிப்பிட்டுச் சென்றார்.

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்
காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே.

—தொல்காப்பியனார்

அன்பி னைந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்.—**இறையனார்**

இம்மணங்களை உற்று நோக்குழிக் களவு மணம் ஒன்று தவிர, ஏனைய மணங்களிற் சில ஒருதலைக் காம முடையனவாயும், சில இருவர்வழி வேட்கை பெறினும் வயது முதலியன பொருந்தாதனவாயும் விளங்குதல் காணலாம். ஒருதலைக்காமம் கைக்கிளை யென்றும், பொருந்தாதது பெருந்திணையென்றும் பண்டை மக்க ளால் அழைக்கப்பட்டன.

முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே
பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே.

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். அகத்திணை யுணர்ந்த அறிஞர், இவ்விரண்டையும் ஒதுக்கிக் களவு மணம் ஒன்றையே கொண்டனர். தொல்காப்பியனாரும் இறையனாரும் 'ஒத்த கிழவனும் கிழத்தியும்' என்றும்,

'அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவது' என்றும் முறை முறையே ஓதியிருத்தல் காண்க.

களவு மணத்தின் நுட்பம் உணராதார், 'களவு' என்னுஞ் சொற்கேட்டு, அம்மணத்தை இழிவாகக் கருதுகிறார். ஈண்டுக் களவு என்பது, மற்றக் களவு போன்றதன்று.

> 'என் பயக்குமோ இது கற்கவெனின், வீடுபேறு பயக்கு மென்பது. என்னை? இது களவியலன்றே? இது கற்க வீடுபேறு பயக்குமா றென்னை? களவு கொலை காமம் இணைவிழைச்சு என்பனவன்றோ சமயத்தாரானும் உலகத்தாரானுங் கடியப்பட்டன? அவற்றுள் ஒன்றன் றேலோ இது? எனின், அற்றன்று. களவெனுஞ் சொற் கேட்டுக் களவு தீதென்பதூஉங் காமமெனுஞ் சொற் கேட்டுக் காமந்தீதென்பதூஉமன்று; மற்றவை நல்லவா மாறு முண்டு: என்னை? ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவலென்னும் உள்ளத்தளாய்நஞ்சு கூட்டி வைத்து, விலக்குவாரில்லாதபோழ் துண்பலென்று நின்றவிடத்து, அருளுடையா னொருவன் அதனைக்கண்டு இவளிதனை யுண்டு சாவாமற் கொண்டுபோ யுகுப்ப லென்று அவளைக் காணுமே கொண்டுபோ யுகுத்திட் டான்; அவளுஞ் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்றாள். அது காணளாய்ச் சாக்காடு நீங்கினாள். அவன் அக்களவினான் அவளை உய்யக் கொண்டமையான் நல் லுழிச் செல்லுமென்பது. மற்றும் இது போல்வன களவாகா, நன்மை பயக்கு மென்பது.'
>
> 'இங்குப் பிறவுங் களவுண்மை சொல்லி அக்களவுகட் கெல்லாம் இவ்வளவு சிறப்புடைமை சொல்லும், அறக்கம் வீடுபேறுகளை முடிக்குமாகலான் எனப்படுவ தென்று சொல்லிச் சிறப்பிக்கப்பட்டது. அது பாயிரத்துள்ளும்

உரைத்தாம். மற்று உலகத்துக் களவானவெல்லாம் கை குறைப்பவுங் கண்சூலவுங் கழுவேற்றவும் பட்டுப் பழியும் பாவமுமாக்கி, நரகத் தொடக்கத் தீக்கதிகளில் உய்க்கும். இது மேன்மக்களாற் புகழப்பட்டு ஞானவொழுக்கத்தோ டொத்த இயல்பிற்றாகலானும் பழிபாவ மின்மையானும் எனப் படுவதென்று விசேடிக்கப்பட்டது.'

என்று நக்கீரனாரும்,

'பிறர்க் குரித்தென்று இருமுது குரவாற் கொடை யெதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இரு வருங் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த கள வாதலின் இது பிறற்குரிய பொருளை மறையிற் கொள் ளுங் களவன்றாயிற்று. இது வேதத்தை மறைநூலென் றாற் போலக் கொள்க. * * * * 'உலகத்து மன்ற லாவது குரவர் கொடுப்பதற்கு முன்னர் ஒருவற்கும் ஒருத் திக்குங் கண்ணும் மனமுந் தம்முள் இயைவதேயென வேதமுங் கூறிற்றாதலின்'

என்று நச்சினார்க்கினியரும் களவியலை விளக்கியிருத் தல் காண்க. விரிவு அக நூல்களிற் பார்க்க.

**களவுமண விளக்கம்**

களவுமணமாவது, 'ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடைய' ஒருத்தியும், ஒருவனும் பிறர் முயற்சி யின்றி, ஆண்டவன் அருள் கூட்டிய வழிக்கூடி, இவள் இவனு மாறும், இவன் இவளா மாறும் ஐம்புலனா இன்பநுக ருங் காதல் மணமென்க. இம்மண வாய்ப்படும் ஒருத் திக்கும் ஒருவனுக்கும் நிகழும் இன்ப அன்பே வாழ் வின் நோக்கத்தை நிறைவேற்ற வல்லது. இதன் பெற் றியை அக நூல்கள் விரித்துக் கூறுகின்றன.

இவ்வாறு நடைபெற்று வந்த களவு மணத்துட னும் நாளடைவில் சில வினைமுறைகள் கூடலாயின. உலகிடைப் பொய்யும் வழுவும் புகுந்த பின்னர்க் களவு வழி நிகழும் அன்புக் குறிப்பை உலகுக்கு உணர்த்தற் பொருட்டுப் பெற்றோர்கள் சில வினைகள் கொண்டார்கள். அவ்வினைகளுக்கேற்ற கிரியைகளும் வகுக்கப்பட்டன.

பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப.

என வரூஉந் தொல்காப்பியச் சூத்திரம் உன்னற் பாலது. இக்கிரியை கொண்டதே கற்பியல் என்பது. இக்கற்பியல், களவியல் வழிப்பிறந்தது. களவின்றேல் கற்பில்லை. தொல்காப்பியனார் காலத்தில் களவு மணம் இந்நிலையுற்றிருந்த தென்பது, தொல்காப்பியப்பொருள் அதிகாரத்திற் போந்துள்ள களவியல் கற்பியல்களான் தெரிகிறது. பின்வந்த ஏனையோர் அவ்வழி நின்றே நூல்கள் எழுதினர்.

பின்னை நாளடைவில் தொல்காப்பியர் காலத்திய களவு மணமும் மறைந்து, வேறு மணங்கள் மன்பதை யில் நுழைந்தன. இப்பொழுது மணங்கள் போலியாய் முடிந்திருத்தல் கண்கூடு. போலி மணங்களால் மக்கள் வாழ்வு குலைந்து வருகிறது ; தீயொழுக்கம் பெருகி வரு கிறது.

இந்நாளில் பழைய களவு மணத்தை உயிர்ப்பித் தலும் அரிது. என்னை? அந்நாளில் இருபாலாரும் அகத் திணைப் பயிற்சியில் வல்லவராயிருந்தனர். அவர் காட்சி யளவான் மெய்ப்பாடு கொண்டு, அகப்பொருத்தம் உண ரும் நுண்ணறிவு பெற்றிருந்தனர். இப்பொழுது அப்

பயிற்சி இறந்துபட்டமையயான், புற வழியிலாதல் நிலை மையை உணர்ந்து திருமணம் நடாத்தல் வேண்டும். அது குறித்துச் சில உரை பகர்கிறேன்.

### வயது

முதலாவது வயதைப்பற்றிக் கவனிப்போம்; பின்னே பிறவற்றை நோக்குவோம். 'ஒத்த பண்பு ஒத்த நலன் ஒத்த அன்பு ஒத்த செல்வம் ஒத்த கல்வி' என்றுகூறிய அறிஞர்கள், 'ஒத்த வயது' என்று கூறாமை உன்னற்பாற்று. வயதில் மாறுதல் இருத்தல் வேண்டும். எத்தகை மாறுதல்? ஒத்திருத்தல் கூடாது என்பது விளங்குகிறது. ஆதலால், அதைப்பற்றிய ஆராய்ச்சி வேண்டுவதில்லை. ஒத்தலின்றேல் ஏற்றக் குறைவு இருத்தல் வேண்டும். ஏற்ற வயது எவர்க்கிருத்தல் வேண்டும்? குறைந்த வயது எவர்க்கிருத்தல் வேண்டும்? ஒத்த பண்பு ஒத்த நலன் ஓதிய அறிஞர், வயதில் மட்டும் வேற்றுமை காட்டவேண்டி, 'இவனும் பதினாறாட்டைப் பிராயத்தானாய் இவளும் பன்னீராட்டைப் பிராயத்தாளாய் ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடையராய்' என்று வயது குறித்திருத்தல் ஊன்றி ஊன்றி நோக்கற்பாலது. இதனால் ஆண் வயது, பெண் வயதிலும் சிறிது ஏறியிருத்தல் வேண்டுமென்பது தெரிகிறது. இதனை ஆராய்ச்சி மிகுந்த மேல்நாட்டறிஞரும் ஏற்றுக் கொள்கிறார். பெண் ஆணைவிடச் சிறிது விரைவில் வயதடைதலான், ஆண் வயதினும் பெண் வயது சிறிது குறைந்திருத்தல் பொருத்தம். இல்லையேல் பெண்ணுக்குத் துன்பம் மிகும்; ஆணுக்கும் இன்பம் இல்லை.

இவ்வயது வேற்றுமை கொண்டு, ஆண்டில் பலபட முதிர்ந்த நரை மூதாளன், ஓரிளங் கன்னியைக் கட்டலாமோ எனில் அதுவுங்கூடாது. வயதில் முதிர்ந்த பெண்ணுடன் வயதில் இளைய ஆணும் சேர்தல் கூடாது. இம்மணங்களால் இன்பம் விளைவதில்லை; நற்பிள்ளைப் பேறும் உறுவதில்லை. இன்பம் பொருந்தாததாகவும் ஒருதலையாகவும் இருத்தலான் உடல்நலனுங்கெடுகிறது. ஆதலால், வயதில் சிறு வேற்றுமையுடைய காளையும் கன்னியும் மணம் புரிதலே சால்புடைத்து.

பொருந்தா மணம்

அச்சிறு வேற்றுமை யாது? அதற்குக் கால எல்லையுண்டோ? நமது நாட்டார் 'பதினாறு - பன்னிரண்டு' என்று நான்கு வயது வேற்றுமை கொண்டார். இன்னும் ஓராண்டு கூட்டி ஐந்து வயது வேற்றுமையும் கொள்ளலாம். இரண்டு வயது வேற்றுமையும் ஒருபுடை ஒக்கும். வயது வேற்றுமை, ஐந்துக்குமேற் போகாமலும், இரண்டிற்குக் குறையாமலும் இருப்பது நலம். நான்கு வயது வேற்றுமை மிகப் பொருத்தம் என்க.

பதினாறு - பன்னிரண்டு வயதைப் பற்றிச் சிறிது உன்னுவோம். இவ்வயது முறை இப்போழுது மறுக்கப்படுகிறது. அம்மறுப்புக்கு யானும் உடன்படுகிறேன். ஆனால் பதினாறு பன்னிரண்டு வயது குறித்துச் சென்ற பண்டை மூதறிஞர்மீது, இக்காலத்துச் சிலர் சுமத்தும் பழிக்கு யான் துணை நில்லேன்; நில்லேன். என்னை?

பதினாறு - பன்னிரண்டு வயது குறிப்பிட்ட கால தேச வர்த்தமானத்துக்கும், தற்கால தேசவர்த்தமானத்துக்கும் வேற்றுமை உண்டு. இப்பொழுதுள்ள நிலைமை

யைக் கொண்டு, பண்டை மூதறிஞர் செயலைக் குறை கூறுவது பிழை. அவரைக் குறை கூறாது, காலத்துக்கேற்ற மாறுதல் செய்வது அறிவுடைமை. அந்நாளில் பிராணாயாமம் முதலிய பயிற்சிகள் ஐந்து வயதில் தொடங்கப்படும். பதினாறு வயதில் அப்பயிற்சிகள் முழுமை எய்தும். அவ்வயதில் திருமணத்துக்குரிய இயல் - திறம் - உரம்- முதலிய யாவும் ஆடவன்பால் பொருந்தி வந்தன. பெண்ணும் பன்னீராண்டில் திருமணத்துக்குரிய யாவும் பெறுவள். இந்நாளைய பதினாறு வயதுடைய ஆணும், பன்னிரு வயதுடைய பெண்ணும் புல் தடுப்பினும் கீழே விழுகிறார்கள். இப்பதினாறு-பன்னிரண்டையா, அப்பதினாறு - பன்னிரண்டுடன் ஒப்ப நோக்கி ஆன்றோர்களைப் பழித்துக் கூறுவது!

**வயதும் கால வேற்றுமையும்**

கால தேச வர்த்தமான நிலை நோக்கி, அப்பதினாறையும் பன்னிரண்டையும் முறையே இருபது - பதினாறு - ஆக்கலாம். வேண்டுமேல் இரண்டுவயது உடன் கூட்டலாம். இருவர்க்கும் நான்கு வயது வேற்றுமை இருத்தல் வேண்டும்.

இந்நாளிற் சிலர் மேல்நாட்டு முறைபற்றி முப்பது-முப்பத்தைந்து என்று சொல்கிறார். நமது நாடு மேல் நாடன்று. மேல்நாட்டார் வெண்ணிறத்துடன் பிறக்கிறார். நாம் அந்நிறத்துடன் பிறப்பதில்லை. மேல்நாடு தண்மைநாடு. அதை நோக்க நமதுநாடு வெம்மைநாடு. இன்பக் கிளர்ச்சி வெம்மை நாட்டில் விரைவில் எழுதல் இயல்பு. அவ்வெழுச்சியைத் தகைய இயற்கையோடு மாறுபட்

**மேல்நாடும் நமது நாடும்**

டுப் போர்புரிதல் அறிவுடைமையாகாது. எல்லாவற்றிற்கும் மேல்நாட்டை இலக்கியமாகக் கொள்வது நமது நாட்டின் வளத்தைக் கெடுப்பதாகும். மேல்நாட்டு முறைபற்றி 'முப்பது - முப்பத்தைந்து' பாட்டு பாடுவது அறமன்று. இருபத்திரண்டு வயதுக்குள் மணவினை முடிப்பது அறிவுடைமையாகும். புறனடையாகச் சிலர் இருபத்தைந்து கொள்ளலாம். இருபது இருபத்தைந்துக்குள் ஆடவனுக்கும், பதினாறு இருபதுக்குள் மகளிர்க்கும் மணவினை முடித்தல் நமது நாட்டின் இயற்கைக்கு அரண் செய்வதாகும்.

உற்றவயதில் மக்கட்குப் போகப் புணர்ச்சி இருத்தல் வேண்டும். அஃது உடல் வளத்துக்கும் அறிவு விளக்கத்துக்கும் துணை செய்வதாகும்.

பொறையிலா அறிவு போகப் புணர்விலா இளமை மேவத்
துறையிலா வனச வாவி துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வ மன்றே.

—வளையாபதி

**இன்ப நுகர்ச்சிப் பருவம்**

திருமணத்தின் பின்னர் இருவர்க்கும் சொலற்கரிய இன்பநிகழ்ச்சி தொடங்குகிறது. சில ஆண்டு இன்பக் கலவியால் சில ஒழுங்குமுறைகள் பண்படுகின்றன. பண்பட்ட இன்ப நுகர்ச்சிக்குரிய பருவமும் உண்டு. 'அப்பருவத்தில் திருமணஞ் செய்யாது முன்னரே ஏன் செய்தல் வேண்டும்?' என்று சிலர் கருதலாம். முன்னரே திருமணம் நடந்தாலன்றி அப்பருவத்தில் பண்பட்ட இன்பம் நிகழாதென்க. ஒருவன் குழந்தைப்

பருவந் தொட்டு எழுத்து, சொல் முதலியன பயிலாது, வாளா கிடந்து, பின்னை திடீரெனத் தொல்காப்பியம் பயிலப் புகுந்தால், அவனது தொல்காப்பியப் பயிற்சி என்னாகும்? இன்பநிகழ்ச்சிக்கு எழுத்துப் பயிற்சி போன்றது திருமணம். சில ஆண்டுகடந்து கூடும் இன்பநிகழ்ச்சி தொல்காப்பியப் பயிற்சி போன்றது.

அப்பருவம் எது? நமது நாட்டறிஞர் பெண் பருவத்தை ஏழு வகையாகப் பிரித்துப் போந்தனர். அவர் அததற்குரிய ஆண்டுகளையும் வரைப்படுத்தியுள்ளார். அவை வருமாறு:—

௧. பேதை (ஒரு வயது முதல் ஏழு வயதுவரை); ௨. பெதும்பை (ஏழு - பதினொன்று); ௩. மங்கை (பதினொன்று-பதின்மூன்று); ௪. மடந்தை (பதின்மூன்று - பத்தொன்பது); ௫. அரிவை (பத்தொன்பது - இருபத்தைந்து); ௬. தெரிவை (இருபத்தைந்து - முப்பத்தொன்று); ௭. பேரிளம் பெண் (முப்பத்தொன்று-நாற்பது); பிற இளமை கடந்த முதுமைக்குரியன. இவை நமது நாட்டுத் தட்ப வெப்ப நிலைமைக்கேற்ற வண்ணம் வகுக்கப்பட்டன. மேல் நாட்டில் இன்னுஞ் சில ஆண்டுகள் கடந்து முதுமையுறும். மேலே குறிப்பிட்டவாறு, கால நிலை நோக்கி, இம்முறையில் சில மாறுதல் நிகழ்த்திக் கொள்வது தவறாகாது.

பழைய முறைப்படி நோக்குழி, இப்பருவங்களில் திருமணத்துக்குரிய பருவம் மங்கைப்பருவமாகிறது. இப்பொழுது மடந்தைப் பருவம்வரை திருமணக் காலம் நீண்டிருக்கலாம். திருமணத்தினின்றும் இன்ப நிகழ்ச்சி, செம்மைநிலை பெறுதற்குச் சில ஆண்டுகளாகுமென்பது

மேலே சொல்லப்பட்டது. அவ்வின்ப நிகழ்ச்சிக்குரிய பருவம் அரிவைப் பருவமாகும். காலநிலைக்கு ஏற்றவாறு அப்பருவத்துக்குரிய ஆண்டுநிலை ஒரு சிறிது மாறலாம். செம்மை இன்பத்துக் குரிய பருவம் அஃது என்பதே ஈண்டுக் கருதற்பாற்று. 'பெண் இன்பமே முத்தி' எனக் கொண்ட உலகாயதர், அவ்வின்பத்துக் குரிய பருவம், அரிவைப் பருவம் என்று குறித்திருக்கிறார். 'அரிவையர் இன்பம் முத்தி' என்னும் உரை காண்க. பண்பட்ட செம்மை இன்பத்துக் குரிய அப்பருவத்தில் திருமணஞ்செய்யப் புறப்படுவோர் இன்பத்தைப் பெறுதொழிவோராவர். ஆதலால், அப்பருவத்துக்கு முன்னரே மணவினை முடித்துக்கொள்ளல் அறிவுடைமை.

இதுபோழ்து நமது நாட்டில் பலப்பலவிதமாகத் திருமணங்கள் நடைபெறுகின்றன. திருமணத்திற்கு உரிய வயது முதலியவற்றின்மீது நமது நாட்டார் சிறிதுங் கவலை செலுத்துவதில்லை. பால் மணமறாச் சிறு குழந்தைகள் காத்தில் பழந் தந்து ஏமாற்றி மணவினை முடிக்க முந்தும் தாய் தந்தையர்கள், தாய் தந்தையர்களா? என்று கேட்கிறேன்.

**போலிமணம்**

திருமணத்தின் இயல், பொருள் நுட்பம் முதலியவற்றுள் ஒன்றுந் தெரியாத குழந்தைகட்கு மணவினை முடிக்கும் உரிமை மற்றவர்கட்கேது? பெண்மகள் பயிலவேண்டுவதைப் பயின்று, உணர வேண்டுவதை உணர்ந்து, இயற்கை வழி வளர்ந்துவரும் வேளையில், திருமண நிகழ்ச்சி அவள் உள்ளத்தில் கூடும்போது, அவள், தன் இயல்பு கல்வி முதலியவற்றிற்குத் தக்கவாறு, ஒருவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை அவளுக்

கன்றே இருத்தல் வேண்டும்? உலகம் இன்னதென்று தெரியா முன்னம் குழந்தையை ஒருவனுக்கு மற்றவர் கொடுத்தல் பாவம்.

இளமை மணழும் கிழ மணழும்

இளமை மணத்தால் நாடு ஒருபால் கெட்டு வருகிறது. கிழ மணத்தாலும் நாடு மற்றொருபால் அழிந்து வருகிறது. வெள்ளிக் கம்பி யென நரை மயிர் திரண்டு, கண் குழிவிழுந்து, பல் தேய்ந்து, நரப்புக் கட்டுக்குலேந்து, எலும்பு உலுத்து, முதுகு வளேந்த தொண்டு கிழவன், மேகங் கட்டுக்கட்டாகத் தவழ்ந் தாலென அடர்ந்த மயிரும், பிறைத்திங்களும் வெஃகும் நுதலும், நீலக்கருவிழியும், முத்தன்ன வெண்ணகையும், பவள இதழும், குயில் குரலும், மயில் நடையுமுடைய இளமையும் அழகும் ஒழுகியூரும் கன்னியை மணக்குங்கொடுமை நமது நாட்டில் மலிந்து கிடக்கிறது. அந்தோ! பெண் தெய்வம் கல்லா? மண்ணு? இக் கொடுமை குறித்து எழுதக் கையும் ஓடவில்லே. பெண் கொலே! பெண்கொலே! என்று கூவிக்கூவி மேலே செல்கிறேன்.

மறு மணம்

'நாயகி இறந்தால் என் செய்வது'? என்று சிலர் கேட்கிறார். 'நாயகன் இறந்தால் என்செய்வது?' என்று கேட்பாரில்லே. இரண்டாமுறை மணம் வேண்டுமேல் அவ்வுரிமை இருபாலார்க்கும் இருத்தல் வேண்டும். இரண்டாமுறை மணம் வேண்டுவதில்லே என்றே யான் சொல்வேன். ஒருமுறை ஒருத்தியுடன் காதல்கொண்டு மணஞ்செய்த பின்னே, மற்றொரு பெண்ணே மணஞ்செய்வது எற்

றுக்கு? காதல் ஒருவரிடம் நிகழுமேயன்றி மற்றவரிடம் நிகழாது. காதலால் ஒருமுறை வாய்க்கப்பெற்ற மனைவி, இன்னுயிர் துறக்க நேரினும், அவள் காதல் எங்ஙனம் நீங்கும்? ஆதலால், காதலால் விழுங்கப் பெற்ற ஒருவன் இறப்பினும் ஒருத்தி மறுமணஞ்செய்ய வேண்டுவதில்லை. அவ்வாறே ஒருத்தி இறப்பினும் ஒருவன் மறுமணஞ் செய்ய வேண்டுவதில்லை. மனைவி உயிருடன் இருக்க, மேலும் மேலும் மணஞ்செய்வது பெருங் கொடுமை. அதைப்பற்றி ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை.

புறனடையாக இங்கு இரண்டொரு குறிப்புப் பொறிக்க விரும்புகிறேன். திருமணம் நடந்த உடன் அதாவது ஓராண்டு ஈராண்டுக்குள், மனைவி மரித்தால், பிள்ளைப்பேறு கருதி, இன்னொருத்தியை மகன் மணக்கலாம். வயது முதிர்ந்த ஒருவன், மனைவியை இழந்தபின், மனைவி நசையால் இடர்ப்படுவனேல், அவன் தன் வயதிற்கியைந்த ஒருத்தியை - அதாவது கணவனை இழந்த ஒருத்தியை - அவளும் விரும்பின் - மணந்து கொள்ளலாம். அங்ஙனஞ் செய்யாது, கிழவன் கன்னியைக் கட்டுவது கூடாது. இருவர் எவ்வயதில் எந்நிலையில் மணஞ்செய்து கொள்ளினும், வயது வேற்றுமை நான்கு அல்லது ஐந்துக்குமேல் இருத்தல் கூடாதென்பது கவனிக்கத் தக்கது.

## கொழுநன்

கொழுநன் என்பதற்குக் கொழுக்கொம்பு போன்றவன் என்பது பொருள். தான் சுற்றிக்கொள்ள வேண்டிய கொழுக்கொம்பு இஃது என்று கொடி

தெரிந்து கொள்ளுதல்போலத் தன்னியல்புக்குரிய கொழுநன் இன்னானென ஒருவனைத் தெரிந்துகொள்ள வேண்டுவது பெண்ணின் முயற்சியா யிருத்தல் வேண்டும். பெண் பிறந்து வளர்ந்து கல்வி பயின்று தேர்ச்சி அடைவது எற்றுக்கு? ஒருவனுடன் வாழ்ந்து தாய்மைப்பேறு பெறுதற்கன்றோ? அப்பேற்றிற் குரிய வாழ்க்கைத் துணையைத் தேடுவதில் அவள் கவலை செலுத்தல் வேண்டாமா? வாழ்க்கைக்கு நற்றுணையாகாத ஒருவன், நாயகனாக வாய்ப்பனேல், பெண்ணின் வாழ்வு குலைந்துபடுவது திண்ணம். அப்பெண், செல்வத்திற் சிறந்த சீமாட்டியா யிருந்தாலென்னை? கல்வியிற் சிறந்த கலைவாணியா யிருந்தா லென்னை? அழகிற் சிறந்த அணங்கா யிருந்தா லென்னை? நல்ல கணவன் வாய்த்தால் அவையெல்லாம் அவளுக்குப் பயன்படும். வாய்க்கவில்லையேல், அவைகளால் ஆகும் பயன் ஒன்றுமில்லை. ஒருத்தியின் வாழ்வுச் செல்வம் அவளது நாயகனல்லனோ?

**நாயகன் எவன்?**

நாயகன் விளையாட்டல்லன்; பந்தரல்லன்; இன்றிருந்து நாளை ஒழிவோனல்லன். அவன் என்றும் நீங்காது வாழ்வில் ஒன்றி யிருப்பவன்; வாழ்க்கைத் துணையாயிருப்பவன். இத்தகைய ஒருவன், எல்லா வழியிலும் நாயகியுடன் இயைந்தவனாயிருத்தல் வேண்டுமன்றோ?

அத்தகைய நாயகனைத் தெரிந்தெடுக்க வேண்டிய பொறுப்பு எவருக்கு இருத்தல் வேண்டும்? தாய் தந்தையர் பெண்ணுக்குரிய நன்னாயகனைத் தெரிந்தெடுப்பதில் துணை புரியலாம்; கவலை செலுத்தலாம். ஆர்ந்த பொறுப்பு பெண்ணுடையதாகவே இருத்தல் வேண்டும். இது நமது நாட்டார் பலர்க்கு வியப்பூட்டும். 'பெண்ணு

புருஷனைத் தேடிக்கொள்வது?' என்று அவர்எள்ளுவர்; நகையாடுவர். 'புருஷனுடன் நாளை வாழப்போகிறவர் யாவர்?' என்று எள்ளுவோரையும் நகையாடுவோரையும் நோக்கிக் கேட்கிறேன். கேவலம் நகை, புடவை முதலியன வாங்குவதில் தாய்தந்தையர் மகளது விருப் பங்கேட்கிறார். இவைகட்குப் புதல்வியின் கருத்துத் தெரிந்து கொள்ள விரும்பும் பெற்றோர், அவள் வாழ்வி னூடே நெடிதும் உயிராகக் கலந்து வாழத்தக்க நாயக னைப் பற்றித்தானா பெண்ணின் கருத்துத் தெரிந்து கொள்வது இழிவு? பழைய களவு மணம் வழக்கில் இல்லாதொழியினும், அதற்குரிய அகஅறிவு ஊற்றுத் தூர்ந்துபடினும், அதனுடைய போக்கையாதல் பற்றி ஒழுகல் வேண்டும். திருமணத்துக்கு முன்னரே பெண், நாயகனைப்பற்றிச் செவ்வனே தெரிந்து கொள்ளுமாறு மற்றவர் முயலல்வேண்டும். முன்பின் ஒன்றுந்தெரியாத ஒருவன் பக்கத்தில் பெண்ணைத் திடீரென அமர்த்துவது அறமன்று. 'பெண்ணைப் பெற்ற தாய்தந்தையர்க்குப் பொறுப்பில்லையோ?' எனில், 'பொறுப்பில்லை' என்று யான் கூறேன். அப்பொறுப்புடன் பெண்ணின் விருப்ப மும் கூடல் வேண்டுமென்பது எனது உள்ளக்கிடக்கை.

கட்டுப்பாடு களால் பொருந்தா மணங்கள்

சாதிக் கட்டுப்பாடு, சமயக் கட்டுப்பாடு, பொருள் வேட்கை முதலியவாற்றான் எத்துணையோ பொருந்தா மணங்கள் நடைபெறுகின்றன. கட்டுப் பாடுகளுக்குக் கட்டுப்பட்டு எத்துணை நாள் உயிர்வதை செய்துகொண் டிருப் பது! கட்டுப்பாடுகள் என்னென்ன செய்கின்றன! அந்தோ! விரிக்கிற் பெருகும். பெற்றோரும் பெண்ணும் விரும்பாத இடத்

தில் மணம் நிகழுமாறு 'கட்டுப்பாடு' செய்கிறது. கட்டுப்பாட்டிற்கும் கண்மூடி வழக்கத்துக்கும் என்ன ஆற்றல்! என்ன பெருமை! அஞ்சாநெஞ்சுடன் கட்டுப்பாடுகளையும் கண்மூடி வழக்கங்களையும் உடைத்தெறிதல் வேண்டும்.

சில இடங்களில் மூடப்பெற்றோர்களின் விருப்பத்துக்கிணங்கி, எத்துணைப் பெண்மணிகள் கண்ணீர் உகுத்து மணஞ்செய்துகொள்கிறார்கள். பெண், மனங்கொள்ளா மணம், மணமா? என்று வினவுகிறேன். திருமணம் என்பது நகையா? இசையா? பந்தரா? மாலையா? கூட்டமா? விருந்தா? மனம் ஒன்றாத இடத்திலே மணமேது? மகிழ்வேது? நாயகி நாயகன் மனம் ஒன்றுவதே மன்றல் மன்றலாகும். ஆதலால் பெண், தன் கருத்துக்கியைந்த நாயகனை நண்ணலே பொருத்தம்.

மனமொன்றிய மணம்

களவு மணம் இறந்துபட்ட பின்னர்த் தாய்தந்தையர்கள் சோதிடத்தின்வழிப் பொருத்தங் கண்டு, பிள்ளைகட்குத் திருமணஞ் செய்து வந்தார்கள். அஃது இன்னும் நடைபெற்று வருகிறது. சோதிட வழிக் குறிக்கப்பெறும் பொருத்தத்தை யான் குறைகூறவில்லை. சோதிடம் பிழையெனவும் யான் கூறேன். சோதிடன் பிழைபடலாமன்றோ? கணிதம் முதலியவற்றில் பிழை நிகழலாமன்றோ? சோதிடத்துடன், பெற்றோர் ஆராய்ச்சியுடன், மற்றவர் உதவியுடன், பெண்ணின் விருப்பமும் தேவை என்று யான் சொல்கிறேன். முடிவு பெண்ணின் விருப்பத்தை ஒட்டியிருத்தல் வேண்டும் என்பது எனது கருத்து.

சோதிடம்

கொழுநனைத் தெரிந்து கொள்வதில் பெண்ணுக்குப் பெரும் பொறுப்பு உண்டு. 'மகன்' என்னுஞ் சொல்லுக்குரிய பொருளுடைய ஒருவனைப் பெண் தெரிந்து கொள்வது பொருத்தம். நீண்டநாள் தனக்குத் தெரிந்த ஒருவனையே பெண் கருத்திற் கொள்வது நலம். திடீரென வரும் ஒருவனது செல்வம்-கல்வி-உடல்கட்டு-முதலியவற்றைக் கண்டு பெண்மகள் மயங்கலாகாது. நாளடைவில் அவனது வழக்க ஒழுக்கம் முதலியவற்றைக் கவனித்து, அவள் தன் மனதில் தெளிவுபெறல் வேண்டும். தாய்தந்தையர் வாயிலாகவும், மற்றவர் வாயிலாகவும், ஒல்லும் வகை நேராகவும் அவனது செயலைப் பெண் கவனித்துவரல் வேண்டும். வெறுங் காமக்கிளர்ச்சிக்கு எளிவந்து, திடீரென ஒருவனை ஒருத்தி கொள்வது, பின்னைப் பிரிவிற்கும் பிற இடருக்குங் கால்கொள்வதாகும். பின்னை வாழ்வில், எத்தகைய இடையூறும் நேராத வழியில், அவள் தனக்குகந்த வாழ்க்கைத்துணையைத் தேடிக்கொள்வது அறிவுடைமை. இழிந்த காமச்சூட்டிற்கு அடிமைப்பட்டுப் பெண் சேற்றில் விழுவது அறியாமை.

கொழுநனைத் தெரிந் தெடுத்தல்

நாயகன் என்றால், காமவேட்கை தணிப்பவன் என்றுமட்டுங் கொள்ளலாகாது. ஒருத்தியின் தாய்மை நிலைக்குத் துணை நிற்பவனும், நற்பிள்ளைப் பேற்றிற்குத் தந்தையா யிருப்பவனும் நாயகன் என்னுஞ் சொற்கு உரியவன் என்க. பின்னுலகாக்குந் தந்தையாமாறு ஒருவனைத் தனக்குரிய கணவனாகக் கோடல் வேண்டுவது பெண்ணின் கடமை. தந்தையாகும் நீர்மை அவன்பால் இருக்கிறதா என்பது பெரிதுங் கவனிக்கற்பாற்று.

வயது ஒன்று தவிர, பிறவற்றில் ஏறக்குறைய எல்லாக் கூறுகளிலும் பெண் தன்னை ஒத்த ஒருவனை நாடுவது சிறப்பு. 'ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடைய ராய்***'—'அன்பினானும் குணத்தினானும் கல்வியினானும் உருவினானும் திருவினானும் திரிவிலர் ஒருவர் ஒருவரின்***'—'எக்காலத்தும் எவ்விடத்தும் ஞானத்தானும் ஒழுக்கத்தானும் ஆள் வினையானும் பொருளினானும் பொருவிலன் தானே என்பது. இவளும் அன்னளெனவே, இருவரும் பொருவிறந்தா ரென்பதனைப் பயக்கும்'—எனவரூஉங் களவியலுரை யாசிரியர் மொழிகளைக் காண்க.

**நாயகன் இயல்**

இருபாலார்க்கும் முதலில் ஒத்த கல்வி வேண்டற்பாலது. ஒத்த கல்வி இல்லாவிடத்துப் பிற ஒத்துவரல் அரிது. ஈண்டு ஒத்த கல்வி என்பது ஒத்த ஏட்டுக் கல்வியையும்அன்று; ஒத்த பட்டக் கல்வியையும் அன்று. பின்னை என்னை ? கல்விக்குரிய பயனிலையை என்க.

**ஒத்த கல்வி.**

சில இடங்களில் நாயகி இசைக்கல்வியிற் சிறந்து விளங்குகிறாள். நாயகன் அக்கல்வியில் சூந்யமா யிருக்கிறான்; அதை வெறுப்பவனாயும் இருக்கிறான். நாயகனுக்கு அக்கல்வியில்லா தொழியினும், அதைச் செவிமடுத்துத் திளைக்கும் அறிவாதல் அவனுக்கிருத்தல் வேண்டும். இல்லையேல் பெருங் கவலையே. இசைப் புலமை நிரம்பப் பெற்ற ஒருத்தி, அந்நல்லிசைப் புலமை சிறிதுமில்லா ஒருவனை மணத்தலால் மன ஒற்றுமை நிகழ்தல் அருமை. புறனடையாகச் சில இடங்

களில், சில போழ்து, வேறு துறைகளால் அவ்வொற்றுமை நிகழலாம். இவ்வாறே பிற கல்வித் துறைகளிலும் இருபாலார்க்கும் ஒத்த புலமை இருத்தல் நலம். இந்நாளில் நாயகன்மாருள் பலர் கற்றவரா யிருக்கிறார். நாயகிமாருக்கு எழுத்து வாசனையும் கிடையாது. இவ்விருவர்க்கும் அறிவு ஒற்றுமை எங்ஙனம் நிகழும்? அறிவு மனம் உடல் என்னும் முத்திற ஒற்றுமை இருபாலார்க்கும் இருத்தல் வேண்டும். இவ்வொற்றுமைக்கு அடிப்படை ஒத்த கல்வியாகும்.

கல்வி யறிவுடன் இருபாலார்க்கும் ஒத்த ஒழுக்கம் இருத்தல் வேண்டும். ஒத்த ஒழுக்கம் இல்லாரிடத்து ஒத்த அன்பு நிகழாது. பொய்யனிடம் மெய்யள் சிக்கிக் கொள்வதும், கொலைஞனிடம் அருள் கனிந்த அகமுடையாள் அகப்படுவதும் மாறுபாடாக முடிதல் இயல்பு. ஆதலால், ஒத்த ஒழுக்கம் இருபாலார்க்கும் வேண்டற்பாலது.

ஒத்த ஒழுக்கம்

நாயகன், நாயகியின்பால் எவ்வொழுக்கத்தை எதிர் நோக்குகிறானோ, அவ்வொழுக்கம் அவன்பாலும் இருத்தல் வேண்டும். அவ்வாறே நாயகி, நாயகன்பால் எதிர் நோக்கும் ஒழுக்கமும் அவள்பால் இருத்தல் வேண்டும். செல்வமும் பிறவும் ஒத்திருத்தலும் நல்லதே.

சில இடங்களில் எல்லாம் ஒத்தும் உடல் நலன் ஒவ்வாமல் இருக்கிறது. உடல் நலன் ஒவ்வாமை, பிற ஒத்த நிலைகளையும் சிதைக்கும். அத்திருமணத்தால் மெய்ப்பயன் விளையாது. கட்டும் அழகும் திரண்டு, அமுதெனப் பொலியும் இளங் கன்னியை, உடல் நலன்

பொருத்த ஒரு 'சாதகம்' மணத்தால் மன ஒற்றுமை நிகழுங்கொல்? மன ஒற்றுமை இல்லாவிடத்து அறிவு ஒற்றுமை ஏது? உடல் - மனம் - அறிவு என்னும் மூன்றும் ஒருமைப்பட்ட வாழ்க்கை அன்புக்குரிய இல்வாழ்க்கையாகும். உடல் நலன் எல்லாவற்றிற்கும் ஊற்று என்று கூறல் மிகையாகாது.

உடற் பொருத்தம்.

உடல் நலன் பெரிதுங் கவனிக்கற்பாலது. 'நீறுபூத்த நெருப்புகள்' சில உண்டு. சிலர் விலையுயர்ந்த நல்லாடையால் தம் புரை மறைத்து உலகை மயக்குவர்; அவர் ஏறுபோல் செயற்கை நடை நடந்துங் காட்டுவர்; அவர் கல்வியிலும் செல்வத்திலும் பிறவற்றிலும் பெருக்குடையாராயும் இருப்பர். இவ்வளவிருந்தும் அவருள் கனல் மூண்டு கொண்டிருக்கும். இந் 'நீறுபூத்த நெருப்புக'ளிடை அணுகலாமா? அணுகின் என் செய்யும்? அணுகுவோரையும் அவர் வழித்தோன்றல்களையும் அக்கனல் எரிக்கும். ஆதலால், பெண்மகள் தன்னை மணஞ்செய்ய விரும்பும் ஒருவனது உடல் நலனைப் பெரிதுங் கவனிப்பாளாக.

நோயாளை மணத்தல் எச்சரிக்கை

இந்நாளில் எத்துணையோ நோயாளிகள் செயற்கைப் புறக்கோலத்தால் தங்கள் புண்ணை மறைத்துப் பின்னை பெண்ணுலகை எரிக்கிறார்கள். இவர்கள் தாங்கள் கெட்டதுமன்றிப் பிறரையுங் கெடுக்கிறார்கள். இப் பாவிகட்கு இப்பொழுதுள்ள நரகக்குழிகள் போதுமோ? தொழுநோய் அல்லது குஷ்ட ரோகம், காசம் முதலிய நோயுடையார் திருமணஞ் செய்து கொள்ளாமலிருப்

பது நலம். இந்நோயாளிகள் எத்துணைக் கல்வி, செல்வம் உடையவர்களாயினும் பெண்மக்கள் அவர்களைப் பொருட்படுத்தலாகாது. வெள்ளை-கொறுக்கு-மேகம்-முதலிய நோயுடையாரிடத்தும் பெண்மக்கள் மிக எச்சரிக்கையா யிருத்தல் வேண்டும். இவர்கள் பெரிய 'நீறுபூத்த நெருப்புகள்.' இவர்கள் நோய் இவர்களுடன் ஒழிவதில்லை. இவர்களை மணக்கும் மங்கை நல்லாரிடத்தும் அந்நோய் தொடர்கிறது. அஃது அவர்கள் அளவிலும் நில்லாது, அவர்கள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளையும் பிடித்துக் கொள்கிறது. பின்னை அக்கொடுநோய் வழி வழி படர்ந்து கொடி கொடியாக வளர்கிறது.

இப்பெரு நோய்களால் பீடிக்கப்பட்டோர்க்குப் பிள்ளைபெறல் அரிது. பிறப்பினும், அது குருடாகவும் வேறு பல ஊறு உடையதாகவும் பிறக்கும். இக்கொடுமைக்குக் காரணனுயுள்ள ஒருவனையா ஒருத்திமணப்பது?

நோய்த் தன்மையை அளந்தறியும் ஆற்றல் பெண்மகள் பெற்றிருத்தல் வேண்டும். தீ நோயால் பீடிக்கப்பட்டதும், கழுவாய் தேடிக்கொள்ளுஞ் சிலர், அக்கொள்ளையினின்றும் பிழைப்பதுண்டு. அவரையும் மருத்துவரைக் கொண்டு சோதித்து உண்மை தெளிய வேண்டுவது பெண்ணினத்தார் பெருங்கடன். யாண்டாயினும் நோயின் வெம்மையும், பூச்சும், புழுவும் மறைந்து ஒளித்துக் கொண்டிருக்கும். பெண் சேர்க்கை நேர்ந்ததும் மீண்டும் நோய் வெளிப்படும். ஆதலால், எக்காரணம் பற்றியும் நோயாளியைப் பெண் மணஞ்செய்யா

தொழிவது நலன். எத்துணைக் கள்ளர்கள் நல்லுடையால் புண்ணை மூடிப் புகைப்படம் எடுத்தனுப்பிப் பெண்ணுலகை ஏமாற்றுகிறார்கள்! புகைப்படக் காட்சியாலும் பெண்மகள் மோசம் போதலாகாது.

**குடி முதலியன**

குடியர்களை மணஞ்செய்தலுந் தவறு. குடியால் தொடக்கத்தில் நரப்புக் கிளர்ச்சி உண்டாகும். அதனால் அவர்கள் பெண் விளையாட்டில் மூழ்குவார்கள். நாளடைவில் நரப்புக் கட்டுக் குலைந்து, அவர்கள் திடீரென அகாலத்தில் நபுஞ்சகர்களாவார்கள். புகையிலையை அமிதமாக மெல்லுவோர், காப்பி தேயிலை கொக்கோ முதலியவற்றை அமிதமாக அருந்துவோர் முதலியவர் நிலையும் இவ்வண்ணமே முடியும்.

தீநோய் - குடி முதலியவாற்றால் விளையுங்கேடு, உயிர்களை வழிவழி அடர்ந்து தொடரும் என்று ஆராய்ச்சிக்காரர் கண்ட உண்மை மீது கருத்திருத்திக் கடனாற்றுவதே அறிவுடைமை.

**திருமணத்துக்கு விலக்காகும் மற்றவர்**

காமுகன், பக்கத்தாரை ஐயுறுவோன், முன்னரே ஒருத்தியை மணந்தவன், சோம்பேறி, முதல் வைத்துத் தின்பவன், இன்னவரன்ன பிறரும் திருமணத்துக்கு விலக்கானவரே. பெண்மையை விரும்பாது, பொருட் காதல் கொண்டு, 'இவ்வளவு ஆயிரம்கொடுத்தால் பெண்ணைக் கொள்வேன்' என்று சொல்வோனும் விலக்கானவனே. என்னை? அவனது காதல், பொருளைப் பற்றிக் கிடக்கிறதேயன்றிப் பெண்ணைப் பற்றிக் கிடக்கவில்லை. அன்னான் பின்னும் பொருளின்

பொருட்டு மற்றொரு பெண்ணை நாடினும் நாடுவன். இந் நாளில் இப்பொருள்மணங்கள் பல நடக்கின்றன. இம் மணங்கள் அன்பற்றன என்க. பெண் வாழ்விற்கெனப் பெற்றோர் அன்பால் பொருள் கொடுக்கலாம். அது வேறு. பொருட்கு முதன்மை அளித்து 'இவ்வளவு வேண்டும்' என்று வலியுறுத்துவது பெண்ணின் தண்மையுணர்ந்து மணஞ் செய்வதாகாது. ஆகவே, அத்தகைய ஒருவனும் விலக்கிற்கு உரியவன் என்க.

புறங்கொண்டு அளந்தறிதல்

கூர்த்த மதியுடைய பெண்மணி, ஒருவனது புறத் தோற்றங்கண்டு, அவனது நிலையை அளந்து உணரலாம். கண், நா, விரல்கள் முதலியன ஒருவனது உடல் நிலையைச் செவ்வனே அறிவிக்கும். குடியருக்குக் கண் சிவந்திருக்கும்; நோயாளர்க்கு அது மஞ்சளாயிருக்கும். நாவிலும் விரலிலும் மஞ்சள் படர்ந்திருத்தல் நோய்க்கு அறிகுறியாகும். உடல் நலனுடைய சிலர் நோய் வாய்ப்படும் வேளையில் இத்தோற்றம் பெறுதலுண்டு. இவர்களை மேற்போந்தவர் கூட்டத்தில் சேர்த்தல் கூடாது. என்றும் நோயுடையாரைப் பற்றி மிக எச்சரிக்கையா யிருத்தல் வேண்டும்.

சிற்ப நூல்

இளமையில் ஒருபோது, நமதுநாட்டுச் சிற்பநூல்களில் இரண்டொன்று ஒருவர் வீட்டில் அடியேன் பார்த்தல்நேர்ந்தது. அவைகளில் பாவைகள் செதுக்கற்குரிய இயல்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவ்விடத்தில் பெண் ஆண் உடற்பொருத்தம் பேசியிருத்தல் கண்டேன். இப்பொழுது அஃது ஈண்டு நினைவிற்கு வருகிறது. அது பற்றி இங்கு இரண்டோர் உரை பகர்கிறேன்.

பெண்ணின் கை கால் விரல்களின் அளவு, ஆணின் கை கால் விரல்களுக்கு ஒத்திருந்தால் உடற்பொருத்தம் இருக்கும். சிறிது ஆண் மக்களுக்கு நீண்டும் இருக்கலாம். அதிகம் நீண்டிருத்தல் கூடாது. பெண் விரல்களைவிட ஆண்விரல்கள் அளவில் குறைந்திருக்குமேல் உடல்பொருத்தம் இருத்தல் அரிது. இவ்வாறு அந்நூல்கள் கூறுகின்றன.

நமது நாட்டில் சிலர் ஒருமை மனப்பட்டும், சாதி முதலிய கட்டுப்பாடுகளால் வெளிப்படையாக மணஞ்செய்ய மறுத்துக் காலங்கழிக்கிறார். இது பொருந்திய அன்பு மணமேயாகும். ஆனால் உலகச் சட்டங்களும் விதிகளும் பல இருக்கின்றன வல்லவோ? அவைகட்கு இணங்கி நடந்தாலன்றிப் பிறக்கும் பிள்ளை நல்வாழ்வு பெறமாட்டாது. பிள்ளை நலன்கருதி, அவ்விருவரும் எச்சமூகம் தங்கள் மனமிசைந்த மணத்துக்குச் சட்டப்படி இடந்தருகிறதோ, அச்சமூகத்தில் சேர்ந்து மணவினை முடிப்பது நலம். இங்ஙனம் செய்யாது, சாதிக்கட்டுக்களுக் கடங்கி ஒதுங்கி வாழ்ந்து, பிள்ளைகட்குக் 'கூத்திப் பிள்ளை'' என்னும் பழியை ஏன் சுமத்தல் வேண்டும்? பிள்ளைக்குப் பழியுண்டாகா முறையில் தாயும் தந்தையும் நடந்துகொள்வது அறம்.

சாதி முதலிய கொடுமைக்கு அஞ்சுதலாகாது

ஹிந்து மதத்தில் சாதிச் சமூகக் காட்டுப்பாடுகள் பலபடக் கிடக்கின்றன. அக்கட்டுப்பாடுகள் பல நன்மணங்களைக் கெடுக்கின்றன. மனம் ஒன்றப் பெறும் ஒருத்தியும் ஒருவனும் விருப்பவழி மணமுடித்தலைத் தடுக்கும் கட்டுப்பாடுகள் இயற்கைச் செந்நெறிக்கு

ஹிந்து மதக் கட்டுகள்

அரண் செய்வனவாகா. அவைகளை உடைத் தெறிய வேண்டுவது அறிஞர் கடமை. தற்கால ஹிந்து மதத்தி லுள்ள சில மூடக் கட்டுப்பாடுகளைத் தொலைக்கவே சில அறிஞர்கள் ஆரிய சமாஜம், பிரம சமாஜம் முதலியவற்றைக் கண்டார்கள். இது நிற்க.

ஆண் மக்களிடம் எச்சரிக்கை

பெண் மக்கட்கு ஓர் எச்சரிக்கை பகர்ந்து இப் பகுதியை இவ்வளவில் முடிக்கிறேன். எல்லா வழியி லும் ஒத்த ஒருவனாயினும் திருமணத் துக்கு முன்னர் அவனுடன் கூடுதலாகாது. அன்புப் பெருக்கால் கூடுதல் நிகழ்த்தவல்ல குறிகள் தோன்றி னும், பெண்மகள் அவைகளை அறிவால் அடக்க முயலல் வேண்டும். அடக்கல் அரிதா யிருக்கலாம். அரிதாயி னும் சோதனைக்கு இடந்தரலாகாது. பண்டை நாளில் - களவு மணக் காலத்தில் - வாய்மை, கடவுளாகக் கொள்ளப்பட்டது. பின்னைப் 'பொய்யும் வழுவும்' புகலாயின. ஆதலால், கால நிலையுன்னி நடக்குமாறு பெண் தெய்வங்களைக் கேட்டுக்கொள்கிறேன். கூடிக் கலவி நிகழ்த்திய பின்னைத் திருமணங் கூடா தொழியு மேல் என் செய்வது? ஆண் மகன் மணம் நிகழ்த்து வான் என்பதற்கு என்ன உறுதி? இது குறித்துத் தற்காலப் பெண் மக்கட்கு விரித்துக்கூற வேண்டுவ தில்லை.

ஒருத்தி ஒருவனுடன் வாழ்தலாவது, தனக்குரிய மற்றொரு பாதியைத் தன்னுடன் பொருத்துவதாகும். அவ்வொரு பாதி எத்தகையதா யிருத்தல் வேண்டும்?

அது பலவழியிலும் பொருந்தியதாக இருத்தல் வேண்டும். அப் பொருந்திய பாதியைத் தேடிப் பிடித்தல் எளிதன்று. அரிதின் முயன்றேனும் பெண்மகள் தனக்குரிய ஒருவனைப்பெற முயல வேண்டுவது அவளது கடமை. உடல்-மனம்-அறிவு என்னும் மூன்றானும் பொருத்தம் நல்கும் இரு பாதி, அன்பால் பிணிக்கப்பட்டு, இருமை கெட, ஒருமை இன்பங்கூட்டி வாழ்தற்குக் கால் கொள்வது திருமணம். இத்திருமணம் ஓங்க.

மற்றொரு பாதி

பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக் கிதயம் எய்தினர்.

—இராமாயணம்



# அ. இன்ப வாழ்வு



[வீடு - ஒழுங்குபட்ட இல்லறம் வீடு - சிற்றின்பம் பேரின்பம் - காதல் காமம் - இரண்டுக்குமுள்ள வேற்றுமை - காதல் வாழ்வு - காமக்கூட்டம் - உண்மைக் காதல் - கலவி - காமச் சூடும் ஆண்மக்களும் - சுக்கிலத்தின் அருமை - காமத்தால் விளையும் கேடுகள் - சேர்க்கைக் காலவரை - மன அடக்கம் - ஒருதலை வேட்கை - வலிந்துகூடல் - அன்புக்கூடல் - படுக்கை அறை - வாழ்வும் கலவியும் - மனைவி, தாய், உடன் பிறந்தவள், மகள் - உலகியலும் கடவுள் நிலையும் - கலவி நீக்கும் வயது - பெண்ணில் தெய்வக் காட்சி - இயற்கை வழி இறைவனைக் காண்டல் - ஆண் பெண்ணுதல் - கலவியில் எச்சரிக்கை-பொருந்தா நாயகன் - கணவன் அலியாயின்; நோயாளனாயின் - வருவாய்க்கேற்ற செலவு - அருள் வளர்க்க அறஞ்செய்தல் - ஐயுறல் கெடுவது காட்டுங்குறி.]

இறைகளோ டிசைந்த இன்பம்
இன்பத்தோ டிசைந்த வாழ்வு. —வண்ணொண்டர்

திருமணத்தின் பின்னர் இருவர் கூட்டுறவால் வாழ்வு அரும்புகிறது. இளமையில் இருவரும் 'வாழ்வு வாழ்வு' என்று கற்றும் கேட்டும் வந்ததை இப்பொழுது அவர் நிகழ்ச்சியில் காண்கிறார். இல்வாழ்வை இருவரும்

அந்தண நிலை

ஒழுங்குபட நடாத்தி வரின், அன்னார் தம்பாலுள்ள பொறாமை அவா வெகுளி தன்னலம் முதலிய குற்றங்கள் படிப்படியாக நீங்கப் பெற்று, அவ்விடத்தில் பொறுமை அடக்கம் அன்பு

அருள் தியாகம் முதலிய குணங்களுற்று, அந்தண நிலை எய்துவர். ஆகவே, திருமணங் கூட்டும் வாழ்வை நல்வழியில் நடாத்திப் பேறுபெற வேண்டுவது தலைவி தலைவர் கடமை.

தலைவியும் தலைவனும் வாழ்வை நெறியல்லா நெறியில் நடாத்தினால், திருமண வாழ்வால் விளையத்தக்க பயன் விளையாது. அன்னார் தீ நெறியில் வாழ்வு நடாத்தி, இல்லறத்தைப் பழித்துப்பேசி, அங்கும் இங்கும் அலைவது அறியாமை. ஒழுங்குபட்ட இல்லறம், வீடு பேற்றையளிக்கும் என்பதில் ஐயமில்லை.

## வீடு

'வீடு' 'வீடு' என்பது தனித்து ஓர் எல்லைக்குள் கட்டுப்பட்டுக் கிடக்கும் ஓரிடமன்று. அதைப்பற்றிய பேச்சே வேண்டுவதில்லை. திருவள்ளுவனார் முப்பால் கூறினாரேயன்றி நாற்பால் கூறினாரில்லை. 'வீடு' இன்பத்திலும் அறத்திலும் நிலவுவது. வீட்டைத் தனியாகப் பிரித்து இடர்ப்படுவோர் படுக.

வீடு என்னுந் தமிழ்ச்சொல் விடு என்னும் வினையினடியாகப் பிறந்த தொழிற்பெயர். கட்டு (பந்தம்) விட்ட இடம் வீடு. அதாவது கட்டினின்றும் விடுதலை அடைவது வீடாகும்.

ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழும் இடம் வீடு என்று உலக வழக்கில் சொல்லப்படுகிறது. இங்கு வீடு என்றால் என்னை? அதன் நுட்பம் ஓர்தல்வேண்டும். வீடு என்பது ஓர் எல்லையன்று; கட்டடமன்று; கூரையன்று; அஃதொரு பருப்பொருளன்று. பின்னை என்னை? கட்டு நீங்கி இன்பம் நிகழும் இடம் வீடாகும்.

ஒருத்தியும் ஒருவனும் அன்பால் விழுங்கப்பெற்று நுகரும் இன்பத்தில் கட்டேது? கட்டுள்ள இடத்தில் துன்பமன்றோ விளையும்? கட்டில்லா இடத்திலேயே இன்பம் விளையும். கட்டினின்றும் விடுதலை அடையும்போது விளைவது இன்பம். அவ்வின்பமே வீடுபேறாகும்.

துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் உற்ற இடமெல்லாம் வீடேயாகும். இவ்வுலகில் துன்பமின்றி இன்பம் நிலவும் இடம்பெற்ற 'வீடு' என்னும் வழக்கு, முழுத்துன்ப நீக்கமும் முழு இன்ப ஆக்கமும் உற்றநிலையாய வீடு என்னும் முதன்மையினின்றும் பிறந்ததென்க.

பெண்ணின்பத்தை 'இன்பம்' என்று கூறுவது முழு உலகாயதக் கொள்கை என்று சிலர் கருதல் கூடும். ஈண்டு 'இன்பம்' என்றது வெறுங் கலவியை மட்டுங் குறிப்பதன்று. அது, கலவியுடன் பிறவும் சேர்ந்த ஒன்றென்க. தோன்றி மறையும் இன்பம் பெரிதுங் கலவியால் விளைவதாகும். அழியா இன்பம் பெண் ஆண் மெய்யுறு புணர்ச்சியால் மட்டும் விளைவ தன்று. அது கடந்த ஒரு நிலையில் அவ்வின்பம் கூடுமென்க. அவ்வின்ப ஊற்றைத் திறக்குங் கருவி, ஒருத்தி என்பது பெரிதுங் கவனிக்கத் தக்கது. இக் கருத்துப்பற்றியே உய்யவந்ததேவ நாயனுர் என்னுந் தவஞானச் செல்வரும்,

பெற்றசிற் றின்பமே பேரின்ப மாயங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற; முளையாது மாயை யென் றுந்தீபற

என்று அருளிப்போந்தார்.

அழியா இன்பப் பேற்றை அடையவே ஒருத்தி ஒருவனுடன் கூடி வாழ்கிறாள். அவள் வாழுமிடமும் 'வீடு' 'வீடு' என்று வழங்கப்படுகிறது. பெண் தெய்வம் உறையும் இடம் வீடல்லாது பின்னை என்னாகும்? பெண்ணில்லா வீடு வீடா? அது காடு; சுடுகாடு; நரகம். வீட்டை இன்ப ஒளி வீசுமாறு செய்யும் தெய்வ மணி விளக்கல்லவோ பெண்? அவ்விளக் கில்லாவிடத்தில் துன்ப இருளன்றோ சூழ்ந்து கிடக்கும்? அத்தகைப் பெண்ணின் பெருமையை என்னென்று பேசுவது?

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.—**திருவள்ளுவனர்**

மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பின் என்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை இல்லாதான் இல்லகம்
காண்டற் கரியதோர் காடு—**நாலடியார்.**

* * * பாழொக்கும்
பண்புடையாள் இல்லா மனை—**நான்மணிக்கடிகை.**

இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை
இல்லாளும் இல்லாளே ஆமாயின்—இல்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமேல் அவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்—**ஔவையார்.**

எனவரூஉம் ஆன்றோர் உரைகளை நோக்குக.

ஒருத்தியும் ஒருவனும் வாழும் இடம் வீடாக வேண்டுமேல், அவர் வாழ்வு இன்பமா யிருத்தல் வேண்டும். இருவர் மாட்டும் பொய் பொறாமை முதலி

யன இருத்தலாகாது. இன்ப நுகர்ச்சியைத் தகைவன பொய் பொறாமை முதலியன. அவையில்லாத உள்ளத்தில் இன்பம் ஊர்ந்துகொண்டே யிருக்கும். அவ்வின்பத்துடன் வாழ்வதே இறையுடன் இயைந்து வாழ்வது. இன்பம் வேறன்று; இறை வேறன்று. இக்கருத்துப்பற்றியே 'இறைகளோ டிசைந்த இன்பம்' என்றார் நம் வன்றொண்டப் பெருந்தகையார். அவ் வின்பத்தோ டியைந்த வாழ்வே மக்கட்குரிய வாழ்வாகலான், 'இன்பத்தோ டிசைந்த வாழ்வு' என்று அவர் பின்னும் கூறினார். இத்தகை வாழ்வினர்க்குத் துன்பம் உண்டு கொல்? அவர்க்குத் துன்பம் இல்லை. 'இன்பமே எந் நாளும் துன்பமில்லை' என்றார் அப்பர் சுவாமிகளும்.

இறைவன் நிறைவையும் - அவனோ டியைந்துள்ள இன்பத்தையும்-காண ஒண்ணாதவாறு தகைந்து நிற்பன பொறாமை முதலிய தடைகள் என்று அடிக்கடி இந் நூற்கண் நுவன்று வருகிறேன். அவைகளைப் போக்கி இறையுடன் இயைந்த நிலை கூட்டுவது இல்வாழ்க்கை என்று இந்நூலில் 'இறைவழி'யிலும், 'இயற்கையற'த்திலும் விரித்துக் கூறியுள்ளேன்.

## காதல்

திருமணத்தால் பெறும் வாழ்க்கையை இறையுடன் இயைந்த இன்பவாழ்வாக்குதல் எங்ஙனம்? அதற்குரிய முறைகள் என்னென்ன? விரிவஞ்சி மிகச் சுருக்கமாகச் சில பகர்ந்து மேலே செல்கிறேன்.

முதலாவது இருவர்பாலும் காதல் நிலவுதல் வேண்டும். அக்காதல் பெருநிலை கூட்டும். காதலாவது தலைவி

தலைவர்க்குள் நிகழும் கடவுள் அன்பு. தலைவி தலைவனைக் கடவுளாகக் கோடலும், தலைவன் தலைவியைக் கடவுளாகக் கோடலும் காதலாகும். கடவுளாவது எல்லாவற்றையும் கடந்து நிற்பது. தலைவியும் தலைவனும் தாம் விரும்பும் பொருள்களுள் தங்களோடு ஒப்பாகவாதல் உயர்வாகவாதல் தாங்களன்றிப் பிறிதொன்றைக்காணாத ஒரு பெரும் நிலை காதல் நிலை. இக்காதலால் விழுங்கப் பெற்ற தலைவிக்குத் தலைவனிலும் கடந்த பொருள் ஒன்று தோன்றாது. அவ்வாறே தலைவனுக்கும் தலைவியினும் கடந்த பொருள் ஒன்று புலனாகாது. இந்நிலை பெறுவோர்க்குக் கூடா ஒழுக்கம் இயல்பில் நிகழாது. இக்காதல் நிலை எய்தாதார் காமவாய்ப்பட்டு வாழ்வைக் குலைத்துக்கொள்வர். ஆகவே, தலைவி தலைவர் வாழ்வு காதல்வழி இயங்குவதா யிருத்தல் வேண்டும். காமத்தின்வழி அவ்வாழ்வு இயங்குதலாகாது.

காதல் என்னை? காமம் என்னை? இரண்டுக்கும் வேற்றுமை உண்டோ? உண்டு. காதல் ஓரிடத்தில் படிந்த வேட்கை. அத்தகை வேட்கை பிறிதொன்றில் நிகழாது. காமம் பல இடங்களில் தோன்றும் விருப்பம்.

**காதல்; காமம்**

காதல் மாறாதது; காமம் மாறுவது. காதல் கடவுள்; காமம் பேய். காதல் இன்பம்; காமம் துன்பம். காதல் அன்பென்னுந் தண்மையினின்றும் பிறப்பது; காமம் அவாவென்னும் வெம்மையினின்றும் பிறப்பது. காதல் உடலை வளர்க்கும்; காமம் உடலை எரிக்கும். காதல்,உடல் மனம் அறிவு என்னும் மூன்றினும் ஊடுருவிப் பாய்ந்து நிலைத்து நிற்கும்; காமம், உடலளவில்

எழுந்து வீழ்ந்துபடும். காதல், நாளுக்குநாள் பெருகுந் தன்மையது; காமம், நாளுக்குநாள் அருகுந் தன்மையது.

காதல் தொல்காப்பியனார், இறையனார், திருவள்ளுவனார், நம்மாழ்வார், மாணிக்கவாசகனார் முதலிய அறிஞர்களால் போற்றப்பட்டிருக்கிறது. விரிவு அவர்கள் அருளிய நூல்களிற் காண்க. காதலைப் போற்றும் மொழிகளுள் சில வருமாறு:—

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.—திருக்குறள்

குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை யேத்தலர்போல்
வருநாள் பிறவற்க வாழியரோ மற்றென் கண்மணிபோன்
றொருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த
வருநா ணழிய அழல்சேர் மெழுகொத் தழிகின்றதே.
—திருக்கோவையார்

ஆயுந் தொறுந்தொறும் இன்பந் தருங்கல்வி யாங்கறிவு
மாயுந் தொறுந்தொறும் இன்பந் தரும்வள்ளல் வார்கழல்கள்
தேயுந் தொறுந்தொறும் இன்பந் தருஞ்சந்து தேக்குழனில்
தோயுந் தொறுந்தொறும் நேராத இன்பஞ் சுரந்திடுமே.
—திருத்தணிகைப்புராணம்

பெண்ண லத்தினைப் பெறுதவர் மகவினைப் பெறுதார்
பெண்ண லத்தினைப் பெற்றவரே மகப்பெற்றார்
பெண்ண லத்தினன் மகவுபெற் றிருமையும் பெறுவார்
பெண்ண லத்தினை லன்றியோர் பெறும்பொரு ளுண்டோ.
—பிரமோத்தரகாண்டம்

காமம் அறிஞர்களால் தூற்றப்பட்டிருக்கிறது: அத்தூற்றல்களுள் சில வருமாறு:—

மனைபுகு வார்கண் மனைவியை நாடிச்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்கும்

கனவது போலக் கசிந்தெழு மன்பை
நனவது போலவு நாடவொண் ணாதே. —திருமந்திரம்

பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். —திருக்குறள்

ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகு—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமே குன்றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும். —நாலடியார்

சிறையு முண்டோ செழிப்புனன் மிக்குழீஇ
நிறையு முண்டோ காமங் காழ்கொளின்.
—மணிமேகலை

கொலையஞ்சார் பொய்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார்—பழியொடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார். —நீதிநெறிவிளக்கம்

உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத் தீயதே.—கந்தபுராணம்

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சும்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.
—திருவிளையாடற்புராணம்

சில இடங்களில் காமம் என்னுஞ் சொல் காதல் பொருள்பட ஆன்றோர்களால் ஆளப்பட்டிருக்கிறது. சொல்லைக் கண்டு எவரும் ஏமாறுதல் கூடாது. பொருளையே நோக்கல் வேண்டும். காமம், இன்பம் என்னும் பொருள்பற்றி வரும்போது, அதைக் காதற்கும் ஆளு

தல் உண்டு. திருவள்ளுவனார் காமக்கேட்டைப் 'பெண் வழிச்சேற' லிலும், காதற்றிறத்தைக் 'காமத்துப்பா' லிலும் ஓதி யிருத்தல் காண்க.

'காதலென்ன காமமென்ன எல்லாங் கலவி தானே' என்று சொல்வோருமுளர். அன்னார் காதற் றன்மை யுணராதாரென்க. திருமணம், வெறும் பெண் ஆண் சேர்க்கையை மட்டும் குறிக் கொண்டு நிற்பதன்று. அதனுடன் வேறு பல வாழ்வுத்துறைகளையும் அது குறிக்கொண்டு நிற்கிறது. அவைகளெல்லாம் சேர்ந்த ஒன்று காதல் வாழ்வு.

**காதல் வாழ்வு**

'கலவிக்கென்றே பெண் படைக்கப்பட்டாள்' என்று கருதுவது மடமை. தாய்மை என்னும் பெருவாழ்வு பெற்று,எல்லா உயிர்களிடத்தும் அத்தாயன்பு செலுத்திக், கடவுள் நிலை பெறுதற்குப் பெண் பிறந்தாள். உயிர்நிலை உறுப்புக்கள் பிள்ளைப் பேற்றிற்கென அமைக்கப்பட்டன என்று கோடல் வேண்டுமே யன்றி அவைகளை வெறுங்கலவிக்கெனக் கோடல் படைப்பு நோக்கை உணர்வதாகாது. அப்பிள்ளைப் பேற்றிற்குக் கலவி ஒரு துணைக் கருவி போன்றது. அக் கலவியிலேயே பெண் வாழ்வு அடங்குகிறது என்று, அக்குறியுடன் பெண்ணை நோக்குவதும், அவளொடு வாழ்வதும் நரகக்குழியில் வீழ்வதாகும். அங்ஙனம் தன்னை நினைந்து கலவியிலேயே காலங்கழிக்கும் பெண்ணும் தனது பிறவிப் பேற்றை இழந்து துன்புறுவாள். இவ்வாண்பெண் கூட்டமே காமக் கூட்டமென்க. பெண் பிறவி ஒருபெரும் விழுமிய நோக்குடையது. அந்நோக்கு, காதல் வாழ்வால் நிறைவேறும்.

**காமக் கூட்டம்**

காதலில் கலவி இல்லையோ எனில், உண்டு என்று சொல்ல வேண்டுவதில்லை. காதல் வாழ்வில் கலவி ஒரு சிறுகூறு. காம வாழ்விலோ கலவியே யெல்லாம். அதற்குமேல் அது செல்வதில்லை. காதலிலோ, கலவி-பிள்ளைப்பேறு - கொலை களவு கள் காமம் பொய் முத லிய இழிவுகளினின்றும் விடுதலை யடைதல் - யான் எனது என்னுஞ் செருக்கறல் - தியாகம் - அன்புடைமை - விருந்தோம்பல் - எவ்வுயிரையும் தன்னைப் போல் பார்த்தல் - பயன் கருதாத் தொண்டு முதலிய அறத்துறைகள் பல அடங்கியிருக்கின்றன.

காதற்றலைவன், தலைவி நலன் நாடி வாழ்வன். அங்ஙனே காதற்றலைவியும், தலைவன் நலன்நாடி வாழ்வள். ஒருவர் நோயுறின் மற்றவரும் நோயுற்றார்போல வருந்துவர். இருவரும் ஓருயிர் ஈருடலென வாழ்வர். அவரது அன்பு, வாழ்வுடன் கலந்து நீண்டு வளர்ந்து கொண்டே போகும். காமத் தலைவனோ தன்னலனே நாடுவன். காமத் தலைவியும் தன்னலனே நாடி நிற்பள். உடல் நலனோ பொருள் வளனோ சுருங்கின் இவர்க்குள் பிரிவு நேரும். இத்தகை அன்பில்லாக் காம வாழ்விலா மக்கள் வீழ்வது? சிறுமை! சிறுமை!

**உண்மைக் காதல்**

உண்மைக் காதலி, தன் காதலனுடைய உடல் நலனோ பிறவோ குன்றினும், அவள் அவனை விட்டுப் பிரியாது, ஒன்றிய அன்பால் தொண்டு செய்வாள். தலைவன் உயிர் நீப்பினும் அவனை அவள் மறவாள். அவள் உள்ளத்துள்ளே அவனையன்றி வேறென்ன நிலவும்? உண்மைக் காதலன் இயல்பும் இத்தன்மைத்தே. காதல்

என்பது வெறும் விளையாட்டன்று. காதல், தன்னலன் நாடாது பிறர் நலன் நாடி உழைக்க எத்தகைத் தியாகத்துக்கும் உட்படத் துணிவு ஊட்டும். உண்மைக் காதலுக்கு அறிகுறி இதுவேயாகும். இக்காதல் வழி வளரும் இல்லறம், பின்னை எங்ஙனே கூட்டும் என்று இயம்பவும் வேண்டுமோ? ஆதலால், மக்கள் காதல் என்னும் தண்மைப் பொழிலிடை வாழ்வு நடாத்த முயலவேண்டுமோ அல்லது காமம் என்னும் எரிவாய் வெம்மையிடை வீழ முயலவேண்டுமோ என்பது உன்னற்பாற்று.

## கலவி

காதல் வாழ்வு கூட்டும் தாய்மை முதலிய பேறுகட்குப் பிள்ளைப்பேறு அடிப்படை. அப்பிள்ளைப் பேற்றிற்குக் கலவி வேண்டற்பாலது. அக்கலவியைப் பற்றிச் சில உரை பகரவேண்டுவதும் எனது கடன்.

உலகில் கல்வித் துறைகள் பல உண்டு. அவைகளுள் ஒன்று கலவித் துறையும். இக்கல்வி இயற்கையில் உயிர்கள் மாட்டு நிகழ்வது. இதற்கெனத் தனிக் கல்லூரிப் பரீட்சை முதலியன வேண்டுவதில்லை. ஆதலால், இது குறித்து விரித்துரைத்தலும் அநாவசியம்.

பல துறைகட்கு நூல்கள் இருப்பது போல இத் துறைக்கும் பல நூல்கள் உண்டு. அவைகளுள் சில

கயமை நூல்கள்

கயவர்களால் எழுதப்பட்டன. அவைகளைக் கையாலும் தொடுதல் கூடாது. நன்மக்களால் எழுதப்பெற்ற நூல்கள் வாழ்விற்குத் துணை செய்யும். இளமையில் நேரிய முறையில் வாழ்வைச் செலுத்தியவர்க்கு எந்நூலும் வேண்டுவதில்லை. அன்னாரை இயற்கைத் தெய்வம், வழியே நடாத்திக்கொண்டு போகும்.

கலவி காமச்சூட்டால் நிகழலாகாது. காமச்சூட்டுக்கு எளியராகிக் கலவிபுரியாப் பயிற்சி ஆண்மக்கட்குத் தேவை. அச்சூட்டிற்கு ஆண் மக்கள் எளியராதல் போலப் பெண்மக்கள் எளியராதலில்லை. அத்தன்மை அவர்க்கு இயல்பில் அமைந்திருக்கிறது. உலகில் நிறை என்பது பெரிதும் பெண்மக்கள் உறுதியில் நிலவுகிறது என்று சொல்வது மிகையாகாது. அப்பெட்புடைய மகள், நாயகனையும் காமத்துக்கு இரையாகாதவாறு காத்தல் வேண்டும்.

**காமச்சூடும் ஆண்மக்களும்**

நாயகன் விரும்பும்போதெல்லாம் நாயகி இடந்தரலாகாது; இடந் தந்துவரின் ஆண்மகன், உடலூரங் குன்றி, அகாலத்தில் ஆண் தன்மையிழந்து, பலதிற நோய்வாய்ப் படுவன். இவ்வாறு கெடுக்கவா ஒருத்தி ஒருவனை மணஞ்செய்வது?

ஆடவன் மனைவியை அடிக்கடி கலவிக்கு அழைத்தல் பெருந்தவறு. இப்பயிற்சியால் ஆண்மகனே பெண் தெய்வத்தைப் பேயாக்குகிறான். ஒருவரை ஒருவர் வலியுறுத்தல்வழி நிகழுங் கலவி ஒருதலைக் காமத்தின் பாற்படும். அதனால் உடல் நலன் குன்றும்.

நாயகன் விரும்பும்போதெல்லாம் நாயகி உடல் நலங் கருதி, மறுத்துக்கொண்டேயிருத்தல் அறமாமோ எனில், அஃதும் அறமாகாது. இடையீடில்லா மறுப்பு வெறுப்பின்வழி நிகழ்வது. காதல் வாழ்வில் கட்டுப் பட்ட நாயகி, இடையீடின்றி மறுத்துவாராள். இருவரும் ஓரளவில் கலவியில் கருத்துச் செலுத்தல் வேண்டும்.

கல்வி அறிவு ஒழுக்கம், நல்லாரிணக்கம், கடவுளிடத்தன்பு, உயிர்களிடத்தன்பு, தன்னிடத்தன்பு, பொருந்திய உணவு, பொருந்திய உடை முதலியன காம எரி எழாதவாறு மக்களைக் காத்து வரும். பிள்ளைப் பேற்றிற்குக் கலவி என்னும் எண்ணம், இருவர் பாலும் பசுமரத்தாணிபோல் பதிந்து கிடப்பின், அவ்வெண்ணம் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தும்.

சுக்கிலம்

ஆண் மகனுக்கு உடல் கட்டு, நலன், வளன், உரன், அழகு முதலியவற்றை நல்குவது அவனது சுக்கிலம். அதை நினைத்தபோதெல்லாம் போக்கிக்கொண்டிருந்தால், உடல் கட்டு முதலியன குலையும். பின்னை நரப்புத்தளர்ச்சி உண்டாகும். நரப்புத்தளர்ச்சி உற்றவனால் காம உணர்ச்சியைச் சிறிதும் அடக்கல் முடியாது. போதிய வலிமையின்மையால் அவ்வெண்ணத்தை அவனால் மாற்றுதலும் முடியாது. பெண் நினைவுறினும், அவள் ஒலி பேச்சு முதலிய கேட்பினும், உடை முதலியவற்றைக் காணினும் காமச்சுடர் அவனை எரிக்கும். எரியால் தாக்குறும் அவனால் ஆர்ந்த கலவியும் புரிதல் இயலாது. இயலாமையால் மன எரிவும் அவனுக்குத் தணிவதில்லை. அவ்வளவோடு சனி அத்தீயனை விடுமோ ?

காமத்தால் விளையுங் கேடுகள்

அச்சனி அவனது மூளையைக் கலக்கி நினைவழிக்கும்; கண்ணொளி போக்கும்; காதடைக்கும்; பொறி புலன்களை ஒடுக்கிப் பசியைக் குலைக்கும். இவைகளால் மகனுக்கு மலம் சிக்கும்; மண்டை இடிக்கும்; இருமல் வருத்தும்; பித்தேறும். அவன் கண்டதை உளறுவன். உலகம் அவனுக்கு வெறுப்பாகத் தோன்றும்;

அவனுக்கு அழகிடை அன்பு தோன்றாது; இசையில் இன்பந் தோன்றாது. அப்பாவி நிலையை இன்னுமா வருணித்தல் வேண்டும்? அவன் வாழ்விழந்த பாவியாகிறான். இத்துணைக் கேட்டிற்குங் காரணம் என்னை? இளமையில் இடையீடின்றித் தாதுவைச் செலவழித்ததேயாகும். காமச்சூட்டுக்கு இரையாகும் பெண்மகள் நிலையும் இவ்வாறே முடியும்.

தாதுவை வீணில் நினைந்தபோதெல்லாம் செலவழிப்பதால் விளையுந் தொல்லைகள் பலப்பல. எண்பது துளி இரத்தம் ஒரு துளி தாதுவாகிறது. இவ்வரிய தாதுவைச் சேமிக்கும் அளவினதாக உடல்வளன் அமையும். அடியோடு தாதுவைக் கட்டுதலும் கூடாது. அது பற்றி முன்னர்க் கூறியிருக்கிறேன். அதனாலும் சில கேடுகள் உண்டு. ஓரளவினதாக-அதுவும் பிள்ளைப்பேறு கருதி - அன்பிடை - அதைச் செலவு செய்தல் அறிவுடைமை.

திங்களுக்கு இரண்டு முறை மனைவியோடு சேருமாறு நமது நாட்டு நூல்கள் கூறுகின்றன. அதாவது, மாதப் பூப்புக்கு முன்னொரு நாளும், சூதகம் நின்ற பின்னொரு நாளும் என்று சிலர் கூறுப. மாதப் பூப்பில் சூதக வடிவு நான்கு ஐந்து நாளில் நிற்கும். சிலருக்கு ஆறு ஏழு எட்டு நாட்களுமாகும். நல்லுடல்பெறாதார்க்கு இன்னுஞ் சின்னாள் நீடித்தலுமுண்டு. உடல்நிலைக்கேற்ற வண்ணம் சூதக ஒழுக்கு நிற்பது வழக்கம். அது நின்ற ஒருவாரம் வரை கருத்தரிக்கும் நாட்களாகும். சில உடலுக்கு இன்னுஞ் சின்னாள் கூடுதலுமுண்டு. பொது

**சேர்க்கைக் காலவரை**

வாக ஒருவாரம் குறிப்பிடலாம். அந்நாட்களில் இரண்டொருநாள் கலவி புரிந்து, மற்ற நாட்களில் அதை விலக்கி வாழ்வது அறிவுடைமை. இவ்வழக்குப் பற்றியே 'மாதத்துக் கிரண்டுமுறை மங்கையரைப் புணர்தல்' என்னும் அநுபவமொழியும் எழுந்ததென்க.

திங்களுக்கு ஒருமுறை சாலும் என்று பல அறிஞர் கூறியுள்ளார். மூன்று திங்களுக்கு ஒருமுறை கூடல் மிகப் பொருத்தம் என்பது சில கூர்த்த மதியினர் கொள்கை. மூன்றுமாத காலந் தாதுகட்டி, அன்பு வழியில் புரியுங் கலவியில் செம்மை இன்பம் நிகழும். அவ்வின்பம், கலவிக்குப் பின்னும் பன்னெடு நாள் மனஅமிழ்தாய் நிலவிக்கொண்டிருக்கும். பிள்ளை பிறப்பின் மிக அழகியதாயிருக்கும்.

வாரத்துக்கு இருமுறை மும்முறையும்,(சூதகமடங்கிய நாள்தொட்டு மறு சூதகம் உறும் வரை) நாடோறும், மனைவியுடன் கலவி புரிவது அறியாமை. அக்கலவியில் இன்பம் இராது. ஆனால் பின்னைத் துன்பம் மிகும். கலவியில் அளவாயிருக்கப் பயிலும் பயிற்சியே சிறந்ததென்க.

இடையிடையே காம எரி எழாதவாறு எங்ஙனங் காப்பது? மனைவி முகம் பாராமலிருப்பதா? மனைவியுடன் வாழல் வேண்டும்; ஆடல் வேண்டும்; பாடல்வேண்டும். ஆனால் சேர்தல் கூடாது. அவ்வாறு மனதைப் பயிற்சி செய்தல் வேண்டும். எப்படி - அதிலும் வெம்மை நாட்டில் எப்படி - என்று சிலர் கருதலாம். அது குறித்து எவரும் மலைவுறல் வேண்டுவதில்லை. அம்முறையை மேல்

**காமங் காத்தல்**

நாட்டறிஞர் செவ்விதிற் பயின்றிருக்கிறார். நமது நாட்டவரும் அவ்வழியைப் பயில்வது நலம். அப்பயிற்சியில் நமது நாடு ஒருபோது தலைசிறந்து விளங்கியதுண்டு.

நாயகன் நாயகியுடன் பலதிற ஆடல்கள் ஆடலாம்; கைகால் படவும் ஆடலாம்; உடலுறவும் விளையாடலாம்; எல்லாஞ் செய்யலாம். ஆனால் மனதில் மட்டும் காமக்கிளர்ச்சிக்கு இடந்தர லாகாது. கிளர்ச்சி தோன்றினும் அதற்கு எளியராகாது, ஒருமுறை இருமுறை மன உறுதியால் அதை அடக்கியாளல் வேண்டும். பின்னர், நாளடைவில் அக்கிளர்ச்சி எவரையும் தன்வயப்படுத்த இயலாதொழியும்.

**மன அடக்கம்**

மனைவியைப் பாராமலும், தொடாமலும், பேசாமலும், அவளுடன் ஆடாமலும், பாடாமலுமிருப்பின், மனதில் காமக்கனல் மூண்டுகொண்டே யிருக்கும். ஆதலால், மனைவியுடன் ஆடியும் பாடியும் வரின், மன மயல் ஒழியும். மன அடக்கப் பயிற்சியால் விரும்பும்போது கலவிபுரியும் பயிற்சியும் கைகூடும். இப்பயிற்சியுடையாரே நல்வாழ்வு பெற்றவர்.

நாயகி விரும்பாத காலத்து நாயகன் வலிந்து கூடுவது கொடும் பாவம்; கொலைப்பாவம். அஃது இன்பக் கூடலுமாகாது. அக்கூடல் வலிந்து புகும் ஆடவனுக்கே கேடு விளைக்கும். அது முஷ்டிமைதுனத்தை ஒத்தது என்பது 'இயற்கையற'த்தில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அஃறிணையுலகில் வலியுறுத்தல் கிடையாது. அவ்வுலகை நோக்கியேனும் உயர்திணை யுலகம் நல்லறிவு பெறுவதாக.

**வலிந்து கூடல்**

பறவைகளிற் சில தமது சிறகை விரித்துக் காட்டுவதால், காதல் குறிப்புணர்த்தும். சில பூச்சிகள் கூத்தாட்டால் தங்கள் நிலையுணர்த்தும். சில இனங்கள் சுழற்சியால் தங்கள் வேட்கையைப் புலப்படுத்தும். இவ்வழியில் இவைகள் தங்கள் பெண்ணினங்களை அன்பு வயப்படுத்துகின்றன. வலிந்து புணர்தல் அவ்வுயிர்களிடத்தில் காண்டல் அரிது. வலிந்து கூடலும் இயற்கை நிகழ்ச்சியாகாது. வலிந்து கூடும் மனிதர்கள் மாக்களினும் இழிந்தவர்களென்க.

**அன்புக்கூடல்**

நாயகன் தனது காதல் அன்பெழுச்சியை இனிய முறையால் புலப்படுத்தப் புலப்படுத்த அது காணும் நாயகியும் அக்காதல் அன்பால் விழுங்கப்படுவாள். அவள், செயல்குன்றியிருப்பதுபோல் கிடப்பாள். அதனைக் கண்ணால்-உதட்டால்-பிற மெய்ப்பாட்டால்-நன்கு உணர்தல்கூடும். அந்நிலையில் கலவி புரிதல் அறம். அதுவே மனங் கலந்த கலவியாகும். நாயகியுள்ளத்தில் விருப்பமில்லா வேளையில் கூடுதற்கும், விருப்பமுள்ள வேளையில் கூடுதற்கும் உள்ள வேற்றுமை, காதல்நுட்பம் உணர்ந்த அறிஞர்க்குப் புலனாகும்.

தலைவி விரும்பா வேளையில் கூடும் தலைவனுக்குப் பலதிறக் கேடுகள் உண்டு. இவனது சுக்கிலம் அவள் பால் செல்கிறது. அதற்கீடாக அவளிடமிருந்து இவன் என்ன பெறுகிறான்? ஒன்றுமில்லை. தலைவியும் விரும்பிய புணர்ச்சியாயின், அவள் உள்ளத்தூறும் அன்பால் கருக்குழிக்கணுள்ள சினைகள் கிளர்ந்தெழும். அவ்வெழுச்சியி னின்றும் பிறக்கும் ஒருவித சத்து இவ

னுள் நுழையும். அதனுல் இவன் உடல்நலன் கெடுவ தில்லை. நாயகி விரும்பாத வேளையில் புணர்வது மரத் துடன் புணர்வதை ஒக்கும். அது முஷ்டிமைது னத்தை ஒத்தது என்று அறிஞர் கருதுகிருர். இது பற்றி முன்னும் கூறினேன்; பின்னும் கூறுவேன். ஆதலால், எக்காரணம் பற்றியும் பெண் விரும்பாத காலத்து, ஆண் வலிந்து கூடுவது மூர்க்கச் செயலாகும். அதனுல் இன்பவாழ்வு கூடவே கூடாது.

படுக்கை அறை

இருவர்க்கும் படுக்கை அறை வேருக இருத்தல் வேண்டும். அறை வேறே இல்லாதொழியினும் படுக் கையாதல் வேறே தனித் தனியாக இருப்பது நலம். ஒரே படுக்கையில் இருவர் உறங்குவது வெறுக்கத்தக்கது. அதில் சுகா தாரக் குறைவும் உண்டு.

வாழ்வும் கலவியும்

வாழ்வில் கலவி ஒரு கூறுகலான், அதை வாணுள் முழுவதும் வைத்துக் கொள்ளுதல் தவறு. சில இடங் களில் மனைவியின் பூப்பு நிற்கு மட்டும் கலவியை விடுக்கத் தலைவர்கட்கு மனம் எழுவதில்லை. சிலர் மனைவியின் பூப்பு நின்ற பின்னர் வேறு ஒருத்தியை நச்சுகிருர். மருந்து தின்றேனும் கிளர்ச்சி உண்டு பண்ணிக் கூடலில் சிலர் மூழ்குகிருர். இவர் அறியாமை இருந்தவாறென்னே! என்னே! இவர் வாழ்வின் நோக்கம் உணராத கயமை விலங்கினத்தா ரெண்க.

மனைவியின் பூப்பு நிற்பதற்கு முன்னரே, அவ ளோடு மெய்யுறு புணர்ச்சியை நிறுத்தி, அவள் உள்ளத் தில் வீற்றிருக்கும் அன்புக் கடவுளைக் காண முயலல்

வேண்டும். மனைவி வெறுங் கலவிக்கு மட்டும் உரிய ஒருத்தியல்லள். அவள் தாயுமாவள்; உடன் பிறந்தவளுமாவள்; மகளுமாவள்; கடவுளுமாவள்; எல்லாம் அவள். அவளிடத்து எல்லா இயல்புகளும் உள்ளன. இவையெல்லாம் சேர்ந்த ஒருத்தியே மனையில் வாழத்தக்கவளென்க.

**மனைவி, தாய், உடன் பிறந்தவள், மகள்**

வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளுநற் றாரமு மாமே.

தாரமு மாதுவள் தத்துவ மாய்நிற்பள்
காரண காரிய மாகுங் கலப்பினள்
பூரண விந்து பொதிந்த புராதனி
பாரள வாந்திசை பத்துடை யாளே.—திருமூலர்

மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்
வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்
என்னுடை யாரமு தெங்க ளப்பன்
எம்பெரு மானிம வான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்றகப்பன்
தமையனெம் மையன் றாள்கள் பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கை நல்லீர்
பொற்றிருச் சுண்ண மிடித்து நாமே.
—திருவாசகம்

அன்னை தயையும் அடியாள் பணியுமலர்ப்
பொன்னின் அழகும் புவிப்பொறையும்—துன்னுமெழில்
வேசி துயிலும் விறல்மந் திரிமதியும்
பேசில் இவையுடையாள் பெண்.—நீதிவெண்பா

தாயோ டறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—தூயவுடன்
வந்தோன் மரிக்கில் வலிபோம் மனையெனிலோ
அந்தோ இவையெலாம் போம்.—**நீதிசாரம்**

எனவரூஉம் ஆன்றோர் மொழிகளின் உள்ளக்கிடக்கையை ஓர்க.

**உலகியலும் கடவுள் நிலையும்**

கடவுள் இயல் குறித்துச் சான்றோர் மொழிகளை உலகியலுக்கு எடுத்தாளல் பொருத்தமன்று என்று சிலர் கருதல்கூடும். உலகியல் நன்கு நடைபெறல் வேண்டி, அதற்கோர் இலக்கியமாகக் கடவுள் நிலை விளங்குகிறது. கடவுளியலை உலகவியலினின்றும் பிரித்துப் பேசுதல்கூடாது. கடவுளின்றி உலகமில்லை; உலகமின்றிக் கடவுளில்லை. உலகியலுக்குக் கடவுள்நிலை ஒரு வழிகாட்டி போன்றது. இறைவனுக்கு இறைவி ஒருபோது தாயாகவும், ஒருபோது உடன் பிறந்தவளாகவும், ஒருபோது மகளாகவும், ஒருபோது மனைவியாகவும் இருக்கிறாள் என்பது எதைக் காட்டுகிறது? அஃது, உலகியலிலும் ஒருவன் ஒருத்தியை ஒருபோது தாயாகவும், ஒருபோது உடன் பிறந்தவளாகவும், ஒருபோது மகளாகவும், ஒருபோது மனைவியாகவும் கொள்ளல்வேண்டும் என்பதை அறிவுறுத்துகிறது. இல்லற வாழ்வு இறையியலை நன்கு விளக்குவதென்க. இது நிற்க.

உலக வளர்ச்சி நாடிக் கடவுள் ஆணைவழி நின்று பிள்ளைப் பேற்றின் பொருட்டுச் சின்னாள் கலவித்

தொழிலில் ஈடுபட்டுப் பின்னை அதை நிறுத்துவது வாழ்வின் நோக்கை நிறைவேற்றுவதாகும்.

கலவி நீக்கும் வயது

'முப்பதாம் ஆண்டளவில் மூன்று அற்று' என்றார் ஔவையார். காலநிலை நோக்கி இப்பொழுது வயதை முப்பத்தைந்தாகப் பெருக்கிக் கொள்ளலாம். நமது நாட்டில் முப்பத்தைந்து வயதுக்குமேல் பெண்ணொடு கலத்தல் பொருந்தாததாகும். குளிர் நாட்டில் வதிவோர் இன்னுஞ் சில ஆண்டு கலவியில் போக்கலாம். நாட்டின் இயல்பிற்கேற்ப நமது நாட்டுப் பெண் மகளும் முப்பதுக்குள் கலவியினின்றும் விலக முயலல்வேண்டும். பூப்புள்ளபோதே அப்பயிற்சியில் தலைப்படல் வாழ்வை அறிவால் ஒழுங்கு படுத்துவதாகும். பூப்பு நிற்கும் வரை மெய்யுறு புணர்ச்சி நிகழ்த்தல் உடலுக்கு நலன் தேடுவதாகாது.

இருபது வயது முதல் முப்பத்தைந்து வயதுவரை அதாவது பதினைந்தாண்டு மெய்யுறு புணர்ச்சி நிகழ்த்தியது சாலாதா? அதற்குள் பிள்ளைப் பேறும் உண்டாகிறது. பிள்ளைப் பேற்றிற்குப் பின்னை, மேலும் மேலும் மெய்யுறு புணர்ச்சி எற்றுக்கு? பிள்ளைப் பேற்றின் பின்னை, நாயகன் தந்தையாகிறான்; நாயகி தாயாகிறாள். இப்பேற்றி னின்றும் இறைமைப்பேறு பெற இருவரும் முயலல் வேண்டும். இவ்வுண்மையை,

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.

எனவரூஉம் தொல்காப்பியச் சூத்திரத்தால் உணர்க.

இது துறவொழுக்கம் கூறும் சூத்திரமன்றோ என்று சிலர் நினைக்கலாம். தீயகுணங்களினின்றும் விடுதலை அடைவதே துறவொழுக்கமென்பதும், பெண்ணை வெறுத்தல் துறவொழுக்கம் அன்றென்பதும் இந்நூற்கண் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. பிற்காலத்தில் நாட்டைக்கெடுக்க நுழைந்த போலித் துறவறத்தை இச்சூத்திரம் அறிவுறுத்துகிறதில்லை. பிள்ளைப் பேற்றின் பின்னை, மெய்யுறு புணர்ச்சி நீத்து, உள்நோக்கால் இறைமை நிலை உணர்ந்து, உயிர்களிடத் தன்பு செலுத்தும் ஒரு நிலை 'சிறந்தது பயிற்றல்' என்பது.

இவ்வாறு மெய்யுறலை நீக்கும் நாயகன், நாயகியைத் தன்னுடன் பிறந்த ஒருத்தியாகவும் தாயாகவும்,

மெய்யுறு புணர்ச்சி நீக்கியபின்னை

நாயகி நாயகனைத் தன்னுடன் பிறந்த ஒருவனாகவும் தந்தையாகவும் கொள்ளப் பயிலல் வேண்டும். இருவரும் மெய்யுறு புணர்ச்சி நீத்த பின்னர், உடல் நிலை கடந்த உள்நிலையில் கருத்தைச் செலுத்தல் வேண்டும்; உடம்பினுள்ளே கோயில் கொண்டுள்ள அன்புக் கடவுளோடு உறவு கொள்ளப் பயிலல் வேண்டும். இப்பயிற்சிக்குக் கால்கொள்வதே இளமை மெய்யுறுபுணர்ச்சியின் நோக்கமாகும்.

மெய்யுறு புணர்ச்சி, மெய்யிலுள்ள அன்புக் கடவுள் காட்சிக்கு ஒரு படி போன்றது. அப்படியும் பிள்

மெய்யுறு புணர்ச்சி ஒருபடி

ளைப் பேறெனும் உலக வளர்ச்சிக்குத் துணை நிற்பதாகிறது. அந்தப்படியைக் கடந்தால் தெய்வக் காட்சி காணலாம். பெண்ணின் பெருமை விளங்குமிடம் அங்கே அங்கே என்று இறுமாப்புடன் கூறுகிறேன்.

பொறாமை முதலிய பேய்கட்கு அங்கே இடமில்லை. அங்கே எல்லாம் அன்பு அன்பாகப் பொலியும். இளமை தொட்டு வாழ்வை அவ்வப் போதைக்குரிய நெறிய வழியில்நடாத்துவோர் இந்நிலை எய்துவர்.

பெண்ணில் தெய்வக் காட்சி

இந்நிலை எய்துவோர்க்குப் பெண்மக்கள் தெய்வங்களாகவே தோன்றுவார்கள். பெண்ணைத் தெய்வமாகக் காணும் ஒருவன் பிறவிக்கடல் கடந்தவனாவன். வாழ்வில் இத்துணை புரியப்போந்த பெண்ணின் பெருமையை என்னென்று கூறுவேன்? இக்கருத்துப் பற்றியே பெண் தெய்வத்தை வாழ்க்கைத் துணை என்று நந்தமிழ்ப் பெரியார் கூறிப்போந்தார். உடல் வாழ்க்கைக்கும் உயிர் வாழ்க்கைக்கும் துணைபுரிவோள் பெண்தெய்வம் என்பது உன்னற்பாலது.

பெண்ணின் பாலுள்ள தெய்வ இன்பத்தை நுகர்ந்த பெரியோர்கள் பலருளர். அவருள் தம்பிரான் தோழர் என்னும் நம்பியாரூரரை ஈண்டுச் சிறப்பாகக் குறிக்கிறேன். அப்பெரியார் தமக்கும் தம் மனைவிமார்க்கும் ஏற்பட்டுள்ள பற்று, கடவுள்பற்று என்று அருளுகிறார்.

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன்.

என்று வன்றொண்டர் ஆண்டவனை வழுத்தியிருத்தல் காண்க. இத்திருப்பாட்டை எத்துணைமுறை எடுத்துக்காட்டினும் என் மனம் சலிப்புறுவதில்லை. அதை நோக்க நோக்க, நினைக்க நினைக்க என்னுள்ளம் இன்பக்

கடலாடுகிறது. அன்பர்களே! அத்திருவாக்கில் படிந்து, அதன் பொருளாகப் பயிலுங்கள்.

தெய்வம் கண்ணுக்குப் புலனாகாதது. அஃது இயற்கையை வடிவாகக்கொண்டு காட்சி அளிக்கிறது.

**இயற்கைவழி இறைவனைக் காண்டல்**

இயற்கை வழியே இறைவனைக் காண்டல் வேண்டும். பெண்ணொடு மெய்யுறல்நீத்து, உள்ளுறல்கொண்டு, இன்ப அன்பை நிகழ்ச்சியளவில் பருகிவரும்போது, அவ்வன்பெனும் ஆண்டவன் வடிவாகிய இயற்கை நுட்பங்களெல்லாம் இனிது விளங்கும். பெண் ஓர் இயற்கை வனம்போலக் காணப்படுவள். நீல வானமும், வெண் திங்களும், மாங்குயிலும், நீல மஞ்ஞையும், அழகிய மலரும், விரைக்கொடியும், அருவி கொழிக்கும் மணிகளும், பிறவும் ஒருங்கு திரண்டு பெண்ணெனப் பொலிதல் காணலாம். அவ்வழகொழுகும் இயற்கைப் பெண், அவளது உள்ளேயுள்ள இன்ப அன்புக் கடவுளின் பருமையாவள். ஆகவே, பெண் இயற்கை வடிவான தெய்வமாகிறாள். இத்தெய்வத் தன்மையை ஆண்மகன் நினைந்து நினைந்து அப்பெண் தன்மை பெறுவானாக.

**ஆண் பெண்ணாதல்**

பெண்தன்மையாவது அருட்டன்மை; அதாவது எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர் நிலை. இதுவே வாழ்வின் நோக்கம்.

இப்பெரு நிலைக்கு அடிப்படையாயுள்ள கலவியில் ஓராளவாகக் கருத்திருத்தல் வேண்டுவது தலைவி தலைவர் கடன்.

கலவியும் ஒரு கல்வி என்பது மேலே சொல்லப்பட்டது. அக்கலவியை வழிதுறையின்றிப் புரிவதாலும்

உடலுக்குப் பலதிறக் கேடுகள் விளைதலுண்டு. வலிய ஆண் மக்களிடம் மெலிய பெண்மக்கள் மிக எச்சரிக்கையா யிருத்தல் வேண்டும். வழிதுறையில்லா விளையாட்டால் பெண்மக்களின் கருவுறுப்புக்களுக்கு ஊறு நிகழும்.

கலவியில் எச்சரிக்கை

கால வேளை நாழி கவனியாது கலவி புரிவதால், மலச்சிக்கல் முதலிய பிணிகள் தோன்றுவதுண்டு. உணவுகொண்ட சில நேரத்துக்கெல்லாம் ஒருவரோடொருவர் கூடிக் களிப்பதால் அஜீரணம் முதலிய நோய்கள் தோன்றிப் பின்னைப் பெரு நோய்களை ஈனும். புணர்ச்சிக்காலத்தில் வயிறு நிரம்ப ஜீரணமாகாத வெவ்வுணவு நின்று கொண்டிருத்தலும் கூடாது. இன்னும் விரிக்கிற் பெருகும்.

## பொருந்தா நாயகன்

தனக்கினிய கொழுநனைத் தெரிந்தெடுப்பதில் பெண் மகள் பெருங் கவலை செலுத்தல்வேண்டுமென்று 'திருமணம்' என்னுந் தலைப்பின் கீழ் வலியுறுத்தியிருக்கிறேன். பெண் மகளின் கவலை ஈனத்தாலோ வேறு எக்காரணத்தாலோ பொருந்தா நாயகன் வாய்க்கப் பெறுவனேல் என் செய்வது? பெண் மகள் அவனுடன் வாழ்வதா அல்லது வாழாது அவனை விடுத்துப் பிரிவதா? பிரிதல் வேண்டுமென்று சொல்ல இந்தியாவில் பிறந்த எனக்கு நாவெழவில்லை. எங்ஙனமாவது முயன்று அப்பொருந்தாத் தன்மையைப் போக்கவே பெண்மகள் முயலல் வேண்டும்.

பெண்மை என்பது தாய்மை என்றும், தாய்மை என்பது தொண்டு என்றும் மேலே சொல்லப்பட்டன. அத்தொண்டைப் பொருந்தா நாயகனை ஒழுங்குபடுத்து

வதில் பெண்கள் நிகழ்த்தலா மன்றே? தொண்டில் விருப்புடைய பெண்ணிற்கு அஃதொரு வாய்ப்புமாகும்; தனக்கு வாய்த்த நாயகனைப் பண்படுத்தப்புகுந் தொண்டினும் வேறு தொண்டு எற்றுக்கு? அத்தொண்டு வழியில் வாழ்வு செலுத்தும் பெண்மணி வாழ்க. அவள் பால் கடவுள் அருள் என்றும் நிலவுக.

பொருந்தாத் தன்மை எத்தகையது என்று முதல் முதல் காணல்வேண்டும். அத்தன்மைகள் பலதிறத்தன. அவைகளுள் இரண்டொன்றை எடுத்துக்கொள்வோம்.

**கணவன் அலியாயின்?**

கொண்ட கணவன் அலியா யிருந்தால் என் செய்வது? பிறப்பில் பேடனாக உள்ள ஒருவன், ஒருத்தியை மணஞ் செய்து கொள்ளான். ஒரு வேளை அறியாதுகொள்வனேல், மனைவி என் செய்தல் வேண்டும்? மனைவி உயரிய மனங் கொண்டு மெய்யுறு புணர்ச்சியைக் காய்ந்து கணவனுடன் வாழ்வதே சிறப்பு. வேறுவித ஆடல் பாடல் கல்வி ஆராய்ச்சி, கடவுள் வழிபாடு முதலியவற்றில் உட்கலந்து வாழ்வு நடாத்திவரலாம். அப்பெண் மணி, பிள்ளைப் பேறு விரும்பினால், வேறு ஒருவனை மணஞ் செய்து கொள்வது தவறாகாது.

நோயாளன் கணவனாக வாய்த்தால், மனைவி அவனது நோய் போக்கி, அவனுடன் கூடிவாழ உழைத்தல் வேண்டும். கணவன் கொடிய (பெண்) நோயாளனாயின்,

**நோயாளனாயின்?**

எக்காரணம்பற்றியும், அந்நோய் தீருமட்டும் அவனுடன் நாயகி சேர்தல் கூடவே கூடாது. ஓராண்டோ ஈராண்டோ முயன்று அவனது நோய்போக்கிய பின்னரே, அவள் அவனுடன் சேர்க்கை வைத்துக்கொள்ளல் வேண்டும்; தீராநோயாயின், சேர்க்கையைத் தொலைத்தே தீரல்

வேண்டும். அவனுடன் சேர்ந்து அவனது நோயைப் பெண் தன்னுடலில் இறக்கி வருந்துவதோடு, நோய்க் குழவிகளையும் குருட்டுக் குழவிகளையும் ஏன் உலகில் பெருக்கல் வேண்டும்? அப்பிள்ளைகளின் வழி நோயை ஏன் உலகில் வளர்த்தல் வேண்டும்? உயிர்களிடத்திரக்க முடைய பெண், ஒருபோதும் உலகிற்குக் கேடு நினை தலுங் கூடாது; செய்தலுங் கூடாது.

வேறு சில செயற்கை முறைகளால் சிறிது ஆண் தன்மை இழந்த நாயகனுயின், மனைவி அவனுடன் கலத் தலை முற்றும் நிறுத்தி, எவ்வழியிலாதல் முயன்று அக் குறை போக்கத் தொண்டு செய்வாளாக. குறை நீங்கிய பின்னர் அவனுடன் அவள் கலந்து வாழ்வு நடாத்தலாம்.

இத்தகைக் குறைகளின்றிக் குணத்திலோ செல் வத்திலோ கல்வியிலோ இவைபோன்ற பிறவற்றிலோ குறைபாடுடைய ஒருவன், ஒருத்திக்கு நாயகனுகக் கிடைப்பனேல், அவனது அவ்வக் குறையைக் களையப் பல்லாற்ருனும் முயலவேண்டுவது நாயகியின் கடமை. குறையுடைய நாயகனை நிறையுடையனுக்க நாயகி தொண்டு செய்வது சிறந்த கடவுள் தொண்டு என்று சொல்வேன். பெண்ணுக்குரிய பொறுமை அடக்கம் அன்பு முதலிய குணநலன்களெல்லாம் பயன்பட வேண் டிய இடம் இதுவே.

நாயகன்பால் எக்குறையிருப்பினும், நாயகி பிரிவு உளங் கொள்ளாது, அக்குறைபோக்க மகிழ்ச்சியுடன் தொண்டின் வழி வாழ்வைக் கழிப்பது பிறவிப்பயனைப் பெறுவதாகும்.

பொருந்தா நாயகியைப் பெறும் நாயகனும், மேற் போந்த முறைப்படி, அவளை ஒழுங்குபடுத்திக் கூடி வாழவே முயலல்வேண்டும்.

### வேறு சில

ஒருத்தியும் ஒருவனும் கூடி இல்லறம் நடாத்தும் வேளையில் கவனிக்கப்படவேண்டிய வாழ்வுத் துறைகள் பலவுள. அவைகளுள் இன்றியமையாத சிலவற்றைக் கூறுகிறேன்.

செல்வநிலை கவனிக்கப் பெறல்வேண்டும். இல்லறத்துக்குப் பொருள் இன்றியமையாது வேண்டற்பாலது. அப்பொருள் வருவாய்க்கேற்ற செலவு செய்யப்படின், வாழ்வில் இன்பத்தேன் பிலிற்றும். வருவாய்க்கு மேல் செலவுசெய்யப்படின், வாழ்வைத் துன்பக் கைப்பு அரிக்கும். வருவாய்க்கேற்ற செலவுசெய்யும் பொறுப்பு யாருடையது? அப்பொறுப்பு வீட்டுக்கரசியாய், வாழ்க்கைத் துணை நலனாய் வந்த பெண்ணினுடையது என்று சொல்லவும் வேண்டுமோ?

**வருவாய்க் கேற்ற செலவு**

மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

என்றார் திருவள்ளுவனார்.

வாழ்விற்கு வேண்டும் அளவு செலவு செய்வது அறிவுடைமை; அன்புடைமை. செல்வக் கள்ளாட்டயர்தல் அல்லது வறுமைக் குழியில் வீழ்தல் இரண்டும் நல்வாழ்வாகா. இரண்டிற்கும் இடைப்பட்ட எளிய இயற்கை வாழ்வு சாலும். இது குறித்துப் 'பெண்ணின் வளர்ப்பி'லும் கூறியிருக்கிறேன். எளிய இயற்கை வாழ்விற்குச் செலவாகிப், பொருள் எஞ்சி நிற்குமேல், அதை ஏழைகள்-குருடர்-முடவர்-

**அருள்வளர்க்க அறஞ் செய்தல்**

தீராப்பிணியாளர் முதலியவர்க்குச் சோறு கூறை கல்வி முதலிய வழங்குவதில் செலவழித்தல் வேண்டும். பொருள்வழி அருள் வளர்க்க முயல்வது அறிவுடைமை.

இல்வாழ்வின் நோக்கம் என்னை? அன்பு அருள் ஒப்புரவு முதலியவற்றை ஓம்புதலன்றோ?

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

என்று திருவள்ளுவனார் இல்வாழ்வோர் தொண்டு குறித்தல் காண்க.

தம்முயிர்போலப் பிறவுயிரைக் கருதற்குரிய செந்துறைகளிலெல்லாம் இறங்கித் தொண்டாற்ற வேண்டுவது இல்லறத்தார் கடன். அக்கடனாற்ற வருவாய்க்குத் தக்க செலவு செய்யும் இயல்பு, சிறப்பாக இல்லக்கிழத்தியார் மாட்டிருத்தல் வேண்டும். அத்தகைய இல்லிலேயே இன்ப வாழ்விற்கு இடனுண்டு.

நாயகிக்கும் நாயகனுக்கும் இடையீடின்றி நாளுக்கு நாள் அன்பு வளரும் வழியில் அவ்விருவரும் வாழ்வு செலுத்துவது நலம். அதற்கு வாழ்வில் எல்லாவற்றிலும் ஓரளவிருத்தல் வேண்டும். எதிலும் வரம்புமீறி மீச்செயல் நிகழ்த்தல் கூடாது. ஆடல் பாடல்கூட ஓரளவினவாக இருத்தலே சால்பு. தொடக்கத்தில் வரம்புமீறி ஆடிப்பாடிப் பின்னை விடுத்தால், அன்பிற்கு இடையூறு நிகழும். சில இடங்களில் நாயகிமார் 'அன்பு அன்பு' என்று தத்தம் நாயகன்மார்க்கு எல்லாப் பணிகளுஞ் செய்து, அவரைச் சோம்பேறிக ளாக்குகிறார்; சில இடங்

மீச்செயல் கூடாது

களில் பிணங்களாக்குகிறார். இச்செயல் நாளடைவில் இடர் விளைக்கும். பின்னை வெறுப்புளத்தோடு அப்பணிகள் ஆற்றல்நேரும். அட்டில் அமைத்தல் போன்ற வினைகளை நாயகி ஆற்றலாம். நாயகனுடைய துணி தோய்த்தல், கால் கழுவல், அவனுக்குப் பொட்டிடல் போன்ற வினைகளை நாயகி ஆற்றுவது அநாவசியம்.

இருபாலாரும் வினையாற்றுவது நலன். ஒருவரோடொருவர் கலந்து பல வேலைகள் செய்யலாம். இளமையில் உடலுரம் உள்ளபோது, எல்லாப் பணிகளையும் நாயகி தானே செய்து,நாயகனைப் பிணமாக்கினால்,பின்னை வலி குன்றும்போது,அவன் எதிர்பார்க்கும் வேலைசெய்ய இயலாது, அவள் விழிப்பாளாயின், அவன் மனம் மாறுபடும். ஆதலால், நாயகன்மாரைச் சோம்பேறிகளாக்காத வாழ்வை நாயகிமார் நடாத்துவாராக.

இளமையில் நாயகனுடன் அடிக்கடி வீண் பேச்சு, வெற்றுரை,பயனில் சொல்முதலியன வழங்கல் ஆகாது. அவை தொடக்கத்தில் விருப்பூட்டுவது போலத் தோன்றும் ; பின்னை நாளடைவில் வெறுப் பூட்டும்.

ஒருத்தியும் ஒருவனும் நடாத்தும் இல்வாழ்வு இன்ப வாழ்வாக வேண்டுமேல், இருவர் மாட்டும் நம்பிக்கையும் உண்மையும் இருத்தல் வேண்டும். ஒருவரை ஒருவர் ஐயுறல் கூடவே கூடாது. ஐயத்தால் பீடிக்கப்படும் வாழ்வு இன்பவாழ்வாதல் அரிது. அதை நரக வாழ்வு என்று கூறலாம். ஒன்றிய அன்புத் தெய்வம் நிலவவேண்டிய இடத்தில் ஐயப்பேய் புகுந்தால், அது வாழ்வை அலைப்பது திண்ணம். ஐயத்தால்

**ஐயுறல் கெடுவது காட்டுங் குறி**

விளைந்த கேடுகள் பல; நிகழ்ந்த கொலைகள் பல. எக்காரணத்தாலோ ஐயந்தோன்றினால், உடனே கரவின்றி அதை வெளிப்படுத்தித் தெளிவு பெறல் வேண்டும். ஐயத்தை உளங்கொண்டு, துப்பறிவார் போல ஒருவரை ஒருவர் சோதிக்கப் புகுவது, நரகத்தை வலிந்து விலைக்கு வாங்குவதாகும். 'மருண்டவன் கண்ணுக்கு இரண்டனவெல்லாம் பேயா'கத் தோன்றுதல் போல, ஒவ்வொரு செயலும் மருட்சியை வளர்த்து வளர்த்துப் பேரிடர் விளைக்கும். ஆதலால், நாயகியும் நாயகனும் தமது உளத்தில் ஐயப்பேய் நுழையாதவாறு தம்மைக் காத்து வருவாராக.

நாயகி தன் வாழ்வு நாயகன் பொருட்டென்றும், நாயகன் தன் வாழ்வு நாயகியின் பொருட்டென்றும் தன்னலமில்லா வாழ்வு நடாத்திவரின், அவர் வாழும் இல்லம் இறையுறையும் வீடாகும்; வாழ்வும் இன்ப இறைவனோடியைந்த வாழ்வாகும்.

பண்டுநிகழ் பான்மையினால் பசுபதிதன் னருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட நூலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால்.

—சேக்கிழார்



# கூ. பிள்ளைப்பேறு



[பெண்ணின் பெருமை பிள்ளைப்பேற்றில்-பிள்ளைப் பேற்றின் மாண்பு-குழந்தை இன்பம்-பிள்ளைப்பேற்றி லுள்ள நலன்கள் - நற்பிள்ளைப் பேற்றிற்குப் பொறுப் பாளர் - உடல் நலனும் ஒழுக்கமும் - கருவுற்ற காலத் தில் கொள்ளத்தக்க முறைகள் - பிள்ளைப் பேற்றில் அச்சம் - தற்கால நாகரிகம்-கருத்தடை-கருச்சிதைவு-தாய் தந்தையர் அன்பே குழந்தை-சோமாஸ்கந்த மூர்த்தம்.]

**கல்லா மழலைக் கனியுறல் கலந்து கொஞ்சும்**
**சொல்லா லுருக்கி அழுதோடித் தொடர்ந்து பற்றி**
**மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்**
**இல்லா தவர்க்கு மனைவாழ்வின் இனிமை என்னும்.**

—வில்லிபுத்தூரார்

பெண்ணின்பெருமை மணத்துடன் நிற்கவில்லை; இன்பவாழ்வுடன் முடியவில்லை. மற்றுமொன்றில் அவள் பெருமை பிறங்குகிறது. அஃது எது? அது பிள்ளைப் பேறு.

பிள்ளைப் பேறில்லையேல் தாய்மை எது? பெண் பிறவியின் நோக்கம் தாய்மைப்பேறு பெறுவதன்றோ? வாழ்விற்குரிய தொண்டு தியாகம் அன்பு முதலியன நிலவுதற்கு நிலைக்களன் தாய்மை யன்றிப் பிறிதென்னை? அத்தாய்மை அளிப்பது பிள்ளைப்பேறு.

பிள்ளைப்பேறு, தாய் தந்தையரை இயற்கை நெறி யில் நிறுத்துகிறது; உலகவளர்ச்சிக்குத் துணை புரி

கிறது; இறைவன் அருள் நோக்கத்தை நிறைவேற்று கிறது. அஃது எல்லாவற்றிற்கும் மேலாகப் பெற்றோரது அன்புக் கண்ணைத் திறக்கிறது; உயிர்களிடத்தன்பு கொண்டு தொண்டு செய்தற்கு வழி காட்டியா யிருக்கிறது; வேறு பல வாழ்வுத் துறைகட்கும் உதவி செய்கிறது.

பிள்ளைப் பேற்றின் மாண்பு

வாழ்வை இன்பமயமாக நடத்தல் வேண்டுமென்பது இயற்கையின் நோக்கம். தொடக்கத்தில் கல்வி வாயிலாக இன்பம் பிறக்கிறது; பின்னைத் திருமண வாயிலாக இன்பம் விளைகிறது; முடிவில் அவ்வின்பம் பிள்ளைப் பேறு வாயிலாக நிலை பெறுகிறது. கல்வியிலும் ஒருவனுக்குச் சோர்வு தோன்றலாம்; மனைவியின் மாட்டும் அச்சோர்வு தோன்றலாம்; பிள்ளையின் பால் எச்சோர்வும் தோன்றாது. வாழ்வில் சோர்வு தோன்றி, இன்பம் மறையும் வேளையில், பிள்ளை பிறந்து, சோர்வு போக்கி, இன்பத்தை நிலை பெறுத்துகிறது. ஆதலால், இன்ப வாழ்விற்குப் பிள்ளைப் பேறு இன்றியமையாதது.

வாழ்வில் எல்லாமிருந்தும் பிள்ளைப்பேறொன்றில்லையேல் மற்றவைகளால் என்ன பயன்? எல்லாவற்றிலுமுள்ள இன்பத்தை நுகர்விப்பது பிள்ளைப்பேறு. ஒருத்தியும் ஒருவனும் சேர்ந்த வாழ்வால் வீடு உண்டாகிறது. அவ்வீட்டில் இன்பமுண்டாக்குவது பிள்ளைப் பேறு. வாழ்வில் இருள்போக்கும் மணி விளக்கு, பெண் என்று மேலே சொன்னேன். அம்மணி விளக்கு உமிழுஞ் செங்கதிர், பிள்ளை என்று ஈண்டுச் சொல்கிறேன். 'மணியிடைக் கதிர்வரு திறம்போல்' என்றார் கச்சியப்பர்.

பிள்ளைப்பேற்றின் பெருமையை, 'மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் - நன்கலம் நன்மக்கட் பேறு' என்று திருவள்ளுவனார் விளக்கி யிருத்தல் காண்க.

பிள்ளையில்லா வீட்டில் வாழும் தலைவியையும் தலைவனையும் பிணியாளர் என்று கூறல் மிகையாகாது. புறத்தே பலதிறத் தொழில் செய்து வீடு சேரும் நாயகனும், அகத்தே பலதிறத் தொண்டாற்றி அமரும் நாயகியும் எத்துணைநாள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருப்பர்? எத்துணை நாள் அதையும் இதையும் பேசிக் கொண்டிருப்பர்? எத்துணை நாள் ஆடலிலும் பாடலிலும் கழிப்பர்? திருமண வாழ்வின் தொடக்கத்தில் நோக்கும் பேச்சும் ஆடலும் பாடலும் இன்பூட்டிக் கொண்டிருக்கும். நாளடைவில் அவ்வூட்டம் குன்றும். நாயகன் வேறு களியாடல்களுக்குச் சென்று உணவிற்கு வீட்டுக்குவருவன். நாயகி தன்னந் தனியளாய் எண்ணாதன எண்ணித் தூங்கிவிழுவாள். குழந்தையொன்றிருக்குமேல் இன்பூட்டம் பெருகும். புறத்தேவேலை செய்துவருந் தலைவனின் சோர்வையும், அகத்தே வேலை செய்து அயரும் தலைவியின் சோர்வையும் போக்கும் அமிழ்தம் குழந்தையென்க. குழந்தையின் ஆடல் பாடல் கேட்கும் தாய்தந்தையரே தவமுடையார். அவர் வாழ்க.

குழந்தையின் ஆடலைக்காணக் கண்கள் படைக்கப் பட்டன. குழைந்தையின் மழலைப்பாடலைக் கேட்கச் செவிகள் படைக்கப்பட்டன. குழந்தையின் கையூறல் பெற மெய் படைக்கப் பட்டது. 'அவ்வாடல் இனியது; இப் பாடல் இனியது' என்று எவர் கூறுவர்? குழந்தையின்

**குழந்தை இன்பம்**

ஆடல் பாடலைக் காணாத - கேளாத-பாவிகள் அங்ஙனங் கூறுவார்கள். குழவி இன்பத்தைச் செவ்வனே நுகர்ந்த இயற்கை அறவோராய திருவள்ளுவனார், குழவி ஓசையாகிய ழகர ஓசை பொதுள, 'யாழினிது குழலினிது என்பர் தம்மக்கள் - மழலைச்சொல் கேளாதவர்' என்று மொழிந்து, மேலும் 'மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர் - சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு' என்று அருளியிருத்தல் காண்க.

**பிள்ளையால் வீட்டுப் பிணக்கு நீங்குதல்**

நாயகனையும் நாயகியையும் பிணித்துள்ள அன்புக் கயிற்றுக்கு ஊறு நேராவண்ணம் காத்து வருவது பிள்ளைப்பேறு என்று கூறலாம். சிலவேளைகளில் இருவர்க்கும் பிணக்கு நிகழலாம். அப்பிணக்கு, பிள்ளையில்லா வீட்டில் வளரும். பிள்ளையுள்ள வீட்டிலோ அப்பிணக்கு ஞாயிறு முற்பட்ட பனிப்படலம் போல ஒழியும். அப்பெருமையுடையது பிள்ளைப்பேறு. குழந்தை விளையாடும் வீட்டில் துன்பம் ஏது? அஃதில்லா வீட்டிலோ? அந்தோ!

**பிள்ளைப் பேற்றல் தியாகம்**

பிள்ளைப் பேற்றால் வேறு பல நலன்களும் உண்டு. பிள்ளையை வளர்க்கத் தாய் தந்தையர்கள் எத்துணை அன்புத் தொண்டு செய்கிறார்கள்? பிள்ளைப்பேறில்லையேல் அத்தொண்டு அவர் மாட்டு அரும்புதலே அரிது. பயன் கருதிப் பெற்றோர் அத்தொண்டு ஆற்றுகிறாரோ? இல்லை. கைம்மாறு கருதாக்கடவுட் டொண்டு பெற்றோர்களிடம் வளர்ந்துவரப் பிள்ளைப்பேறு துணை செய்கிறது. ஒரு பிள்ளையைவளர்க்கப் பெற்

றோர்கள் எவ்வளவு தியாகத்துக் குட்படுகிறார்கள்! மக்கள் பிறவியை உய்விக்கவல்லது தியாகம் என்பதை விளக்க வேண்டுவதில்லை. அத்தியாகம் பிள்ளைப்பேற்றில் இருக்கிறது.

பிள்ளைநலன் கருதித் தாய் தந்தையர்கள் தங்கள் நலன்களையெல்லாஞ் சுருக்கிக் கொள்கிறார்கள். பிள்ளைப் பேற்றால் தன்னலம் கெடுதலும் காண்க. அன்புத் தொண்டு தியாகம் தன்னலமின்மை முதலியன, பொறாமை வெகுளி அவா முதலிய மனமாசுகளைத் துடைப்பன வல்லவோ? அம்மாசகன்ற இடத்தில் இன்பப்பேறு உண்டாகும். எனவே, பிள்ளைப்பேறு இன்ப வாழ்விற்கு இன்றியமையாதது என்பது கருதற்பாலது. பிள்ளைப் பேற்றின் பெற்றி யுணர்ந்தே நம் முன்னோர்கள் அது குறித்துப் பலபடப் பேசி யிருக்கிறார்கள். அவர்கள் பிள்ளைப் பேற்றைப் பற்றிக் கூறாத இடமேயில்லை.

வாழ்விற்குரிய இன்பப் பேற்றிற்கு உறுகருவியாயுள்ளது பிள்ளைப் பேறெனில், அதன்மீது தாய் தந்தையர்கள் எத்தகைக் கவலைசெலுத்தல் வேண்டும் என்பதைச் சொல்லவுந் தேவையோ? பிள்ளை எனில் எல்லாம் பிள்ளைகளாமோ? 'பழி பிறங்காப் பண்புடை மக்கள்' என்றார் திருவள்ளுவனார். பண்புடை மக்களைப்பெறும் பொறுப்பு யாருடையது? 'தாய் தந்தையருடையது' என்று எவருஞ் சொல்வர். நற்பிள்ளைப் பேறு தாய் தந்தையருடைய வாழ்வை யொட்டி நிற்கிறது.

**நற் பிள்ளைப் பேற்றுக்குப் பொறுப்பாளர்**

உலகில் நற்பிள்ளைப் பேற்றையே தாய் தந்தையர் விரும்புதல் இயல்பு. வெறும் விருப்பத்தால் பயன்

விளையாது. விரும்பியவாறு நடத்தல் வேண்டும். நற்

**உடல் நலன்**

பிள்ளைப் பேற்றிற்கு முதலாவது வேண்டற்பாலது உடல் நலன். உடல் நலனில்லாத் தாய் தந்தையர்க்கு நற்பிள்ளை பிறத்தல் அரிது. உடல் காப்பு, 'பெண் வளர்ப்பி'லுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

உடல் நலனுக்கு ஒழுக்கம் உயிர் போன்றது. அவ்வொழுக்கங் காக்க வேண்டுவது தாய் தந்தையரின்

**ஒழுக்கம்**

தலையாய கடன். ஒருத்தி ஒருவன் பாலும், ஒருவன் ஒருத்திபாலும் வாழ்தல் வேண்டும். கூடா ஒழுக்கத்தாலும், நிறை தவறுதலாலும் மக்களுக்கு விளையுங் கேடுகள் பல. தீயொழுக்க முடையார்க்குப் பிள்ளை பிறத்தல் அரிது; பிறப்பினும் கருவினில் அழிவதாய், கான்முளையில் அழிவதாய்த் தொலையும். அஃது ஒரு வேளை பிழைத்து வளரினும் நோய் வாய்ப்பட்டுச் சூம்பி ஒழியும்; நோயில்லா தொழியினும் குருடு செவிடாகப் பிறக்கும்; இக்குறையில்லா தொழியினும் களியாய் மடியாய் உலகச் சுமையாய்க்கிடக்கும். பிள்ளை, நாட்டின் உடைமை யாகலான், அதைப் பண்புடையதாகப் பெறுதற்குரிய வாழ்வை நடாத்தத் தாய்தந்தையர்கள் முயலல் வேண்டும்.

கூடாவொழுக்கமில்லாத சிலர்க்கும் நற்பிள்ளை பிறவாதிருத்தற்குக் காரணமென்னை என்று சிலர் கருதலாம். அன்னார் வேறு வழியில் தமது உடல் நலனுக்குக் கேடு சூழ்கிறார். காப்பி தேயிலை கொக்கோ முதலிய பானங்களை அளவிற்கு மீறிப் பருகுதல்,

கள் சாராயம் முதலியவற்றை அருந்தல், உடற்பயிற்சி யின்றிச் சோம்பிக் கிடத்தல், அளவு கடந்த உழைப்பு, அகால உணவு, போதிய நேரம் உறங்காமை, புழுங்கிய இடத்தில் வதிதல், மீதூண் கொள்ளல், வரம்பு மீறிப் பட்டினி கிடத்தல் முதலியன உடல் நலனைக்கெடுக்கும். இவைகளால் உறுப்புக்களில் வெம்மையெழும். அவ் வெம்மை, உறுப்புக்களின் சுறுசுறப்பு,ஊக்கம், எழுச்சி முதலியவற்றைப் போலியாகத் தொடக்கத்தில் கிளப் பிப் பின்னை அவைகளைக் குலைக்கும். பெண்மக்களின் கருவுறுப்புக்களோ மிக மெல்லியன. அவைகளில் வெம்மை ஏறினுல் கருத்தங்கலும் அரிதாகும்; தங்கி னும் அழியும். நற்பிள்ளைப்பேறு விரும்பும் தாய் தந் தையர், உணவு உறக்கம் முதலியவற்றில் அளவாயிருப் பாராக.

உணவு முதலியவற்றை ஒழுங்கு படுத்தி வாழ் வோர்க்கும் சில இடங்களில் நற்பிள்ளை பிறப்பதில்லை. இஃது எற்றுக்கு? ஒருத்தியும் ஒருவனும் இளமை தொட்டு உயிர் நிலைகளின்மீது கவலை செலுத்தி வந் ததைவிடத் திருமணத்தின் பின்னர் ஆயிரமடங்கு அதிகமாக அவைகளின்மீது கவலை செலுத்தல் வேண் டும். திருமணத்தின் பின்னர்க் காம எரிக்கு எளிய ராய் ஒருவரோடொருவர் புணர்தல் கூடாது. பிள்ளைப் பேறு நினைவின்றி, வெறும் புணர்ச்சிமீது மட்டும் கருத் தைப் பதித்து அடிக்கடி கூடலாகாது. போகத்தில் அளவாயிருத்தல் வேண்டும். இல்லையேல், சுக்கிலம் கீத்து, நற்பிள்ளைப் பேற்றிற்கு இடர்செய்யும்.

திருமணஞ்செய்த சின்னுளுக்குள் பிள்ளை பெறு தலுமாகாது. கருவுறுப்புக்கள் உரம் பெறுதற்கு முன்

னர்க் கருவுயிர்த்தல் அவ்வுறுப்புக்களை மெலிவிப்ப தாகும். மெலிவுற்ற கருவினின்றும் பிறக்கும் பிள்ளை எங்ஙனமிருக்கும்? மூஞ்சுறு போலிருக்கும். வலிய திண்ணிய அழகிய அறிவுடைய பிள்ளைப்பேறே உல கிற்குப் பயனளிப்பதாகும். அதற்குரிய பெண் பருவம் அரிவைப் பருவமென்க. விரிவு, இந்நூல் 'திருமணத்' தில் பார்க்க.

நற்பிள்ளைப் பேற்றிற்குத் தாய் தந்தையரது ஒழுங்குபட்ட வாழ்வே காரணம். நல்வாழ்வில் தலைப் படாத தாய் தந்தையர்கள், சேர்க்கை தவிர்த்து வாழலே அறம். ஊனமும் ஈனமும் நிரம்பிய பிள்ளை களால் நாட்டுக்கு என்ன பயன்? உலகிற்கு என்ன பயன்?

கருவுற்ற காலத்தில் கொள்ளத்தக்க முறைகள்

பெண் கருவுற்றிருக்கும்போது, அவள் மிகத்திறம் பட வாழ்வு நடாத்தல் வேண்டும். கருவுற்ற நாள்முதல் ஒன்றுஞ்செய்யாது அவள் வாளா கிடத் தல் கூடாது. வழக்கம்போல் நிகழ்த்தி வந்த பயிற்சிகளையெல்லாம் அவள்நிகழ் த்தி வரலாம். மனைவி கருவுற்ற வேளை யில் கணவன் பெரும் பொறுப்புடன் அவளைக் கவனித்து வரல்வேண்டும். அச்சம் - ஐயம் - கவலை - பொறாமை-வெகுளி முதலிய கனல்கள், மனைவி மனதில் மூளாவண்ணம் நாயகன் நடந்து வரல் வேண் டும். இக்கனல்கள் கருக்குழியை எரிக்கும். கருவுற்ற வேளையில் பெண்மகள் சிலபோழ்து காய்ந்து விழுவது முண்டு. நாயகன் பொறுமையுடன் அக்காய்வை ஏற் றல் வேண்டும்.

மற்றுமொன்றை ஈண்டுச் சிறப்பாகக் குறிப்பிட விரும்புகிறேன். அது, மனைவி கருவுற்றிருக்கும்போது மெய்யுறு புணர்ச்சி நிகழ்த்தலாமா என்பது. இது குறித்துப் பலதிறக் கருத்து வேற்றுமைகளுண்டு.

உடற் கூற்றுக்கு ஏற்றவண்ணம் கூடுதல் நிகழ்ந்து வருகிறது. சிலர் மூன்று ஐந்து ஏழுமாதம்வரை கூடிக் குலாவுவர்; சிலர் பிள்ளை பிறக்கும்வரை அவ்வினை நிகழ்த்துவர். கருவுற்ற வேளையில் பெண்மக்கட்கு இயல் பாகக் கிளர்ச்சி மிகும். அக்கிளர்ச்சி மேலீட்டான், சில பெண்மக்கள் நாயகன்பால் நெருங்குதலுமுண்டு. அவ் வேளையில் மனைவி வேண்டுதலுக்கு இரங்காது மறுக் குங் கணவன்மார் இல்லாமலில்லை. மறுப்புக்குக் காரணம் மனைவிமீதும், வயிற்றிலுள்ள குழவியின்மீதுங்கொண்ட இரக்கமேயாகும். அவ்விரக்கம் இச்சையையும் அடி மைப்படுத்தும். மூன்று மாதங் கடந்ததும் மெய்யுறு புணர்ச்சியை நீப்பது நலன் என்பது சில அறிஞரது உள்ளக்கிடக்கை. ஒருவேளை மனைவி விருப்பந் தணிக்கக் கணவன் எண்ணுவனேல், அவளுடலுக்கும் உட்கருவிக் கும் கேடு நிகழா முறையில் கூடுவானாக.

மனைவி விரும்பாத வேளையில் அவளுடன் வலிந்து சேர முயலுங் கணவன் கணவனல்லன். அவன் அவ ளைக் கொல்லவந்த யமன் என்று கூறலாம். கருவுறுக் காலத்திலேயே வலிந்து புணரல்கூடாது. கருவுற்றுள்ள வேளையில், அதுவும் மனைவி விரும்பாதபோது, வலி யுறுத்திக் கூடுவோனை விலங்கென்றுஞ் சொல்ல லாமோ? அவன் விலங்கினும் இழிந்தவனல்லனோ? இத்துறையில் விலங்கினின்றும் மனித உலகமே பாடங்

கற்கவேண்டி யிருக்கிறது. மக்காள்! விலங்கு உலகை நோக்குங்கள். அதன் பெண்ணினம் கருவுற்றிருக்கும் போது, ஆணினம் நெருங்கி வலியுறுத்துகிறதா? இல்லையே! ஆறறிவுடைய மனிதனே கருவுற்ற வேளையிலும் மனைவியிடஞ் செல்கிறான்! அதிலும் அவ்வேளையில் வலிந்து சேருவோனை என்னென்று கூறுவது? மனைவி கருவுற்றுள்ள போழ்து அவளைச் சகோதரியாகக் கருதுவோனே மனிதன்.

**பிள்ளைப் பேற்றில் அச்சம்**

மாம் பருவத்தில் காய்ப்பதுபோல, உற்றவயதில் பெண்மகளும் பிள்ளைபெறுவது இயற்கையோடியைந்து வாழ்வதாகும். இப்பொழுது உலகில் சில இடங்களில் பெண்மக்களிற் சிலர் பிள்ளைப் பேற்றுக்கு அஞ்சித் திருமணவாழ்வு கொள்ளாதொழிகிறார். சிலர் பிள்ளைப்பேறு உறுமுறையில் ஆண்கலப்புக் கொள்ள விரும்புகிறார். சிலர் பிள்ளை கறைக்கும் வித்தைபயின்று வாழ்கிறார். இக்கூட்டத்தார் தற்கால நாகரிகமென்னும் அறியாமையில் மூழ்கினவர். இந்நாகரிகத்தை நாகரிகம் என்று எப்படி அழைப்பது? இச் செயற்கைத் துறைகளில் இறங்குவோர் பெரிதுங் கற்றவர்; பெரும்பட்டம் பெற்றவர். இவர் அறிவு இருந்தவாறென்னே! என்னே! இவர் கற்றது கல்வியா?

திருமண வாழ்வையே வெறுத்து நிற்பவரைப் பற்றி 'இயற்கை யற'த்தில் விரிவாகச் சொல்லி யிருக்கிறேன். வாளா கிடத்தலாலும், முஷ்டிமைதுனம் போன்ற செயற்கைத் துறைகளாலும் விளையுங் கேடுகளும் ஆங்குச் சுருங்க ஓதப்பட் டிருக்கின்றன. ஆத

லால், அவைகளைப்பற்றி ஈண்டு மீண்டுங் கூறவேண்டுவ தில்லை.

காசநோய், தொழுநோய் (குஷ்டரோகம்), பித்து முதலிய நோய்களால் பீடிக்கப் பட்டவர்கள், திருமண வாழ்வுகொள்ளாது வாளாகிடக்கலாம்; திருமண வாழ்வு கொண்ட பின்னர் இந் நோய்கள் தொடரின்,அப்பொழுதும் வாளாகிடக்கலாம். ஈண்டு வாளாகிடத்தல் என்பது பிள்ளைப்பேற்றை வெறுத்தலைக் குறிப்பதன்று. அப்பிள்ளைப் பேற்றால் உலகில் நோய்கள் வளருமாகலின், வாளாகிடத்தலே அறம் என்பதைக் குறிப்பதென்க.

**நோயாளிகள்**

ஓயாத குடியனை மணக்க நேர்ந்த பெண்மணி கலவி வெறுத்து வாழ்வது நியாயம். தீய பிள்ளைகளைப் பெற்று உலகைக் கெடுப்பதினும், தான் ஒருத்தி வருந்தி ஒழிவதால் கேடு விளையாது. குடி, தொழுநோய், பெண் நோய், பித்து முதலியன கருவில் தாக்குற்றுப் பிள்ளைகளை அடர்தலுண்டு. இன்னோரன்ன அல்லாத பிற, பிள்ளையைச் சாருமென்பது கிடையாது. இதுகுறித்து மேல்நாட்டார் ஆராய்ச்சி செய்து, இதனை எவரும் ஒப்ப முடிந்த வழியில் உறுதிப்படுத்தியிருக்கிறார். இது நிற்க.

**குடியனுடன் சேரல் கூடாது**

சில இடங்களில் பொருட்செல்வ நிலை கருதிப் பிள்ளைப்பேற்றை ஒடுக்கிக் கொள்வதுண்டு. திருமண வாழ்வில் தலைப்படாது பிரமசரியங் காக்குமாறு நமது நாட்டார்க்கு மகாத்மா காந்தி அறிவுறுத்துகிறார். காரணம் என்னை? நாட்டின் வறியநிலை நோக்கியென்க. இத் தகைக் காரணங்களால் பிள்ளைப்பேற்றை வெறுத்தல்

எற்கப்பாலதே. இக்குறைகள் ஒன்றுமில்லா மக்கள், பிள்ளைப் பேற்றை வெறுப்பது அறமன்று.

பெண்மகள் ஆடவனுடன் புணரினும் கருத்தரியா முறைகள் பல மேல்நாட்டில் காணப்பட்டு வருகின்றன. அம்முறைகளை அறிவுறுத்தும் நூல் பலவற்றை யான் படித்துப் பார்த்தேன். ஒன்றேனும் எனக்குப் பிடிக்கவில்லை. கருவைத் தகையக் காணப்பட்டுள்ள முறைகளாலும் கருவிகளாலும் உறுப்புக்களுக்குப் பின்னை ஊறு விளையும் என்பதில் ஐயம் இல்லை. இத்துறையில் இறங்க ஒருப்படும் ஆடவனுக்குந் தீமையுண்டு; மகளிருக்குந் தீமையுண்டு. இவை யாவும் முஷ்டிமைதுனம் போன்ற செயற்கை முறைகளேயாகும். பிள்ளைப்பேற்றைத் தடுக்கக் கொள்ளப்படும் முறைகளும் கருவிகளும் நாளடைவில் மெல்லிய கரு வுறுப்புக்களின் ஆக்கங் குலைக்கும். அவ்வுயிர்நிலை யுறுப்புக் குலைவால் பின்னே பலதிற நோய்கள் தோன்றும். ஆண் பெண் உறுப்புச் சேர்க்கையின்றிப் பிற இடைச்சேர்க்கைகள் யாவும் தீமை பயப்பன என்று சுருங்கச் சொல்கிறேன்.

கருத்தடை

நமது நாட்டுப் பெண்மக்களில் மேல்நாட்டு முறைப்படி கல்வி பயின்று திரிவோர் சிலர், அறியாமையால் பிள்ளைப் பேற்றைத் தகையும் முறை கொண்டு வாழ்வு நடாத்துகிறார்களென்று அறிகிறேன். இப்பெண் மக்கள் பெரும் பதவிகளிலும் வீற்றிருக்கிறார்கள். பெரும்பான்மையோர் ஆசிரியன்மாராக இருக்கிறார். அவர் கூட்டுறவு நேராதவாறு, பெண் குழந்தைகளைக்

தற்கால நாகரிகப் பெண் மக்கள்

காக்க வேண்டுவது பெற்றோர் கடன். இந்நூலில் இது குறித்து விரித்துரைக்க வேண்டுவதில்லை.

சில பெண்மக்கள் செயற்கைக் கருவிகளைச் செருகிக் கொள்ளாது ஆடவரோடு இன்பந் துய்க்கிறார்கள். ஆனால் அவர்கள் பிள்ளைப் பேற்றை விரும்புகிறார்களில்லை. கருவுற்ற குறி தோன்றியதும் அதைச் சிதைக்க அவர் முயல்கிறார். அதற்கென எவ்வளவு முயற்சி! எவ்வளவு உழைப்பு! கருச்சிதைக்க ஒருப்படும் மருத்துவர்கட்குக் கடவுள் என்நரகம் படைத்திருக்கிறாரோ தெரியவில்லை. பாவங்களிற் சிறந்த பாவம் கருச்சிதைப்பதும், அதற்குத் துணை போவதுமாகும். பாவமென்றால் பாவத்துக்கு அஞ்சாதாருமுளர். அவருக்கென்னுரைப்பது?

கருச்சிதைவு

இயற்கையில் அமையுங் கருவை மருந்தாலோ மற்றெதனாலோ அழிப்பின், கருக்குழிக்கும் அதனையொட்டிய சினையுறுப்புக்கட்கும் ஊறு உண்டாகிறது. அதனால் உடல் வலிமை குன்றும். இவ்வாறு பல முறை நிகழ்த்துவோர் கதி என்னை? இவ்வுலக வாழ்வை அகாலத்தில் நீப்பதே அவர் கதியாகும்.

நற்குடியிற் பிறந்து, கூடாவொழுக்கத்தில் தலைப்படுவோரிடையும் கருவழித்தல் நிகழ்கிறது. பிள்ளை பிறந்தால் மானம் போகுமென்று கருதி, அன்னார் பெருங் கொலை செய்கிறார். தொடக்கத்தில் காம வேட்கை! பின்னை மானம்! என் செய்வது? குழந்தை கடவுளின் கோடை; நாட்டின் செல்வம். இதை ஏன் அழித்தல் வேண்டும்? நமது நாட்டில் பொதுவா

வழுக்கிய நடையால் கொலை

கப் பெண் மக்கட்கும், சிறப்பாகக் கைம்பெண்கட்கும் ஏற்பட்டுள்ள கட்டுப்பாடுகள் உயிர்க் கொலையாய் முடி கின்றன. இளம் பெண்கள் வழுக்கி வீழ்கிறார்கள்; பின்னை விழிக்கிறார்கள்.

அவர்கள் கூடாவொழுக்கத்தில் தலைப்படாத நெறி யில் வாழ்வு நடாத்தல் வேண்டும். நெறிதவற நேரின், குழந்தையை ஈன்றுவளர்க்கும் அஞ்சா நெஞ்சம்பெறல் வேண்டும். உலகப் பழிப்புக்கு அஞ்சிக் கருவழிப்பது பேரிழிவு! இழிவு! கருவழிப்பதால் உடல் நலன் குன்றி, நோய் வாய்ப்பட்டு, அகாலத்தில் மாள்வது ஒருதலை. அரிய வாழ்வை ஏனோ இடையில் தொலைத் தல் வேண்டும்?

கடவுள் நெறிக்கும், உலக வளர்ச்சிக்கும், நாட் டின் செல்வத்துக்கும், இன்ப வாழ்வுக்கும் உறு கருவி யாயுள்ள பிள்ளைப் பேற்றை விரும்பாத நெஞ்சம், ஈர மில்லா வன்னெஞ்ச மாகும். அந்நெஞ்சம் பெண்ணுல கிற்கு உரியதன்று. பிள்ளைப் பேறு விரும்பாத பெண், பெண்ணல்லள் என்று சுருங்கச் சொல்லலாம்.

பெண் பிறவி தாங்கினோர், பிள்ளைப் பேறு பெற, இளமை தொட்டு - உடல்நலன் - ஒழுக்கம் முதலியவற் றைக் காத்துவரல் வேண்டும். அதற்குரியது பெண் பிறவி என்று கூறல் மிகையாகாது. ஆகவே, ஒருத்தி ஒருவனுடன் வாழ்ந்து, பிள்ளை பெற்று, உலகோம்புவதே சிறப்பு.

தாய் - தந்தை - குழந்தை - இம்மூன்றுஞ் சேர்ந்த ஒன்றே சோமாஸ்கந்த மூர்த்தமேன்பது. உலகில் இம் மூன்றும் நிலைபெறல் இயற்கை என்பதை அறிவுறுத்

தவே நம்முன்னோர்கள் கடவுளை அம்மூர்த்தமாகவும் கொண்டு வழிபட்டார்கள். 'அம்மையே அப்பா ஒப்பிலா மணியே அன்பினில் விளைந்த ஆரமுதே' என்றார் மாணிக்க வாசகனார். தாய் தந்தையர் அன்பினின் றும் பிறக்கும் ஆரமுதம் குழந்தையென்க. அக்குழந்தை பெற முயல்வதே பெருந்தவம். பெண்ணின் பெருமைக்கு உறையுளாயுள்ள அத்தவம் யாண்டும் மலிக; என்றும் நிலைக்க.

**தாய் தந்தையர் அன்பே குழந்தை**

படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைபடக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்து
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே.

—பாண்டியன் அறிவுடை நம்பி



## ௧0. பெண்ணலன்



[தாயும் நாடும்-செயற்கை முறைகளும் கழுவாயும்-எரி நோய் - உயிர் முட்டை-இயற்கையும் மருந்தும் - மாதப்பூப்பு-உறுப்புப்பிறழ்ச்சி-மலச்சிக்கல்-வியர்வை-பிராணயாமம் - சிறுநீர் - பித்தம் - நோன்பு - அழகு காத்தல்.]

**உடம்பா ரழியில் உயிரா ரழிவார்**
**திடம்பட மெஞ்ஞானஞ் சேரவு மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே.**

—திருமூலர்

பிள்ளைப்பேறு முதலிய பெருமைகட்கு நிலைக்களனா யிருப்பது உடல் நலன். உடல்நலனைக் கெடுத்து நோய் வாய்ப்படும் ஒருத்தியின் ஊனம் அவளோடு ஒழிவதில்லை. அவள் வழி வழித் தோன்றும் உயிர்களையும் அவ்வூனம் தொடர்ந்து தொடர்ந்து பீடிக்கிறது. ஒரு நாட்டின் செழுமையும் கொழுமையும் அந்நாட்டுப் பெண்மக்கள் நிலையைப் பொறுத்திருக்கின்றன.

**தாயும் நாடும்**

நோயில்லாப் பெண் மக்களைப் பெற்ற நாடே தவஞ் சிறந்த நாடு. ஒரு நாடு எல்லா வளங்களையுங் கொழிப்பதாயினும், அந்நாட்டு மக்கள் கூடா ஒழுக்கத்தில் தோய்ந்து, நோய்வாய்ப் படுவரேல், அவர்கட்குப் பிறக்கும் மூஞ்சூறுகளும், குருடுகளும், செவிடுகளும் அந்நாட்டின் வளங்களிலுள்ள

நலன்களை எங்ஙனந் துய்க்கும்? இன்ப நுகர்ச்சிக்கு நாட்டு வளனோடு மக்கள் வளனும் பொருந்தி யிருத்தல் வேண்டும். ஆதலால், நோயற்ற வாழ்வுடைய மக்கள் வதியும் நாடே சிறந்த தவநாடாகும். அத்தகை நாட்டைப் படைக்கவேண்டிய பொறுப்பு, தாயுடையது என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

தாய்மைக்குரிய பெண்மணி நோயின்றி நலம் பெற்று வாழவே முயலல் வேண்டும். நற்றாயாதற் குரிய வழியில் பெண்ணை இளமை தொட்டு வளர்க்கத் தாய் தந்தையர் பெரிதுங் கடமைப்பட்டிருக்கிறார். விரிவு இந் நூல் 'பெண் வளர்ப்'பில் காண்க. ஆண்டு உடலோம்பு முறைகளும் சில கூறப்பட்டிருக்கின்றன.

பெண்ணினநல்லாள், உணவானும் ஒழுக்கத்தானும், தன்னுடல் நிலையைப் பாதுகாத்து வரல் வேண்டும். வெம்மை யூட்டும் உணவும், கூடாவொழுக்கமும் பெண்ணின் மெல்லிய உறுப்புக்களை எரித்து அரித்துக் கல்லும். அவ்வெம்மைக்கு அடிமையாகாது, இயற்கை வழி வாழ்வு நடாத்தும் பெண்ணின் வாழ்வே நல்வாழ்வாக மலர்ந்து மணம் வீசும்.

உடல் நலனுக்குரிய முறைகள் பல இந்நூற்கண் ஆங்காங்கே சொல்லப்பட் டிருக்கின்றன. நூற்கண் வேறிடத்தில் சொல்லாத சிலவற்றை ஈண்டுச் சுருங்கக் குறிப்பிடுவது நலமெனத் தோன்றுகிறது.

செயற்கை முறை: இல்லறமென்னும் இயற்கையறமேலாது, வேட்கையைச் செயற்கை முறையில் தணிக்கப் புகும் மக்கள், பின்னே அடையுங் கொடுமைகள்

முன்னர் விளக்கப்பட்டிருக்கின்றன. முஷ்டிமைதுனம் போன்ற செயற்கைத் துறைகளில் அறியாமையால் வீழ்ந்து இடர்ப்படும் மக்கள் நிலையும் ஆண்டுக் கூறப்பட்டிருக்கிறது. அச்செயற்கையாளர் மீண்டும் நலன்பெறல் உண்டோ?

தொடக்கநிலையில் இருப்போர்க்குத் திருமணமே பொருந்திய மருந்தாகும். அந்நிலை கடந்து, முகம் வெளுத்து, கண்ணொளிமங்கி, கால் இயக்கந்தளர்ந்து, பசி குன்றி, மலஞ் சிக்கலுற்று, உறக்கமிழந்து, இருக்கும்போதும், நிற்கும்போதும், கிடக்கும்போதும், எப்போதும் தீய எண்ணத்துக்கு அடிமையாய், சிறுநீர் அடிக்கடி சொட்டும் முதிர்ந்த நிலையடைந்த 'முத்தர்கள்' உய்யும் வழியில்லை என்றே மேல்நாட்டு மருத்துவ அறிஞர் பலர் எழுதியிருக்கிறார். உய்யும் வழியும் பெறாத அம் 'முத்தர்கள்' நிலை பெரிதும் இரங்கத்தக்கதன்றோ?

இயற்கையின் இயல்பு

அத்தீயோர் அந்நிலை எய்தியதற்குக் காரணம் என்னை? இயற்கை அன்னைக்கு அன்னார் மாறுபட்டு நடந்தமையாகும். அந்நடக்கை, அளிக்கத்தக்க பயனை அளியாதொழியுமோ? தன் நியதிக்கு மாறுபட்டு நடப்போரைச் சிறிதும் இரக்கமின்றி ஒறுப்பது இயற்கை அன்னையின் இயல்பு. மேலும் மேலும் மருந்து முதலியன உண்டு, இயற்கை அன்னையை மறப்பது, அவளுக்கு மேலும் மேலும் சினத்தை மூட்டுவதாகும்.

செயற்கைத் துறையில் முதிர்ந்த 'முத்தர்கட்கு' உரியமருந்து இவ்வுலகிலில்லை. இல்லையேல், அவர்கள்

கதி என்னை? குற்றத்திற்கு மன்னிப்பு இல்லையா? மன்னிப்பு உண்டு. எப்பொழுது? செய்த குற்றம் குறித்துக் கழிவிரக்கமும், மீண்டும் அக்குற்றஞ் செய்யா மன உறுதியும் கொள்வோர்க்கு மன்னிப்பும் கிடைக்கும்; உய்வும் உண்டு. செயற்கைத் துறையில் ஆடியதன் பயனைத் துய்ப்போர் முதலாவது இயற்கையை மறந்தது தவறு என்பதை உணர்தல் வேண்டும்; அவ்வுணர்வுடன் நிகழ்த்திய பிழைகுறித்து வருந்தல் வேண்டும்; வருந்துவதுடன் மீண்டும் அக்குற்றம் நிகழ்த்தாத மன உறுதி பெறுதல் வேண்டும். செயற்கையாளர் இயற்கை அன்னைபால் சரண்புகுந்து, 'அன்னாய்! அடைக்கலம்! காத்தல் வேண்டும்' என்று அழுதல் வேண்டும். இயற்கை வழி வாழ்வுநடாத்த உறுதிகொள்ளல் வேண்டும் என்று சுருக்கக் கூறலாம்.

கழிவிரக்கமும் மன்னிப்பும்

முதலாவது அந்நோயாளர்கள் உயிர் நிலையைக் கரத்தால் தொடுவதுங்கூடாது; மனதால் நினைப்பதுங் கூடாது. பழக்கம் மிகக்கொடியது. நீண்டநாள் பழக்கம் அவர்களை விரைவில் விடுதலை செய்யாது. அப்பழக்கத்தைத் தவிர்க்க வல்லது மன உறுதி ஒன்றே. உறுதி குலைந்து, மீண்டும் இடையிடையே பழைய பழக்கத்துக்கு அடிமையானால், மாளவேண்டுவதே முடிவு. மன உறுதியால் பழக்கத்தை வென்று, இயற்கை அன்னையின் திருவருளாகிய நீரிலும் காற்றிலும் ஞாயிற்றொளியிலும் முறைப்படி படிந்து வர வர, இயற்கை அன்னை திருவருள் காப்பாள்.

இயற்கை முறைகள்

வெம்மை நாட்டில் வதிவோர் நீண்ட நேரம் ஞாயி றொளியில் நிற்றலாகாது. ஐந்து அல்லது பத்து நிமி டஞ்சாலும், ஞாயிறொளியில் மூழ்கும்போது தலை யையும் அரையையும் துணியால் அல்லது பசுந் தழை யால் மூடிக்கொள்ளல் வேண்டும். இல்லையேல் மூளைக் குப் பழுதுநேரும்.

இவ்வியற்கை மூழ்கலோடு, இயற்கை உணவருந் தல் நலன். காய்கறிகளைப் பசுமையாக உண்பது சிறப்பு.

இயற்கை உணவு

இயலாதாயின் அவைகளைச் சிறிது அவித்துக் கொள்ளலாம். காரம் புளி சேர்க்கை கூடாது. பழம் நிரம்ப உண்ண லாம். பழமே உண்டும் வாழலாம். காப்பி, தேயிலை, கொக்கோ, ஓவல்டைன் முதலியன வீட்டில் தலைகாட்ட லாகாது. நீர் அடிக்கடி அருந்தலாம். முறைப்படி உடல் நிலைக்கேற்ற அளவில் விரதமிருப்பது எல்லாவற்றி னும் சிறந்தது.

இந்நோயாளர்கள் காடுகளிலாதல் காடடர்ந்த மலை களிலாதல் வதிதல் நலன். இவர்கள் கட்டிடங்களில் -

வாழும் இடம்

அதிலும் காற்றுநுழை இல்லாத கட்டி டங்களில்-பெரும் பொழுது போக்குத லாகாது; மரத்தடியில் பகல் பொழுது கழிப்பது சிறப் பளிக்கும்; இயற்கையுடன் இயைந்து வாழல் வேண்டு மென்று சுருங்கச்சொல்லலாம். இவ்வாறு மனந்திரும்பி ஞோர், ஓராண்டில் ஈராண்டில் இயற்கைஅன்னையின் திரு வருள் ஒரோவழி பெற்று, ஒருவாறு நலனுறுதல்கூடும்.

இடையில் உடல் நலனைக் கெடுத்துப் பின்னை ஏன் இடருறல் வேண்டும்? அவ்விடரினின்றும் நீங்க ஏன்

அன்றும் இன்றும் உழலல் வேண்டும்: இளமை தொட்டு இயற்கையோடியைந்த வாழ்வு நடாத்தும் பெண்ணே சிறப்புடையாள். அவள் பெறற்கரிய இன்பத்தைப் பெறுகிறாள். ஆதலால், எக்காரணம் பற்றியுஞ்செயற்கைத் துறைகளில் படியாத பெண்மக்கள் இயற்கை வாழ்வு நடாத்துவார்களாக.

எரிநோய்: மேற்குறிப்பிட்ட செயற்கைத் துறைகளில் விழாது, வேறு பல தீத்துறைகளிலும் வீழ்ந்து, நோய் வாய்ப்பட்டு, உடல் நலனைக் கெடுத்துக் கொள்ளும் பெண்மக்களும் உண்டு. இவ்வுலகில் வெறுக்கத் தக்க உயிர்கள், பன்றிகள் என்று சிலர் கூறுப. அவைகளினும் இழிந்தன இந்நோயுருவங்கள். உயர்திணைப் பெண் தெய்வங்களை அஃறிணை உருவங்களென்று சொல்லவும் நேர்ந்தது.

பெண் பிறவி தாங்குவோர் அனைவரும் வாழ்வில் வெற்றி பெறுகின்றில்லை. சில பெண்மக்கள் வழுக்கி வீழ்கிறார்கள். பெண் பிறவி தாங்குவது மட்டும் பெண்மை கூட்டாது. பிறவிக்கேற்ற நலனெலாம் மலர நல்வழியில் வளர்ந்து தெய்வநிலை பெறுபவளே பெண்ணென்னுஞ் சொற்பொருளாவள். ஒருவனுடன் வாழ்வு நடாத்திக் கடவுள் படைப்புக்குத் துணைபுரிய வழங்கப்பட்ட இன்ப உறுப்புக்களைக் கூடாவொழுக்கத்தாலும் பலர் சேர்க்கையாலும் புண்படுத்தி எரியாக்கித் தான் இடர்ப்படுவதோடு, பிறரையும் பின்வரும் உலகையும் இடர்ப்படுத்தும் ஒருத்தி எங்ஙனம் பெண்ணாவள்? அவள் தாய்மைக்குரிய பெண்மை இழந்த பாவி

யல்லளோ? அவளை அஃறிணையின் பாற்படுத்துவது தவருகாது.

அப்பாவி உருவிலும் உறுப்பிலும் வெம்மை கொழுந்து விட்டெரியும். அவ்வுருவை ஒரு நெருப்பு மரம் என்று கூறலாம். அவ்வுருவைத் தொட்டாலும் போதும். நோய்த்தீ பற்றிக்கொள்ளும். ஐம்பூதத்துள் ஒன்ருகிய தீச்சூட்டால் நேரும் புண்ணுதல் ஆறிவிடும். இப்பெண்ணின் தீப்புண்ணுக்கு ஆறுதலில்லை. அந்நெருப்பிடை வீழ்ந்து வருந்துவோர்நிலை இரங்கத் தக்கது. உயிர்நிலையினின்றும் எழும் வெம்மை, மூளையையுந் தாக்கி, வேறு பல உறுப்புக்களையுங் கலக்கி, இளகச் செய்யுங் கொடுமையை என்னென்று இயம்புவது? தண்மைப்பெண், வெம்மைப் பேயாளுள். பசிய மருதம், பசுங்கள்ளியையும் எரிக்கும் பாலையாயிற்று,

இப்பெண் ஏன் பிறந்தாள்? ஊரை அழிக்கவா? இவள், தானும் வெம்மையில் வேகிருள்; மற்றவரையும் வேக வைக்கிருள். இவள் கருவில் உயிர் முட்டை

உயிர் முட்டை நிலவுங்கொல்! நிலவி வளருங்கொல்!
அஃது எரிந்து கரிந்தன்ருே போகும்?

ஒழுக்கங் காவாதொழிந்த மதியீனம் இப்பொழுது 'மகளுக்கு' விளங்குகிறது! ஆகவே, ஒருவனுடன் வாழும் ஒருத்தியே நலனுடையாளென்க.

ஒழுக்கந் தவறி வீழ்ந்த பெண்மக்கள் நலனுறுவது எங்ஙனம்? இவர்கள் விடுதலை அடையக்கொள்ளும் போராவலுக்கு அளவில்லை. இவர்கள் எவ்வழி முயன்ருலும் கறந்த பாலாவப் போவதில்லை. ஆயினும், தக்க கழுவாய் தேடின், ஒரு வழியில் துன்பமின்றியாதல் வாழ்தல் கூடும்.

வெள்ளை, கொறுக்கு, மேகம் முதலிய கொடுநோய்கள் தலைகாட்டும்போதே, பெண் எச்சரிக்கையாயிருந்து, இயற்கைவழி வாழ்வு நடாத்தினால் ஒருவாறு எரி தணிக்கலாம். முதலாவது நோய் தலை கட்டும்போதே, பெண்மகள் பிறர் சேர்க்கையை அறவே முற்றுந் தொலைத்தல் வேண்டும்.

தொடக்கத்திலேயே கழுவாய்

நோயுடையார்க்கு வெம்மைக் கிளர்ச்சி அதிகம். அத்தூண்டுதலுக்கு எக்காரணம் பற்றியும் அவர் எளியராதல் கூடாது. உள்ளத்தில் உறுதி கொண்டு, உள்ளும்புறமும் பற்றியுள்ள வெம்மைதணிக்க அவர் முயலல் வேண்டும். இதற்கு இருவழியுண்டு. ஒன்று இயற்கை வழி; மற்றொன்று மருந்து வழி. இயற்கை வழியில் தலையாயது நோன்பு; அதாவது விரதம் ஏற்பது. நோன்பு பூண்டு, நீர் காற்று ஞாயிறொளியில் படிந்து, பொருந்திய உணவுகொண்டு வாழின், வெம்மை ஒருவாறு தணியும். இவ்வழிநிற்க இயலாதார் அநுபவத்திற் சிறந்த மருத்துவரிடம் போந்து மருந்து உண்பாராக.

இயற்கையும் மருந்தும்

மருந்தினும் இயற்கை முறையே சால்புடைத்து. நோய் நீங்கப் பெற்ற பின்னர் நல்வழியில் காலங் கழிப்பது பெண்மைக்கு அழகு. இப்பெண்ணோய் உலகிடை அருகுநாள், உலகம் விடுதலை அடையும் நாளாகும்.

மாதப்பூப்பு: செயற்கை நரகங்களில் வீழாமலும், வேறு பல கூடா ஒழுக்கங்களில் வீழாமலும் தன்னைக் காத்து, இயற்கை யறத்தை நடாத்திப், பிள்ளைப்பேறு முதலிய பேறுகளையடைய உடல் நலன் ஓம்பும் பெண்ணே பெண்ணினல்ல நங்கையாவள். உலகைஈன்று

வளர்க்குந் தாய், பெண்ணாகலான், உடல் நலனைப் பெரிதும் அவள் பேணுதல் வேண்டும்.

அவ்வாறு பேணிவரும் பெண், திங்கள்தோறும் ஒழுங்காகப் பூப்பெய்துவள். மாதப்பூப்பு, மாதவிடாய், மாதருது, வீட்டுத்தூரம், வீட்டுவிலக்கு, தலைமுழுக்கு, தீட்டு முதலிய யாவும் ஒரு பொருட் கிளவிகள். திங்களுக் கொருமுறை நிகழும் சூதக வெளியீடு பூப்பென்பது. அவ்வெளியீடு இருபத்தெட்டு நாளுக் கொருமுறை நிகழல் இயல்பு. உடற் கூற்றுக் கேற்ற வண்ணம் சிலருக்கு இருபத்தேழாம் நாளிலும், சிலருக்கு இருபத்தொன்பது முப்பதாம் நாளிலும் சூதகம் வெளிப்படுதலுண்டு. இவ்வேற்றுமை இயல்பு. அவரவர் உடல் நிலைக்கேற்றவாறு அவ்வக்கால எல்லைக்குள் பூப்புறல் வேண்டும். அதில் மாற்றமும் பிறழ்ச்சியும் நிகழ்வது நல்லுடலுக்கு அறிகுறியாகாது. சூதகம் வடிதல் நான்கு ஐந்து நாளுக்குள் நிற்றல் நல்லது. அதற்கு மேற்பட்டு வடிதல் நல்லதன்று. உடற் கூற்றுக் கேற்ற வண்ணம் சில நாள் கூடலும் குறைதலும் உண்டு. மாதவிடாயில் ஒழுங்கீனம் நிகழின், உடனே அதைப் போக்கி, ஒழுங்கிற்குக் கொணர முயல வேண்டுவது பெண்மக்கள் கடன்.

பூப்பின் ஒழுங்கின்மைக்குக் கூறப்படுங் காரணங்கள் பலப்பல. ஒழுங்கின்மைத் திறங்களும் பற்பல. அவைகளை மருத்துவ நூல்களிற் காண்க.

இளமை தொட்டு ஒழுக்கங்காத்து, உணவு உறக்கம் முதலியவற்றில் ஏற்றமிறக்கமின்றி அவைகளை அளவாக்கொண்டு, முறையாக உடற்பயிற்சி செய்து, இயற்

கைக்கு அரணுமாறு வாழ்ந்து வருவோர்க்கு மாத விடாயில் தவறுதல் நிகழாது. மாதப்பூப்பின் ஒழுங்கு பெண்ணின் வாழ்வின் ஒழுங்காகும். ஆதலால், மாத விடாயில் தவறுதல் நிகழ்ந்ததும் பெண்மணி, தக்க மருத்துவர்பால் சென்று, உற்ற குறைபாடுகளை முறையிட்டு, அவர் வழிநின்றொழுகி, அதை ஒழுங்கு படுத்திக்கொள்ளல் வேண்டும்.

மரஞ்சுற்றல் மலையேறல் முதலிய வழக்கங்கள் நல்லன.

பிறழ்ச்சி : பெண்மக்கள் போதிய பயிற்சியின்றி ஒரேயிடத்தில் கிடத்தலானும், பல காரணங்களால் மலச் சிக்கல் உறுதலானும், வேறுபல காரணங்களானும் கரு உறுப்பு இடம் விடுத்துச் சரிதலோ, ஏறலோ, தாழ்தலோ நிகழ்வதுண்டு. இதற்குச் சிறந்த காரணம் உடலில் போதிய உரம் இன்மையே யாகும். தக்க மருத்துவரைக்கொண்டு உடனே கரு உறுப்பு நிலையை ஒழுங்கு படுத்தல்வேண்டும். ஒழுங்குபட்டதும் உடற்பயிற்சியானும், நல்லுணவானும், பிற இயற்கை முறைகளானும் உடலை நலனுறச் செய்தல் அறிவுடைமை.

கரு உறுப்பின் பிறழ்ச்சியை உணராது வாளாகிடந்தால் பின்னர்ப் பலதிற இன்னல்கள் விளையும். சில போழ்து சத்திரஞ் செய்தலும் நேரும். கருப்பையின் பிறழ்ச்சியை உணராது, 'பிள்ளைப்பே றில்லையே' என்று வருந்தி வருந்திச் சிலர் அழுவதுமுண்டு. சில நாயகன்மார் மறுமணஞ் செய்வதுமுண்டு. இயந்திரகாலத்தில் வாழும் தற்காலப் பெண்ணுலகிற்குக் கருப்பைப் பிறழ்ச்சி மிக இயல்பாகிவிட்டது. ஒரே இடத்தில் கிடந்து எந்நேரமுந்

தின்று, போகந் துய்த்துக்கொண்டிருந்தால் கருப்பையும் நெகிழும்; பிற உறுப்புக்களும் தளரும். எல்லா நலன்களுக்கும் உடற்பயிற்சி, நீராடல், காற்றில் உலவல், ஞாயிற்றொளியில் நிற்றல், பொருந்திய உணவருந்திப் போகத்தில் அளவாயிருத்தல் முதலியன வேண்டற்பாலன.

மலச்சிக்கல்: மலச்சிக்கலைப்பற்றி இந்நூற்கண் பல இடங்களில் ஒவ்வொரு முறையில் குறிப்பிட்டு வருகிறேன். ஈண்டுஞ் சில உரை பகர்கிறேன். உறங்கி எழுந்ததும் அன்றாடம் மலங்கழித்தல் வேண்டும். மலம் முற்றுங் கழியாது, சிக்குற்றுத் தங்குமேல், அது நஞ்சாகிப் பலதிற நோய்களை உண்டுபண்ணும். ஏறக்குறைய எல்லா நோய்களையும் பிறப்பிப்பது மலச்சிக்கல் என்பதை ஆராய்ச்சியிற் காணலாம். ஆதலால், மலச்சிக்கலைப் போக்க முயல்வது நோய் வாரெவொண்ணாதவாறு தடுக்க முயல்வதாகும். உடற்பயிற்சியில் கவலை செலுத்தாது சோம்பிக் கிடத்தல், பொருந்தா உணவருந்தல், மீதூண் கொள்ளல், கண் விழித்தல், அடிக்கடி மருந்துண்ணல் முதலியவாற்றான் மலச்சிக்கல் உறுகிறது. அளவு மீறிய போகத்தாலும் மலச்சிக்கல் நேர்வதுண்டு. மலச்சிக்கலைப் போக்க அன்றாட உணவு, உறக்கம், பழக்கவழக்கம் முதலியவற்றை ஒழுங்குபடுத்திக் கொள்ளல்வேண்டும். உடற்பயிற்சி இன்றியமையாதது. பழவுணவு மலச்சிக்கலைப் போக்கும். போதிய அளவு நீர் அருந்தல் மலச்சிக்கலுக்குப் பெருமருந்து. கத்திரிப்பிஞ்சு, வண்டைப்பிஞ்சு, வெங்காயம், தக்காளி, கடுக்காய் முதலியன உண்டுவரின் மலமிறங்கும். எம்

முயற்சியாலும் மலக்கழியா தொழியுமேல் எனிமாவால் அதைக் கழித்தல் வேண்டும். காலையில் நறு நீராடல் வேண்டும். நீராடல் முன்னருஞ் சொல்லப்பட்டிருக்கிறது. ஆற்றுநீர் ஊற்றுநீரில்லாத இடங்களில் தொட்டியில் நீர் நிரப்பி, அதில் சிறிது நேரம் ஐந்து அல்லது பத்து நிமிடம் காலும் தலையும் நீரில் தோயாதவாறு, கொப்பூழுக்குக்கீழே நீர் நிற்குமாறு அமர்ந்து, பின்னர்த் தலை முழுகலாம். இது கூனே என்பார் கொண்ட முறை. இது குடருக்கு வலிமை யூட்டி, குருதி பெருக்கி, மலக்கழிவை ஒழுங்குபடுத்தும்.

வியர்வை: அன்றாடம் வியர்வை இறங்குதல் உடல் நலனுக்குக் காப்பளிப்பதாகும். வியர்வை இறங்காமல் உள்ளே தங்குவது உடலில் நஞ்சை இருத்துவதை யொக்கும். உழைப்பாலும், உடற்பயிற்சியாலும் வியர்வை கழிக்கலாம். வியர்வை எளிதில் இறங்காவிடின், வேது அதாவது நீராவி பிடித்தல் நலம். சிலர் தலை நோயால் பிடிக்கப்பட்டிருக்கும்போது வேது பிடித்ததும் அந்நோய் நீங்கப்பெறுகிறார். நீக்கத்துக்குக் காரணம் என்னை? வெளியே வாராது உள்ளே தங்கிக்கொண்டிருந்த நச்சுநீர் வெளி வந்தமையாகும். வியர்வை கசியா இடங்களில் குருதியோட்டங் குறைவதுண்டு. நாளடைவில் அவ்விடம் மரத்தும் போகும். வேது பிடித்தலால் நச்சை இறக்கி நலம்பெறலாம். வியர்வை சொட்டச்சொட்ட வேலை செய்வது சிறப்பு. உறக்கத்துக்குப் போம்போதும், உறக்கத்தினின்று எழும்போதும் உடலை நன்றாகத் தேய்த்துக்கொள்வது நலம். தூய நீராடி மேலழுக்குகளைப் போக்கல் வேண்டும்.

பிராணுயாமம் : பிராணுயாமம் அட்டாங்க யோகங்களுள் ஒன்று. பண்டைக்காலத்தில் நமது நாட்டார் ஒவ்வொருவரும் பிராணுயாமத்தை ஐந்தாம் ஆண்டில் தொடங்கிப் பதினுரும் ஆண்டில் முற்றுறச் செய்து தேர்ச்சி பெறுவர். இப்பொழுது பிராணுயாமம் ஏட்டில் பாட்டில் மட்டுங் கிடக்கிறது. இலட்சத்தொருவர் பிராணுயாமஞ் செய்வதும் அரிதாயிற்று. உடலோம்பு முறைகளில் பிராணுயாமம் உயிர் போன்றது. பிராணுயாமத்தில்தேர்ச்சிபெற்ற ஒருத்தியையோ ஒருவனையோ நோய் என் செய்யும்? பிணி என் செய்யும்? யமன் தான் என் செய்வன்? அப்பயிற்சியை நமது நாடு இழந்து விட்டது. பெரிய உயிர்ச்செல்வத்தை நாடு இழந்தது.

இப்பொழுது பிராணுயாமத்தை முறையாகச் செய்வோர் அரியர். ஏடுகளைப் படித்து இரேசக பூரக கும்பகத்திலிறங்குவது தவறு. பிராணுயாமம் பிழைபடச் செய்தால் பல கேடுகள் விளையும். தக்கார் மாட்டுக் கேட்டுப் பிராணுயாமத்தில் தலைப்படுவதே அறிவுடைமை. பிராணுயாமத்தின் ஒரு கூருகிய தூய நறுங்காற்றை மூக்கின் வழி நன்ருக ஈர்த்து, நுரை ஈரற் குழல்களில் நிரப்பிச் சுழற்றி, வெளிவிடுவதைப் (Breathing Exercise) பயின்று வந்தால் போதும். நாடோறும் இதைச் செய்து வருவோர்க்கு நோயணுகாது ; ஆயுள் பெருகும்.

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமங் கருக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே.

எனவரூஉந் திருமூலர் திருவாக்கை ஓர்க.

இப்பயிற்சியை நகரங்களில்-சாக்கடை மல அறை முதலியன சூழ்ந்து தீநாற்றம் வீசும் இடங்களில்-செய்தல்கூடாது; நச்சுக் காற்று வீசாத இடங்களில் அமர்ந்து செய்வது நலம். கடலோரம், மலையுச்சி, பரந்தவெளி, காடு முதலிய இடங்கள் இப்பயிற்சிக் குரியன.

நமது நாட்டுப் பெண் மக்கள் பெரிதுங் காற்றுள்ள இடங்களில் வாழ்வதில்லை. அவர்கள் புழுங்கிய அறைகளில் வாழ்கிறார்கள் ; கரிவாயு செறிந்த அடுப்பங்கரையில் உறங்குகிறார்கள். கிராமத்தில் வயல்களில் வேலை செய்யும் பெண் மக்கள் உடல் நிலையையும், நகரங்களில் மாடியில் ஏறி நிற்கும் பெண் மக்கள் உடல் நிலையையும் உற்று நோக்கினால் வேற்றுமை காணலாம். முன்னவர்களிடத்தில் அழகுத் தெய்வம் ஆனந்தத் தாண்டவம் புரிகிறது. பின்னவர் உடலில் பிணியென்னும் பேய் உறங்கிக்கொண்டிருக்கிறது. காரணம் என்னை? அவர்கள் நறுங்காற்று வீசும் வெளியில் வேலை செய்கிறார்கள் ; நறுங்காற்றை நன்றாக முகர்கிறார்கள். இவர்கட்கு அவ்வுணவேது? காப்பி உப்புமா என்னும் நஞ்சல்லவோ இவர்கள் உணவு? அவர்கள் இயற்கைச் செல்வத்தில் புரள்கிறார்கள். இவர்கள் செயற்கைச் 'செல்வத்'தில் கிடக்கிறார்கள். முன்னையது வீடுபேறு; பின்னையது நரகம். இது நிற்க.

பெண் மகள் புழுங்கிய அறையில் சிறைப்பட்டுக் கிடப்பதும், அடுப்பங்கரையில் அடைபட்டுக் கிடப்பதும் தொலைதல் வேண்டும். பெண் மகள், காற்றும் ஒளியும் வீசும் இடங்களில் உலவியும் உறங்கியும் பொழுது போக்குவாளாக ; காற்றை நன்றாக மூக்கின் வழி முகர்ந்து முகர்ந்து விடுவாளாக. அஃது உடலிலுள்ள ஊறுகளைப்போக்கி நலஞ் செய்யும்.

சிறுநீர் :— சிறுநீர் என்பது மூத்திரம். பெண் மக்களிற்பலர், காலத்தில் மலசலங் கழியாது அடக்குதல் உண்டு. அதனால் மலச்சிக்கலும், நீர்கட்டும் நேர்கின்றன. நீர் அடைப்பால் குண்டிக் காய்க்கு ஊறு நிகழும். குண்டிக்கா யெனும் மூத்திரப் பையைத் தூய்மையாக வைத்திருத்தல்வேண்டும். சிறுநீர் அடக்கும் பயிற்சி மிகக் கொடிது! கொடிது! நாடோறும் போதிய நீர் பருகி, வேளைக்குவேளை சிறுநீர் பெய்து கொண்டிருந்தால் நோயணுகாது. பெண்மக்கள் மலசலத்தை அவ்வப்போது கழித்து வருவார்களாக.

பித்தம்:—பித்தச் சுரப்பிற்குப்பிறப்பிடம் (Liver) ஈரல். அவ்வுறுப்பின் இயக்கத்துக்கு எவ்வித இடையூறும் நிகழா முறையில் வாழ்வு நடாத்தல்வேண்டும். அதன் இயக்கங் குன்றினால் முழு உடலுக்குங் கேடு நிகழும். ஒருவரது உடல் நிலை அவரது ஈரல் நிலையைப் பொறுத்து நிற்கிறது. பித்தச் சுரப்புக் குன்றினால் உண்ணும் உணவு சரிப்படுதெப்படி? சரியாமல் உணவு கிடப்பதால் விளைவதென்னை? குருதியோட்டங் குன்றி மற்றக் கருவிகளின் இயக்கமுங் குலையும். ஆதலால், ஈரல் நிலைமீது பெருங் கவலை செலுத்த வேண்டுவது மக்கள் கடமை. காப்பி தேயிலை கொக்கோ முதலிய பொருந்தாப் பானங்கள், கள் முதலிய குடிகள், உறக்கமின்மை, புலால் உணவு முதலியன ஈரல் இயக்கத்தைக் கெடுக்கும்; ஈரலை மலரச்செய்யும்; அதை இடம் விடுத்துப் பெயர்ப்பிக்கும். மேற்கூறிய பானம் முதலியவற்றைக் கனவிலும் மறந்துங்கருதலுங்கூடாது.

நோன்பு : நோன்பைப்பற்றி இந்நூற்கண் சில இடங்களில் சுட்டிச் சுட்டி வருகிறேன். நோன்பு

கொள்ளும் முறையை யாண்டுஞ் சுட்டிக் குறிப்பிட்டே னில்லை. ஆதலால், அது குறித்து ஈண்டுச் சிறிது சொல்கிறேன்.

நோன்பெனினும் விரதமெனினும் ஒக்கும். உலகிலுள்ள எல்லா நாடுகளினும் நமது நாடு நோன்பில் பேர்பெற்றது. விரத மாண்பு கூறாத புராணங்கள் இல்லை என்று கூறலாம். பண்டை மக்கள் நோன்பின் பெற்றியைச் செவ்வனே யுணர்ந்து வாழ்ந்தார்கள். பெரிதும் பெண்மக்கள் நோன்பில் ஈடுபட்டு வந்தார்கள் என்பதைச் சொல்லவேண்டுவதில்லை. இன்னும் அது பெண் மக்களிடையே நிலவிக்கொண்டிருத்தல் கண்கூடு.

பெண்மக்கள் கடைப்பிடித்தொழுகும் இந்நாளைய 'விரதம்' வெறும் பெயர் அளவினதன்றிப் பொருள் அளவினதன்று. 'விரதம் விரதம்' என்று காலையும் இரவும் விலாப்புடைக்கப் பலகாரங்களைத் தின்று, பகலில் வயிறுகிழிய அறுசுவை உணவுகொண்டு கழிப்பது, விரதத்துக்கு முற்றும் மாறுபட்ட தொன்றென்பதைப் பெண்மக்கள் உணர்வார்களாக.

**இந்நாளைய விரதம்**

விரதம் எற்றுக்கிருப்பது? உடலில் சேரும் பிணியைப் போக்குதற்கு விரதமிருப்பது வழக்கம். விரதத்தால் உள்ளுறுப்புக்கள் சுமை நீங்கப்பெற்று, விடுதலையடைந்து, தத்தங்கடன்களை மகிழ்ச்சியுடன் நிகழ்த்தும். அன்றாடம் உண்ணும் உணவில் சரியாமல் எஞ்சி நிற்கும் நஞ்சையும், பிறவற்றையும் வெளியாக்கும் ஆற்றல் விரதத்துக்கு உண்டு. அவை வெளியாகாமல் உள்ளே

**விரதம் எற்றுக்கு?**

கிடக்குமேல் பலதிற நோய்கள் தோன்றும். மருந் துண்பதால் அந்நோய்கள் சிறிது விடுதலை அடையும். மீண்டும் பழையபடியே அவை உயிர்த்தெழும். பொருந்தா மருந்துகள் வேறு கேடுகளையும் நிகழ்த்தும். ஆதலால், மருந்துண்பதினும் விரதத்தால் உறுப்புக் களுக்குற்றுள்ள பிணிபோக்கி நோய் கழிப்பது நலன்.

அவரவர் உடல் நிலைக்கேற்ற வண்ணம், வாரத் திலோ மாதத்திலோ, ஒரு நாளோ இருநாளோ, இன் னுஞ் சில நாளோ கணித்துக்கொண்டு விரதமிருக்க முயலல் வேண்டும். விரதத்துக்கு முன்னுட்பகல் உண்டு கழித்த பின்னர் அன்றிரவு எவ்வித உணவும் உண்ணலாகாது. நீர் அருந்துவது நலம். அடுத்த நாள் வைகறைத் துயி லெழுந்து காலைக்கடனை முடித்துக் கொள்ளல் வேண் டும். காலைக்கடனில் மலஞ் செவ்வனே கழியா தொழியு மேல், எனிமாவால் மலத்தை முற்றும் போக்கல் வேண்டும். பின்னர் நீராடி, அமைதியும் - காற்றும் - ஞாயிற்றொளியும் - நிலவிப் படரத்தக்க ஓரிடத்தில் அமர்ந்து, அன்பு வடிவான கடவுளை நினைந்திருத்தல் வேண்டும். அடிக்கடி - நெஞ்சு வறட்சியுண்டாகும் போதெல்லாம் - ஒருவித சிறு மயக்கம், இளைப்பு, களைப்பு தோன்றும் போதெல்லாம் - சிறிது சிறிதாக நீர் அருந்திக் கொண்டிருத்தல்வேண்டும். நீரருந்தாது விரதமிருப்போர்க்கு, வெஞ்சுரம், இரத்தக் கழிவு முதலியன தோன்றும். உள்ளுறுப்புக்கள் வறண்டு போகும். பலதிற இன்னல் விளையும். ஆதலால், நீரருந்துதல் பெரிதுங் கவனிக்கப்படல் வேண்டும். நீருடன் சிறிது உப்புச் சேர்த்துக்கொள்வது நலன்.

விரதமுறை

விரத காலத்தில் நோன்பினர் எவருடனும் பேசுத லாகாது; உள்ளத்தில் பொறாமை வெகுளி முதலிய எரிகள் எக்காரணம் பற்றியும் உறுதல் கூடாது. அவை யுறுத்தும் எதன் கண்ணும் அவர் ஈடுபடுதலாகாது. அவ்வெரி, விரதத்தைக் குலைத்து, உடலுக்கும் ஊறு செய்யும்.

நாள் முழுவதும் நீர் அருந்தி, நோன்பிருந்து, மறுநாள் காலையில் எழுந்து, வழக்கம்போலக் கடன்களை முடித்தல் வேண்டும். முன்னாள் உணவு கொள்ளாமையால் மலம் வாராமை கண்டு வாளா இருத்தல் கூடாது. எனிமா உபயோகித்தால் அழுக்குகள் வந்து விழுவது காணலாம்.

நோயாளர்கள் இந்நோன்பை இம்முறைப்படி பல நாள் தொடர்ந்து கடைப்பிடித் தொழுகலாம். நோயில்லார் வாரத்துக் கொருநாள் அல்லது திங்கட் கொரு நாள் நோன்பிருத்தல் சாலும்.

நோன்பு கழித்து, உணவுகொள்ளப் புகும்போது, மிக எச்சரிக்கையா யிருத்தல் வேண்டும். திடீரெனக் கடினமான உணவு கொள்வது மடமை. நோன்பு கண்ட உறுப்புக்களில் திடீரெனச் சோறும் - காய் கறிகளும் - கிழங்குகளும் - விழுதல், அவ்வுறுப்புக்களின் கடமைகளைக் கட்டுப்படுத்தி நோய் செய்யும். ஆதலால், படிப் படியாக உணவைப் பெருக்கல் நலன். நீர் அருந்திப், பின்னைப் பழரசமருந்தி, பின்னை நீர்மோர் அருந்தி, பின்னை நீர் கலந்த பாலருந்தி, பின்னைக் கஞ்சிபோன்ற உணவருந்தி, வழக்க உணவு கொள்வது பொருத்தம்.

நோன்பு வாயிலாக உடலைச் செம்மை வழியில் ஓம்பி வரலாம். நோன்பிற்குப் போதகாசிரியர் வேண்

டுவதில்லை. இரண்டொரு முறை பயிற்சி செய்வோர்க்கு

**குரு இயற்கை**

இயற்கை அன்னையே வழிகாட்டுங் குருவாகிறாள். இஃது அநுபவத்தில் உணரக் கிடப்பது.

நல்வழியில் உடலோம்பி நலனுற்று வாழ்வதே பெண்மக்களுக்கு அழகு. நோயிலா ஒன்றே பெண்மை என்பது. பெண்மையில் நோய் நுழைவது பெண்மைக் குரிய தாய்மையைக் கெடுப்பதாகும். பெண்மக்கள் கருவுயிர்க்கும் பேறுடையராகலின், அவர்கள் ஆண் மக்களினும் உடல் நலனைப் பெரிதுங் கருதல்வேண்டும். ஆண்மக்களும் பெண்மக்கள் உடல்நலன்மீது கருத்தை யிருத்தல் வேண்டும். பெண்மகள் கருவுற்றுள்ள போதும் கருவுயிர்க்கும் போதும் எவ்வளவோ ஜீவ சத்துக்கள் குறைகின்றன. அவைகளுக்கு ஈடு செய்யும் முறையில் பெண்ணுடல் ஓம்பப்படுதல் வேண்டும். 'கர்ப்பத்தான் மங்கையர்க்கு அழகு குன்றும்' என்று நம்மவர்கள் பாடுவது வழக்கம். அவ்வழக்கைப் பொய்ப் படுத்தல் வேண்டும். கருவுயிர்த்த பின்னரும் பெண்மக்கள் கன்னிக் காட்சியையே வழங்கும் நிலையில் இயற்கை வாழ்வு நடாத்தல் வேண்டும். அழகு என்னுந் தெய்வம் பெண்மக்களை விடுத்து என்றும் அகலலாகாது. அவர்கள் மார்பு திரட்சி அவர்கள் உடல்நலனுக்கு அறிகுறி. அது கெடாதவாறு பெண் வாழ்வு உலகில் நடப்பதாக.

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டானென்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே. —**திருமூலர்.**

# ௧௧. பதியிலார்



[பெண்ணுலகின் கறை - பதியிலாருள்பிரிவு - பதியிலார் வரலாறு - புராணம் - சரித்திரம் - தேவடியாள் தாசிப் பெயர் விளக்கம் - தாசி வேசையானது - கோயிலில் கூடாவொழுக்கம் - ஆண்மக்கள் கடமை - குலப்பெண்டிர் கடமை - பொருட்பெண்டிர் இன்பம் இன்பமாகாது - அன்பிலாக்கலவியால் இருபாலார்க்குங் கேடு - பதியின்றி வாழ்தலிலுள்ள கேடுகள் - ஒருவனுடன் வாழ்வு - வைப்பாட்டியாயிருத்தலுங்கூடாது - பதியிலாரின் உடலைத் தூய்மைப்படுத்தல் - ஒருத்தியுடன் வாழும் நோன்பு - மகாத்மா காந்தியின் பொன்னுரைகள் - திருவள்ளுவர் கருத்து - செல்வர்களால் பெண்ணுலகங் கெடல் - இயற்கை இறை நோக்கம்.]

புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
விதுப்புற நாடின் வேறல்ல—புதுப்புனலும்
மாரி அறவே அறுமே அவரன்பும்
வாரி அறவே அறும். —நாலடியார்

பெண்ணுலகம் ஒரு தெய்விக உலகம். அதன் கண்ணும் ஒரு கறை படிந்திருக்கிறது. அக்கறை பொழியும் நாள் எந்நாளோ தெரியவில்லை. ஆணுலகம் தூய்மையுறுநாளே அந்நன்னாளென்க.

பெண்ணுலகில் படிந்துள்ள அக்கறை யாது? அக்கறை பதியிலார் கூட்டமென்பது. பதியிலார் யாவர்? பதியில்லாத அனைவரையும் பதியிலார் என்று உலகம் அழைக்கிறதோ? இல்லை. நோயாளர் பலர், பேடிகள், படைப்பில் சில குறைபாடுடைய பலர் முதலியோர்

பதியின்றி வாழ்கிறார். அவரைப் பதியிலார் என்று உலகம் உரைப்பதில்லை. பின்னை எவர்க்கு உலகம் பதியிலார் என்னும் பட்டஞ் சூட்டியிருக்கிறது? குறிப்பிட்ட பதி அதாவது நாயகன் இன்றிப் பலருடன்கூடிப் போதுபோக்கும் பெண்ணினத்தார்க்கு உலகம் அப்பட்டஞ் சூட்டியிருக்கிறது. பதியிலார்க்குப் பொதுமகளிர், வரைவின் மகளிர், கணிகையர், வேசையர் முதலிய பெயர்களும் வழங்கி வருகின்றன.

வயிற்றுப் பிழைப்புக்கென மானம் விற்கும் பதியிலாக் கூட்டம்போக, வேறு பதியிலாக் கூட்டங்களும் உண்டு. அக்கூட்டத்தார் நற்குடியிற் பிறந்தவராகவும், செல்வ முடையவராகவும், கல்வி யுடையவராகவும், உயர் பதவியிலுள்ளவராகவும் இருக்கிறார். அன்னார், தற்கால நாகரிகக் கள்ளுண்ட மயக்கால் பதியிலாராகிறார். சில பெண் மக்கள் பல காரணம் பற்றித் திருமண வாழ்வு ஏலாது, வேட்கை மீதூரும்போது, சிலருடன் கூடி விளையாடிக் களிக்கிறார்கள். ஒருவேளை கருவுறுமேல் சிறிதும் இரக்கமின்றி அவர்கள் அக்கருவைச் சிதைக்கிறார்கள். அக்கூட்டத்தாரும் அவரனைய பிறரும் பதியிலார் இனத்திற் சேர்ந்தவரே யாவர்.

பதியிலாருள் பிரிவு

இப்பதியிலாக் கூட்டம் உலகில் யாண்டும் இருக்கிறது. இக்கூட்டமில்லா இடமேயில்லை. எந்நாட்டிலும் எவ்வூரிலும் இச்சேனைகளைக் காணலாம்; எல்லா வகுப்பிலும் இக்குழுவின ரிருக்கிறார்; நமது நாட்டிலும் இக்கூட்டத்தாருளர்.

அங்ஙனமாக, நமது நாட்டில் ஒரு சாதியார்க்கு மட்டும் பதியிலார் என்னும் பெயர் வழங்கப்பட்டு வரு

கிறது. நமது நாட்டில் பிறப்பை யொட்டிச் சாதிகள் வகுக்கப் பட்டமையான், இவ்விழி தொழிலுக்கும் பிறப்பை யொட்டி ஒருசாதி வகுக்கப்பட்டது போலும்! என்ன கொடுமை!

பிறப்புவழிச் சாதி

நீண்டகாலப் பழக்கத்தால் அச்சாதியாரும் தமது இழிவை யுணராது வாழ்கிறார். வேசைத் தொழிலும் வழி வழியாக நடந்து வருகிறது. வேளாளன் பிள்ளை வேளாளனுகக்கொள்ளப்படுவதுபோல, வேசியின் பெண்ணும் வேசியாகவே கொள்ளப்படுகிறாள். இது நாட்டின் சிறுமையைப் புலப்படுத்துகிறது. பிறப்புவழிச் சாதி கொள்ளும் முறை என்றோ தொலையும்?

இச்சாதிப் பதியிலாரைப் பற்றிப் பலப் பல கதைகள் புராணங்களில் சொல்லப்படுகின்றன. சரித்திர முறையிலுஞ் சில வரலாறுகள் சொல்லப் படுகின்றன. மற்றக் குலத்தார்க்கு வரலாறுகள் புனையப்பட்டது போல, இக்குலத்தார்க்குஞ் சில வரலாறுகள் புனையப் பட்டன போலும்! இவையாவும் சாத்திரம், புராணம், கலை என்னும் பெயர்களால் நாட்டிடை உலவிக் கொண்டிருக்கின்றன.

புராணம்

புராணங்களில் சாதிப் பதியிலார்க்குத் தோற்றுவாய் கூறப்பட்டிருக்கிறது. அன்னார் தெய்வத் தோற்றுவா யுடையாரென்றும், அவ்வினத்தார் ஒவ்வொரு குடும்பத்தினின்றும் ஒவ்வொரு பெண்ணைக் கடவுள் பணிக்கென அர்ப்பணஞ் செய்ய வேண்டுமென்னும் வரமுடையாரென்றும், அப் பெண் மக்கள் கடவுள் ஒருவரையே பதியாக் கொண்டு

ஏனையோரைப் பதியாக் கொள்ளாமையால், அவர்கள் பதியிலார் என்று அழைக்கப்பட்டார்களென்றும், நாளடைவில் அவர்களிடைக் கூடா வொழுக்கம் நுழைந்து விட்டதென்றுஞ் சொல்லப்படுகின்றன.

சரித்திரம்

கிரீஸ் தேசத்தில் கோயில்களிலும், அரண்மனைகளிலும் பதியிலாப் பெண் மக்கள் முறையே பணியாளர்களாகவும் தோழிமார்களாகவும் தொண்டு செய்து வந்தார்களென்றும், அவர்களிற் சிலர் இந்திய மன்னர்களால் வரவழைக்கப் பட்டனர் என்றும்,அவர்வழித்தோன்றிய கூட்டத்தாரே பதியிலார் என்றுஞ் சரித்திரக்காரர் சிலர் சொல்கிறார்.

பதியிலார் வரலாற்றைப் பற்றிய ஆராய்ச்சி ஈண்டு வேண்டுவதில்லை. பதியிலார் என்றொரு கூட்டம் நாட்டில் இருத்தல் உண்மை. அன்னார் இன்னும் கோயில் பணி செய்தலைக் கொண்டும், இழிதொழில் நிகழ்த்தலைக் கொண்டும், மேற்போந்த கதைக் குறிப்புக்களைக் கொண்டும் வரலாற்றை ஒருவாறு ஊகஞ் செய்யலாம்.

ஒரு காலத்தில் திருமண வாழ்விற்கு உரியரல்லாத சில பெண்மக்கள் அரண்மனைகளில் தொண்டு செய்து காலங் கழித்து வந்தார்களென்பது தெரிகிறது. பண்டை நூல்களில் வேலைக்காரிக்குக் 'கூனி' என்னும் ஒருபெயர் வழங்கியிருத்தல் காண்கிறோம். அரண்மனை வேலையை விரும்பாத வேறு சிலர், ஆண்டவன் கோயில்

தேவடியாள்
தாசி

களில் தொண்டாற்றப் புகுந்திருப்பர். அவருடன் வேறு சில ஊனமில்லாப் பெண்மணிகளுஞ் சேர்ந்து ஆண்டவன் அருள்பெறப் பணியாற்றி யிருப்பர். இப்பழக்கத்தால்

கோயிலில் சில தொண்டுகள் பெண் மக்களுக்கென ஏற் பட்டிருக்கும். அத்தொண்டாற்றி வந்த பெண்மக்கள் 'தேவடியாள்' 'தாசி' என்று அழைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இஃது அச்சொற்களின் ஆட்சியால் நன்கு விளங்குகிறது. தேவனுக்குப் பணி செய்யும் ஆடவன், தேவடியான் - தாசன் - ஆகிறான்; அப்பணி புரியும் மகளிர், தேவடியாள் - தாசி - ஆகிறாள்.

**தாசி வேசையானது**

ஆண்டவன் பணிக்கென வாழ்வு நடாத்தி வந்த பெண்ணன்பர்கள், கோயில் அர்ச்சகர், தர்மகர்த்தர் முத லியவர்களோடு பழகல்நேர்ந்தது. இப்பழக்கம் நாளடை வில் கூடா வொழுக்கத்தைக் கூட்டலாயிற்று. அன்று கோயில் தலைவர்களாக இருந்த ஆண் மக்கள் நிகழ்த்திய அடாத செயல், இன்று பெண்ணுலகையே கறைப்படு த்தியிருக்கிறது. தேவனுக்கு அடிமை பூண்டோர், மற்ற வர்க்கும் அடிமை பூண நேர்ந்தமையால், 'தேவடியாள்' 'தாசி' என்னும் பெயர்கள் இழிபொருள் ஏற்கலாயின. இப்பொழுது அச்சொற்கள் குலமகளிரில் கடவுள் அடி யவர்க்கு வழங்குவதில்லை. அவை விலை மகளிர்க்கே வழங்கி வருகின்றன. தொன்று தொட்டு வரூஉம் வழக் கத்தால் அவ்வினத்தார் ஆண்டவன் பெயரால் பொட் டுக்கட்டி மானம் விற்கும் விலைமகளிராகிறார். இப்பழக்கம் நாட்டை விடுத்து அகலல்வேண்டும்.

இவ்விலைமகளிர்கள், தேவடியாள் என்னும் பெய ரால், இழிதொழிலுக்கெனப் பட்டாடை சுற்றி, அலங் கோல அணியணிந்து, ஆடும் ஆட்டமும் பாடும்பாட்

டும் வெறுக்கத்தக்கன. ஒழுக்கத்துக்கு நிலைக்களனு

**கோயிலில் கூடா வொழுக்கம்**

யிருக்கவேண்டிய திருக்கோயில், கூடா வொழுக்கத்துக்குநிலைக்களனாய் ஊரைக் கெடுப்பதாய் விட்டது. தாய்மை என்னும் பேறு பெற்றுத் தெய்வநிலை எய்தற்குப் போந்த பெண் வடிவம், தீச்சேர்க்கையால் தன்னிலை மறந்து, மானம் விற்றுப், பொருளீட்டுங் குறிக்கொண்டு ஆடுகிறது; பாடுகிறது. அக்காட்சி கண்டு களிக்கும் மக்கள் மக்களா? நாட்டிற் பிறந்தவர்களா? அவர்கள் பெண்ணுடன் பிறக்க வில்லையா? பெண்ணுடன் வாழவில்லையா? அவர்கள் உள்ளத்தில், 'ஆடுகின்றவள் பெண்; பாடுகின்றவள் பெண். இவள் எற்றுக்கு இக்கோலத்தோடு ஆடுகிறாள்? பாடுகிறாள்? நமது பேதைப் பொருள் பறிக்க வேண்டும் என்னும் நோக்குடன் அன்றோ? நமது வீட்டுச் சகோதரிக்கும் இவளுக்கும் என்ன வேற்றுமை?'' என்னும் எண்ணம் உறல்வேண்டாமா? உற்றால் அவள் நல்வழிப்படுவாள்.

பாரத நாட்டிற் பிறந்த ஆண்மக்களே! மானம் விற்றலுக்கெனப் பிறப்பில் ஒரு சாதி நமது நாட்டில் ஏற்பட்டுள்ள இழிவை நினையுங்கள்; கோயில்களில் கூடா வொழுக்கம் பெருகுவதை நோக்குங்கள்; தீயொழுக்கத்தால் நாட்டுக்கு நாசமுண்டு என்பதை உன்னுங்கள்; கூடா வொழுக்கத்தால் பின்வரும் உலகம் மெலிவதை எண்ணுங்கள். பெண் பிறவி நோக்கம் மானம் விற்றுப் பிழைப்பதா? நமது நாட்டிற் பிறந்த சகோதரிகள் வயிற்றுக்கு மானத்தையா விற்றல் வேண்டும்? இழிவு! இழிவு! விலங்குகளும் வயிற்றுக்கென மானம் விற்ப

தில்லையே! நமது நாட்டிற் பிறந்த பெண் தெய்வங்கள் பிழைப்புக்கென மானம் விற்றல் என்ன இழிவு! இழிவு!

இழிவு யாருடையது? நாட்டிற் பிறந்த ஆண் மக்களுடையதன்றோ? நீண்ட நாள் பழக்கத்தால்-அறியாமையால்-அப்பெண்மணிகள் அவ்விழி தொழிலில் இறங்குகிறார்கள்; அதற்கு ஆண்மக்கள் ஏன் உடன்படல் வேண்டும்? ஆண் மக்களிடை ஒழுக்கநிலை காக்கப்படுமேல், பெண்ணுலகில் இழிவேது? ஆதலால், ஆண்மக்களே! பெண்ணுலகை இழிவுபடுத்த முன்னாதேயுங்கள்; பதியிலாப் பெண்மக்கட்குப் பெண்மையின் நோக்கத்தை அறிவுறுத்துங்கள்; கூடா வொழுக்கத்தால் விளையுங் கேடுகளை அவர்கட்கு உணர்த்துங்கள்; உண்மை விளங்கப் பெறுவரேல் அவர்கள் பதியிலாராக வாழ மனங் கொள்ளார்கள்; அவர்களைப் பதியுடையராகச் செய்யுங்கள்; இதனினுஞ் சிறந்த ஒரு தொண்டு உண்டுகொல்! இது பெருந் தேசத்தொண்டு; தெய்வத் தொண்டு. இத் தொண்டாற்ற முந்துங்கள்.

இழிவு யாருடையது?

நாட்டிற் பிறந்த குலப்பெண்டிர்காள்! ஆடுகிறவர் யார்? பாடுகிறவர் யார்? பதியின்றி வாழ்வோர் யார்? உங்கள் இனத்தவரல்லவா? உங்கள் நாட்டிற் பிறந்த சகோதரிகளல்லவா? உங்கள் உலகு எனில், அவ்வுலகில் அவர்களும் அடங்கவில்லையா? அக்கறை உங்கள் உலகையுங் கெடுக்கவில்லையா? அவர்களை நல் வழியில் திருப்ப வேண்டுவது உங்கள் கடமையன்றோ? தாயாகிய நீங்களல்லவா நாட்டைத் தூய்மைப்படுத்தல் வேண்டும்? பதியிலார் உள்ள மட்டும் உங்கள்

வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகள் எங்ஙனந் தூயராவார்கள்? பெற்ற பிள்ளைகளை நல்லவர்களாக்க நாட்டில் பதியிலாரை ஒழுங்குபடுத்த வேண்டுமல்லவா? சகோதர உரிமைகொண்டு - இன உரிமை கொண்டு - வழுக்கி வீழ்ந்த சகோதரிகளைத் தூக்கி விடுங்கள்.

பதியிலார் என்னுங் குலத்தவர் மட்டும் இப்பொழுது விலைமகளிராகிறாரில்லை. வேறு பல குலத்தினின்றும் பல காரணங்களால் ஒதுக்கப்பட்ட சகோதரிகளும் விலைமகளிராகிறார்கள். நாளுக்கு நாள் விலைமகளிர் கூட்டம் பெருகுகிறது. அத்தொழிற்கென வீடுகள் - விடுதிகள் - வாணிபங்கள் - தரகுகள் - முதலியன ஏற்பட்டிருக்கின்றன. இதற்கு வறுமை ஒரு காரணம்; பொதுவாக நாட்டில், சிறப்பாக ஹிந்து மதத்தில், பெண்ணுலகிற்கு ஏற்பட்டுள்ள கட்டுப்பாடுகள் மற்றொரு காரணம்; தற்கால நாகரிகம் இன்னொரு காரணம். வேறு சில காரணங்களுமுண்டு.

விலைமகளிர் கூட்டப் பெருக்கம்

கூடா வொழுக்கத்தால் விளையுங் கேடுகளைப்பற்றி இந்நூலில் பல இடங்களில் பேசி வருகிறேன். அது குறித்து ஈண்டுஞ் சில மொழி பகர்கிறேன்.

முதலாவது கூடாவொழுக்கத்தால் உடலுக்குக் கேடு உண்டு என்பது உன்னற்பாலது.

உற்ற வயதில் ஒருத்தியும் ஒருவனும் சேர்ந்து வாழல் வேண்டும் என்பதற்குச் சொல்லப்படுங் காரணங்களுள் உடல் நலன் பேணுவதும் ஒன்று. விபசாரத்தால் அந்நலன் நேர்வதில்லை. நலனுக்குப் பதிலாகக் கேடு நிகழ்கிறது.

உடல் நலனுக்கு ஊற்றாயிருப்பது இன்பம். அவ்வின்பம் அன்புள்ள இடத்தில் பிறக்கும். பொருட் பெண்டிரிடத்தில் அன்பு உண்டா? அவர் கருத்துப் பொருளிலேயே பதிந்து கிடக்கிறது. பொருளுக்கு மானம் விற்றலை அன்னார் தொழிலாகக் கொண்டிருக்கிறார். பொருளில் படியுங் கருத்து, அன்பில் எங்ஙனம் படியும் ?

**பொருட் பெண்டிர் இன்பம் இன்பமாகாது**

அன்பில்லா ரிடத்தில் கூடுவது, செயற்கை முறையென்பது, முன்னர் ஈரிடத்தில் குறிக்கப் பெற்றிருக்கிறது. ஈண்டு மீண்டும் அதனை வலியுறுத்துகிறேன்.

ஒருவன் ஒருத்தியுடன் கூடும்போது, அதன் பயனாக அவனது சுக்கிலம் அவள் கருவில் நுழைகிறது. அச்சுக்கிலச் செலவை ஈடு செய்ய அவளிடத்திருந்து ஏதாயினும் ஒன்று அவனுள் நுழைதல் வேண்டும். அப்படி ஒன்றுண்டா ? உண்டு. அஃதென்னை ? அஃது உடலையோம்பும் ஒருவித சத்து. அச்சத்து எல்லாரிடத்தும் எப்பொழுதும் கூடும்போதெல்லாந் தோன்றாது. ஈருயிரை ஒன்றுபடுத்திப் பிணித்துள்ள அன்பு காரணமாக அச்சத்துப் பிறக்கும். அன்பில்லா இடத்தில் அது பிறவாது.

விலைமகளிர் உள்ளம் பொருளில் படிந்து கிடக்குமா? அல்லது அன்பில் படிந்து கிடக்குமா ? சொல்ல வேண்டுவதில்லை. ஒருத்தியின் உள்ளத்தூறும் அன்பு, கலவியின் போது, கருப்பையின் இன்பச்சினையுறுப்புக்களின் நுனிகளைக் கிளர்ந்தெழுப்பும். அவ்வெழுச்சியினின்றும் பிறப்பது அச் சத்து. அஃது உடலை வளர்க்

கும் அமிழ்தம் போன்றது. அச் சத்து, பொருட் பெண்டிரிடத்தில் தோன்ருது. அதனுல் கலந்த கலப்பு இயற்கையின் பாற்பட்டதாகாது. அது செயற்கையின் பாற்பட்டதாகிறது. அதற்கும்*, முஷ்டி மைதுனம் போன்ற செயற்கை முறைகட்கும் என்ன வேற்றுமை? ஒரு வேற்றுமையுமில்லை. இந்நுட்ப முணர்ந்தே ஆசிரியர் திருவள்ளுவஞர்,

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று.

என்றும்,

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழும் அளறு.

என்றும்,

உலகிற்கு அறிவுறுத்தியிருத்தல் காண்க.

---

* "They must understand that the life-giving fluid called the semen, which is produced in the creative organs of the man, is of great value in the upbuilding of his own body. It is only within comparatively recent times that the marvellous power of this creative fiuid in building up and making over the body of the individual has been thoroughly understood. In sexual intimacies there is a discharge of this creative fluid from the body of the man, but where there is a full response on the part of the wife, there seems to be an exchange of magnetism or energy which makes up for the loss. If, however, his desire alone is active and she is simply fulfilling a supposed wifely duty, she gives nothing to him, and he, therefore, suffers a definite loss in vitality. It is clamied by some that such one-sided intimacies are almost as harmful to the man as **masturbation.** Frequent indulgence upon this basis must result in a loss of vital energy which will deprive the man of the strength and vigor needed for the performance of his life takes.—*B. Macfadden.*

பொருட் பெண்டிர் கலவியால் உடல் நலன் இல்லை என்பது கருதற்பாலது. இந்நலக்கேடு பெண்டிர்க்கும் உண்டோ எனில், உண்டு என்க. கலவியில் அமிழ்தச் சத்துப் பிறவாமையால், அவளுக்கு உறுப்புக்களில் வெம்மை எழுந்து நாளடைவில் அவளை நோய்வாய்ப் படுத்தும். ஆதலால், அவளுக்குங் கேடு உண்டென்க.

**இருபாலார்க்குங் கேடு**

பொருட்பெண்டிர் கூட்டுறவால் உடல் நலன் கூடாதொழியினும், வேறு பல கேடுகள் விளையாமலிருந் தால் போதும். இயற்கைக்கு மாறுபட்ட விபசாரத்தால் கேடு இல்லாமல் எங்ஙனமிருத்தல் முடியும்? கோணிய வழியில் புகுவோரை இயற்கை அன்னை வாளாவிடுவளோ? விடாள்! விடாள்! ஒறுத்தே தீர்வள். உடலோம்பும் அமிழ்தம் போன்ற சத்துக்குப் பதிலாக வெம்மை எழுகிறது என்பது மேலே சொல்லப்பட்டது. அவ்வெம்மை காமவெறியனுள் நுழைகிறது. அவ்வெம்மை முதிர்ந்து முதிர்ந்து எரியாய் வெள்ளையாய்க் கொறுக்காய் மேகரணமாய் 'ஐய'னை அரிக்கத் தொடங்குகிறது. பொருட்பெண்டிர் இன்பம் அப்பொழுது 'ஐய'னுக்குப் புலனாகிறது. அவளுக்கும் நாளடைவில் நோய்த்துயர்மிகும். பதியிலார் கதி இவ்வாறாக முடிகிறது!

**நோயேரி**

இன்னுஞ் சில கேடுகளும் உண்டு. இருவர்க்கும் மன அமைதி கிடையாது. பதியிலா ஒருத்திமீது எத்தனை பேர் கருத்துப் பதியும்? ஒவ்வொருவருந் தத்தங் கருத்து முற்றுறப் போதரும் போழ்து, எத்தனைப் பொறாமை போர் பிணக்கு முதலியன நிகழ்கின்றன;

**வேறுசில கேடுகள்**

கொலைகளும் தற்கொலைகளும் நிகழ்கின்றன. சில மூர்க்கர்கள் பதியிலாப் பெண்டிரை எவ்வெவ்வழியில் அலைக்கிறார்கள்! இவ்வளவு துன்பம் எற்றுக்கு? ஒருவனுடன் வாழும் வாழ்க்கையில் இத்துன்பம் உண்டோ? திருமணஞ்செய்து ஒருவனுடன் வாழும் ஒருத்தியின் மீது, மற்ற ஆடவர் மனம் பெரிதுஞ் செல்வதில்லை. பதியிலாப் பெண்ணின் மீது பலர் நாட்டங் கொள்கிறார். பதியின்றி வாழ்தல், பலதிற இடுக்கண்களுக்குக் காரணமாக இருக்கிறது.

விபசாரத்தில் மூழ்குவோர் உடலுரம் இழக்கின்றமையால் அடிக்கடி போகம் விரும்புவர். அப்போகத்துக்குப் போதிய உடலுரம் இன்மையால் போலி எழுச்சி பெறவேண்டி மதுபானஞ் செய்யல் நேர்கிறது; புளிகார மிகுந்த புலால் உணவு உண்ணல் நேர்கிறது; கொடிய மருந்துண்ணல் நேர்கிறது.

முடிவில் பொருளெலாம் போய், ஆண்டன்மையும் இழந்து, நோயெரியால் வெந்து, நரகத்துன்பம் அடைகிறான் 'ஐயன்' பாவம்! பதியிலாப் பெண்டிர் நிலையும் இவ்வாறே முடிகிறது! இவ்வாறு சாதலா பிறவி நோக்கம்?

விபசாரக்காரர் முடிவு இவ்வளவில் தொலைவதில்லை. இவர்கள் நோயும் பிறவும் இவர்கள் வழி வழி உலகிடைப் பரவி வளரும். பதியிலா வாழ்வால் உலகிற்கு எவ்வளவு கேடு!

கூடாவொழுக்கத்தார்க்குப் பிறக்கும் பிள்ளைகள் தங்கள் தாய் தந்தையர்கள் பெயர்களையுஞ் சொல்லக் கூசுகிறார்கள். தாய் தந்தையர்கள் மதியீனம் மைந்தர்

மதிப்பையும் போக்குகிறது. தாய் தந்தையர் அறியாமைக்கு மைந்தர் என் செய்வார்?

பதியிலாக் குலத்தில் சில நல்லோர் இருக்கிறார். அவர் ஒருவனுடன் காலங்கழிக்கிறார். அவ்வொருவன் வேறொரு மனைவி இல்லாதவனா யிருத்தல் வேண்டும். அப்பொழுது அவன் அவளுக்குக் காதல் தலைவனாகிறான். அவனுடன் வாழும் ஒருத்தியைப் பதியிலார் உலகில் சேர்ப்பது அறியாமை. சாதிப் பேய்கள் அவளை என்ன கூறினுங் கூறுக. அவள் இயற்கைச் செந்நெறியில் நின்று வாழ்வு நடாத்தும் நங்கையாகிறாள். உலகின் பொருட்டு அவ்விருவரும் வெளிப்படையாகத் திருமணஞ் செய்து கொள்வது நலம். அதற்குரிய அஞ்சா நெஞ்சம் ஆண் மகனுக்குத் தேவை. சாதிப் பேயை ஓட்டுதற்குரிய வழிகளுள் இஃதொன்று.

**ஒருவனுடன் வாழல்**

பதியிலார் குலத்திற் பிறந்த சிலர், முன்னோர் உரிமைப் பொருளுடையவரா யிருக்கிறார்; சிலர் இசை பாடியும் நாட்டியம் ஆடியும் பெரும் பொருளீட்டுகிறார். இவர்கள் பொருள் கருதிப் பிறரிடம் இழிதொழிலில் இறங்குகிறார்களில்லை. இன்பத்துக்கென இவர்கள் ஒவ்வொருவர் ஒவ்வொருவனுடன் கலக்கிறார். அவனையன்றி மற்றவரைக் கனவிலும் இவர் கருதுவதில்லை. இது போற்றற்குரிய தாயினும் இச்செயலிலும் ஒரு குறைபாடுளது.

**வைப்பாட்டியா யிருத்தலுங் கூடாது**

இன்ப நாயகனுக்கென மணஞ் செய்த மனைவி மற்றொருத்தி இருக்கிறாள். மனைவியுடைய ஒருவனுடன்

கூடி வாழ்வதால் இவர்கட்குப் பதியிலார் பெயர் ஒழியாமலிருக்கிறது. அவனும் இவர்களை 'வைப்பாட்டி' என்றே சொல்லிக் கொள்வான். ஆதலால், இவர்கள் பதியிலார் என்னும் பழிபோக்க, மனைவியுடன் வாழும் ஒருவனுடனும் கூடுதலை ஒழித்து, வேறு எவரையும் மணம் புரியாத ஒருவனை மணஞ்செய்து கொள்வதே அறம். மனைவியுடன் வாழும் ஒருவனது சேர்க்கையை இவர்கள் விரும்புதலாகாது.

பெண்ணுலகில் பதியிலார் என்றொரு கூட்டம் இருத்தல் இழுக்கு. அதினும் அதற்கென ஒரு சாதியார் ஒதுக்கப்பட்டிருத்தல் பேரிழுக்கு. இவ்விழுக்கைப் போக்க அறிஞர் முயலல் வேண்டும்.

இழிதொழிலுக்கெனக் குறிக்கப்படுஞ் சாதிவழக்கு முதலாவது தொலைதல் வேண்டும். அஃது எப்படித் தொலையும்? அப்பெண் மக்களிடைத் திருமணப் பழக்கம் பரவல் வேண்டும். அவர்கள் வழித்தோன்றும் பெண்மணிகளைத் திருமணஞ் செய்து கொள்ளும் அஞ்சா நெஞ்சம் ஆணுலகம் பெறுதல் வேண்டும். 'பதியிலார் குலத்தில் பெண் கொள்வது இழிவு' என்னும் எண்ணம் உதித்தல் கூடாது. பதியிலார் குலம் என்றொருகுலம் நாட்டிலிருத்தல் நாட்டுக்கு எவ்வளவு இழிவு? எவ்வளவு கேடு? அவ்விழிவையும் கேட்டையும் போக்க வேண்டுவது எவர் கடமை? தேசத்தார் கடமை யன்றோ? அவ்விழிவையும் கேட்டையும் எப்படிப் போக்குவது? வாய்ப்பேச்சாலா? எழுத்தாலா? செயலில் போக்குதல் வேண்டும். அதற்குத் திருமணமன்றி வேறு வழியென்னை?

**பதியிலார் உலகைத் தூய்மைப் படுத்தல்**

பதியிலாருள் ஒரு பெண்ணை மணப்பது இழிவெனக் கருதலாகாது. அங்ஙனங் கருதுபவன் தன்னலத்தனுவன். அன்னுன் நாட்டின் நலத்தை நாடுபவனல்லன். அவ்வினையில் இழிவும் இல்லை; அதன்கண் பெருமையே உண்டு. இழிவாகக் கொள்ளினும், நாட்டின் இழிவைப்போக்க ஒருவன் இழிவு மேற்கொண்டாலென்னை? அஞ்சா நெஞ்சமும், நாட்டினிடத்து மெய்யன்பும், தியாகவுணர்வும் வேண்டற்பாலன. பதியிலாரைத் திருமணஞ் செய்து கொள்ள வெள்கும் மனம், அவர் மாட்டுத் துயில் நீத்துவர வெள்குவதில்லை போலும்! வெட்கம்! வெட்கம்! விபசாரத்துக்குச் சாதியில்லை! மதமில்லை! வெளிப்படையாகத் திருமணஞ் செய்தற்கு மட்டும் சாதியும் மதமும் குறுக்கிடுகின்றன போலும்!

பெண்ணுலகில் பதியிலார் கூட்டம் என்று ஒன்று நிலவுதற்குக் காரணமா யிருப்பது ஆணுலகென்று அடிக்கடி சொல்கிறேன். ஒருத்தியுடன்வாழும் நோன்பு,

ஒருத்தியுடன் வாழும் நோன்பு

ஆணுலகில் நிலவினுல் பதியிலார் கூட்டம் ஏது? ஆண்மக்கள் காமவெறி, பதியிலார் கூட்டமாகப் பரிணமித்திருக்கிறது. பதியிலார் கூட்டத்தால் நேரும் இழிவு பழி பாவங்கட் கெல்லாம் பொறுப்புடையார் ஆண்மக்களேயாவர். இது குறித்து மகாத்மா காந்தி உலகிற்கறிவுறுத்தியுள்ள பொன்னுரைகளுள் சில வருமாறு:—

> பெண்மக்கள் தூய்மைக்கு நாம் காரணராயிருத்தல் வேண்டும்.

> மனிதன்பாலுள்ள விலங்கு, பெண்மக்களைப் பொருட்பெண்டிராக்குகிறது.

காம வேட்கைக்கென ஒரு பெண்மகளை அர்ப்பணஞ் செய்யுங் குணம் நம்பாலுள்ளவரை, ஆண்மக்களாயநாமனை வரும் வெட்கத்தால் தலைகுனிய வேண்டியவரே. கடவுளின் உயரிய படைப்பாகிய பெண்மக்களை நமது காம வேட்கைக்கு இரையாக்கி விலங்காவதைப் பார்க்கிலும் மனிதக் கூட்டமே அழிந்து விடுவது சாலவும் நன்று.

மானமுள்ள இந்தியாவில் ஒவ்வோராண்மகனும் தன்னுடைய சகோதரிபோல் (மற்றப் பெண்மணிகளைப்) பாவித்தால் பெண்மகள் நல்லொழுக்கங் காக்கப்படும்.

இந்திய மக்களை ஒவ்வொருவரும் தமது சகோதரர் அல்லது சகோதரி என்று கொள்ளும் பேராண்மையே சுயராஜ்யம்.

ஒருவன் ஒருத்தியுடனும், ஒருத்தி ஒருவனுடனும் கூடி இன்பவாழ்க்கை நடாத்தல் வேண்டுமென்று இந் நூலில் ஆங்காங்கே வலியுறுத்தி வருகிறேன்; 'பெண்ணுரிமை' யில் 'திருவள்ளுவர் உள்ளம்' என்னும் இடத்திலும் சிறிது கூறியிருக்கிறேன். அதை யொட்டி ஈண்டுஞ் சில உரை பகர விரும்புகிறேன்.

உரிமையில் 'ஆணுக்கு உயர்வு, பெண்ணுக்குத் தாழ்வு' என்பதில்லை. கட்டுப்பாடுகட்கு 'ஆண் அடங்கி நடத்தல் வேண்டுவதில்லை; பெண் மட்டும் அடங்கி நடத்தல்வேண்டும்'என்னும் நியதி இயற்கையில் இல்லை. இயற்கை நிலை இவ்வாறாகச் சில இடங்களில் ஆண்மகன், பல பெண்களை மணக்குங் கொடுமை யாண்டிருந்து பிறந்தது? அக்கொடுமை ஆணுலகத்தினின்றுமே பிறந்திருத்தல் வேண்டும். இது பற்றி முன்னரும் பல இடங்களில் சொல்லியிருக்கிறேன்.

ஒருவன் ஒருத்தியுடன் வாழ்தலே செம்மையறம் என்பதை ஆசிரியர் திருவள்ளுவனார் தமது திருக்குறளில் பல இடங்களில் குறிப்பாகவும், வெளிப்படை

**திருவள்ளுவர்**

யாகவும் விளக்கியிருக்கிறார். 'இல்வாழ்க்கை' என்னும் முதலதிகாரத்தில், 'ஒருவன் ஒருத்தியுடன் வாழ்வதே அறம்' என்னுங் கருத்துப்பட அவர் அருளிய குறள்களில் சில "பெண்ணுரிமை" யில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இன்னுஞ் சில குறட்பாக்கள் வாயிலாக அவரது உள்ளக்கிடக்கையைக் கிளத்த முயல்கிறேன்.

திருக்குறளில் 'பிறனில் விழையாமை' என்றோர் அதிகாரம் இருத்தல் அன்பர்கட்குத் தெரியும். அவ்வதிகாரம், ஒருவன் ஒருத்தியுடன் வாழ்தல் வேண்டுமென்பதையும், மற்றொருத்தியை அவன் நாடுதல் கூடாதென்பதையும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்கச் செய்கிறது. அவ்வதிகாரம் வருமாறு:—

> பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
> தறம்பொருள் கண்டார்க ணில்.
>
> அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
> நின்றாரிற் பேதையா ரில்.
>
> விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
> றீமை புரிந்தொழுகு வார்.
>
> எனைத்துணைய ராயினும் என்னாம் தினைத்துணையுந்
> தேரான் பிறனில் புகல்.
>
> எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
> விளியாது நிற்கும் பழி.

பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்.

அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பில்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.

அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

இவ்வதிகாரத்தில் யாண்டாயினும் ஆண்மகன் பிறமாதரை விழைவது கூறப்பட்டிருக்கிறதா என்பதை அன்பர்கள் உற்றுநோக்குவார்களாக. இவ்வதிகாரம் 'ஒழுக்கமுடைமை' என்னும் அதிகாரத்தைத்தொடர்ந்து நிற்றலுங் கருதற்பாலது. ஒழுக்கத்துறைகளுள் தலையாயது - உயிர்போன்றது - 'பிறனில் விழையாமை' என்பதையன்றோ அத்தொடர்பு அறிவுறுத்துகிறது?

'பிறனில் விழைதல் பாவம்? வரைவின் மகளிரொடு சேர்ந்தால் என்னை?' என்று சிலர் கருதலாம். அஃதும் இயற்கைக்கு மாறுபட்ட மறச்செயலேயாகும். ஒருவன் ஒருத்தியுடன் வாழக் கடமைப்பட்டிருக்கிறானேயன்றி, எக்காரணம்பற்றியும் எம்மாதரையும் நண்ணும் உரிமை அவனுக்கில்லை என்பதே ஆசிரியர் திருவள்ளுவனார் உட்கிடக்கை. அவர் வரைவின்மகளிர் கூட்டுறவையும் கடிந்து கூறியுள்ளது வருமாறு:—

அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொ லிழுக்குத் தரும்.

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று.

பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர்.

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர்.

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழும் அளறு.

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

சிலர் புராணக் கதைகளையும் பிறவற்றையும் காட்டுவர். சில தத்துவ நுட்பங்களைப் பெண்ணாக உருவகப்படுத்திக் கவிகள் பாடியதைப் பொருளாகக் கொள்வது மடமை. அவைகளைக் காட்டி உலகை ஏமாற்றப் புகுவது அறியாமை. ஒருவன் ஒருத்தியுடன் வாழ்தலே அறம்; அறம். 'பல பெண்களை ஒருவன் மணக்கலாம்' என்னுங் கட்டுகள் இனி ஒதுக்கப்படல் வேண்டும்.

'பிறப்பால் பதியிலார்' என்று சொல்லப்படுங் கூட்டத்தின் குறைபாடுகளை நிறைவு செய்தல் அரி

தன்று. உலகில் பொதுவாகவுள்ள பதியிலா விபசாரக் கூட்டத்தை ஒழுங்குபடுத்துவது மிக அரிது. இக்கூட்டம் பெருகுதற்குக் காரணம் வறுமையா யிருத்தலால், அறவோர் ஆங்காங்கே விடுதிச்சாலைகள் அமைத்து, அப்பெண் மணிகட்குச் சோறுகூறை யுதவி, கல்வி கற்பித்து, கைத்தொழில் போதித்து, விரும்புவோர்க்கு மணஞ்செய்து வைப்பது நலம். நாட்டில் செல்வர் பலர் இல்லாமலில்லை. அன்னார் மனம் இத் துறையில் திரும்புதல் வேண்டும். ஏழைப் பெண்மக்கட்கென ஓர் அறச்சாலை அமைப்பது, எத்துணையோ வேறு பல அறச்சாலைகள் நிறுவிய பயனை நல்கும். செல்வர்கள் தங்கள் செல்வத்தை இவ்வறத் துறையில் பயன் படுத்துவார்களாக.

விபசாரக் கூட்டத்தை ஒழுங்கு படுத்தல்

உலகில் செல்வர்களே பல கேட்டிற்குக் காரணர் களா யிருத்தல் கண்கூடு. ஏழைத் தொழிலாளர்கள் உழைப்பால் பெறுஞ் செல்வத்தை முதலாளிகள் பல திறக் களியாடல்களுக்குச் செலவுசெய் தல் பெருந் தவறு. அக்களியாடல் களுள் பலபெண்மக்களைக் கற்பழிக்கும் ஆடல் தலையாயது. இச்செல்வர்கட் குப் பெண் வடிவங்கள் என்னவாகத் தோன்றுகின்றனவோ தெரியவில்லை.

செல்வர் களால் பெண்ணுல கங் கேடல்

பெண் ஒரு களிப்பொருள் என்பது அன்னார் கருத்துப்போலும்! இச்செல்வர்கள் பொருட்டுப் பதி யிலாப் பெண்மக்கள் தங்கள் நிலையை மறந்து, தங்களை ஒரு விலைப்பொருளாகக்கருதி வாழ்கிறார்கள். செல்வர்கள்

கொடுமையால் பெண் மக்களின் தெய்விகமும் கரந்து நிற்கிறது. தெய்வப் பெண்களைப் பேயாக்குஞ் செல்வர்கள் ஆண்டவனைக் காணும் நாளும் உண்டோ? பெண்ணைத் தெய்வமாகப் போற்றும் ஒரு நிலை பெறுவோன் கடவுளைக்காணும் அன்பனுவன்; அருளாளனுவன்.

உலகில் பதியிலார் கூட்டம் என்றொன்று இல்லாதவாறு ஒழிக்க ஆங்காங்கே அன்பும் அறிவும் வாய்ந்த பெரியோர்கள் முயல்வார்களாக. அவர்கள் முயற்சிக்கு இயற்கையும் இறையும் துணை செய்யும். இயற்கை இறையின் நோக்கம் பெண்ணுலகில் பதியிலார் இருத்தல் வேண்டுமென்பதன்று. அச்செயற்கை யொழிய இயற்கை இறையும் துணைபுரியும். உலகில் பதியிலாக் கூட்டம் ஒழிக; ஒழிக. பெண்ணுலகின் கறை அழிக; அழிக. பெண்ணுலகு ஓங்குக; ஓங்குக.

'அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொ லிழுக்குத் தரும்'—திருவள்ளுவர்



## கஉ. கைம்மை

[கைம்பெண் நிலையும் சிறுமைகளும் - குழந்தை மணக் கொடுமை - ஜனகணிதக் குறிப்பு-இந்து மதத்தின் பொறுப்பு - மறுமணம் - சாத்திரம்; கர்மம் - கைம் பெண்களின் துயர் - களையும் வழி.]

திருமணஞ் செய்து கொண்ட ஒருத்தி, தன் கொழுநனைப் பற்றிய ஒரு செய்தியும் பெறாதொழியினும், அல்லது அவள் தலைவன் கொலையுண்டானாயினும் அல்லது இறந்து பட்டானாயினும், அவள் கன்னியா யிருப்பாளாயின், அவளுக்கு மறுமணஞ் செய்து கொள்ளும் உரிமையுண்டு.

—போதாயனர்.

'கைம்மை' என்னுந் தலைப்பிடும்போதே யான் பிறந்த நாட்டின் மீது நாட்டஞ் செல்கிறது. கைம்மை நிலை பெண்ணுலகிற்கும் ஆணுலகிற்கும் பொதுவானது. அந்நிலை வாழ்வில் இருபாலாருள் எவர்க்கேனும் ஒருவர்க்கு உறுமற் போகாது. உலகில் பல இடங்களில் ஆண் கைம்மையரைப் போலவே பெண் கைம்மையரும் வாழ்ந்து வருகிறார். சில இடங்களில் சிறப்பாக நமது நாட்டில் கைம்மை எய்தும் பெண்மக்கட்குப் பலதிறச் சிறுமைகள் உண்டு. நமது நாட்டிற் பொதுவாகப் பெண்ணுலகிற்கே சிறுமை அதிகம். அதிலும் கைம்பெண்களுக்குள்ள சிறுமைகள் சொல்லற்பாலன வல்ல. அச்சிறுமைகள் நினைவி லுறும்போது என்பு நெக்குவிடுகிறது; உள்ளங் குழைகிறது; 'இப்பாழும்

**நாட்டுக் கைம்பெண் நிலை**

நாட்டில் ஏன் பிறந்தோம்' என்று நினைந்து நினைந்து இரங்குதலும் நேர்கிறது.

பெண் கைம்மை எய்தினால் என்ன? ஆண் மகன் அந்நிலை எய்துவதில்லையோ? பெண் மகள் கைம்மை எய்தியதும் அவள்பாலுள்ள இயற்கை உணர்வு ஓடி விடுகிறதோ? உயிர்போய் விடுகிறதோ? கடவுள் மறைந்து விடுகிறாரோ? படைப்பில் என்ன குறைவு ஏற்படுகிறது? அவள் எதிரில் வரக்கூடாதாம்! கூட்டங்களில் போகக் கூடாதாம்! நல்வினைகளில் தலை காட்டக் கூடாதாம்! உடையுணவையும் வெறுத்தல் வேண்டுமாம்! அப்பெண் மூதேவியாய் விட்டாளாம்! கைம்மை எய்திய ஆண் மகனோ எல்லாவற்றிலுங் கலந்து கொள்ளலாம்! அவன் பல்லிழந்த முதியவனாயி னும் பதினாறு வயது கட்டழகியை மணஞ் செய்து கொள்ளலாம்! என்ன வேற்றுமை! இவ்வேற்றுமை இயற்கையில் உள்ளதா? கடவுள் கண்டதா? இஃது இரக்கமிலா வன்கணாளர்கள் இடைக் காலத்தில் விதித்த கொடுமை! கொடுமை!

**குழந்தை மணக் கொடுமை**

நமது நாட்டவரின் அநியாய மென்ன? சிறு குழந்தை - ஓராண்டுக் குழந்தை-அதற்கு மணமென்ன தெரியும்? அப் பச்சிளங் குழவிக்குப் பெண் ஆண்பால் வேற்றுமை யாதல் தெரியுமா? அக்குழந்தைக்குத் திரு மணம்! அது கைம்மை எய்தினால் அதற்குங் கட்டுப்பாடு! அக்குழவி உலகை அறிந்ததா? இல்லையே. அது தாய்மை என்னுஞ் சீரிய நிலையை அடை யாமலன்றோ ஒழிகிறது! இது கடவுள் கருத்தாகுமா?

| 1921 | ஜனத்தொகை | பெண்மக்கள் | கைம் பெண் | கைம்பெண் 1-வயதுமுதல் 15 ,, வரை | திருமண மில்லார் | திருமண மில்லாருள் 30-வயதுக்கு மேற்பட்டவர் |
|---|---|---|---|---|---|---|
| இந்தியா (எல்லாரும்) | 318,942,480 | 154,946,926 | 26,834,838 | 396,556 | 54,841,195 | 783,136 |
| ஹிந்துக்கள் மட்டும் | 216,734,586 | 105,829,124 | 20,218,780 | 329,076 | 35,063,817 | 446,056 |

ஒரு வயது முதல் பதினைந்து வயதுவரை—கைம்பெண்—விவரம்

| வயது | 0—1 | 1—2 | 2—3 | 3—4 | 4—5 | 5—10 | 10—15 |
|---|---|---|---|---|---|---|---|
| இந்தியா | 759 | 612 | 1,600 | 3,475 | 8,693 | 1,02,293 | 2,79,124 |
| ஹிந்து | 597 | 494 | 1,257 | 2,837 | 6,707 | 85,037 | 2,32,147 |

நமது நாட்டில் எத்துணைப் பெண் மக்கள் பால்மண மரு இளங்குழந்தைப் பருவத்தில் கைம்மை எய்தி வருந்திக் கொண்டிருக்கிறார்கள்!

நமது நாட்டின் ஜனகணிதம் (Census Report) நாட்டிலுள்ள கைம்பெண்கள் தொகையைத் தெரிவிக்கிறது. 1921-ஆம் ஆண்டின் கணக்கையொட்டிக் கைம்மை எய்திய பெண்மக்கள்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம்.

**ஜன கணிதம்**

அப்புள்ளிகளை உற்று நோக்குழிப் பொதுவாக இந்தியப் பெண்மணிகளினதும், சிறப்பாக ஹிந்து பெண்மணிகளினதும் நிலை இனிது புலனாகும். தற்கால ஹிந்து மதத்தைப் பெண்கொலைமதம் என்று கூறல் மிகையாகாது. இந்தியாவிலுள்ள மற்றக் கைம் பெண்களின் தொகையினும், ஹிந்து கைம் பெண்கள் தொகையே மேம்பட்டிருத்தல் கருதற்பாற்று. இந்தியாவின் மொத்த கைம்பெண் தொகை 26,834,838. ஹிந்து கைம்பெண் தொகை 20,218,780. எஞ்சியுள்ள தொகை மிகச்சிறியது. அதுவும் முஸ்லிம் - கிறிஸ்து - பௌத்தர் முதலியோரிலுள்ள கைம்பெண்கள் அடங்கிய தொகை.

ஒரு வயது முதல் பதினைந்து வயதுவரை கைம்மை எய்தியுள்ள இந்தியப் பெண் குழந்தைகள் தொகை 396,556. அதில் ஹிந்து பெண் குழந்தைகள் தொகை 329,076. இவ்வநியாயத்தை உற்று நோக்குங்கள்! இவ்வளவு பால்மணமரு இளங் கைம்பெண்கள்! இக்கொலைக்குப் பொறுப்பு யாது? ஹிந்து மதமன்றோ? மற்ற மதங்களிலுள்ளவர்கள் மீண்டுந் திருமணஞ் செய்யும் உரிமை பெற்றிருக்கிறார்கள். மேலும் அவர்கள்

ஜனகணிதம் எடுத்த வேளையில் கைம்மை எய்தி யிருந்தவர்கள். அவர்களுள் எத்துணையோபேர் பின்னை மணஞ் செய்திருப்பார்கள். ஹிந்து குழந்தைகளின் நிலையோ! நிலையோ! * * * என்று அழ வேண்டுவதே!

நமது நாட்டில் இலட்சக்கணக்கான சிறு குழந்தைகள் கைம்பெண்களா யிருக்கிறார்கள். இவர்கள் கதி என்னை? திருமணம் இன்னதென்றுணரா முன்னர் ஏன் சிறுமியர்களைத் திருமணஞ் செய்து கொடுத்தல் வேண்டும்? கைம்மை எய்த நேர்ந்தால் அவர்களை ஏன் கூட்டில் அடைத்து வருத்தல் வேண்டும்? அவர்கள் வழுக்கி வீழ்வரேல் அவர்களை அடிக்கிறது; ஊரை விட்டு ஓட்டுகிறது; சமயம் நேர்ந்தால் கொல்கிறது. இப்பாவங்களை நிகழ்த்திவரும் நாட்டுக்கு உய்வுண்டோ? உரிமை யுண்டோ? நாயகனுடன் ஒரு பொழுதேனும் கூடி இன்பம் நுகராத பெண்மகள், கைம்மைநிலை எய்தினால், மீண்டும் மணஞ்செய்து கொள்ளலாகாதா? மணம் என்பது யாது? பந்தரா? கோயிலா? மந்திரமா? மாலையா? ஒருத்தி ஒருவனுடன் கூடி இன்பம் நுகரு நாளே திருமண முடிந்த நாளாகும். இளமை மணத்தையும் விலக்காது மறுமணத்தையும் தடுப்பது அறமாகாது.

உற்ற வயதடைந்து, பல ஆண்டு, தலைவனுடன் கூடிக் குலாவிப் பிள்ளைப்பேறு பெற்ற ஒருத்தி, கைம்பெண் ஆவளேல், அவள் மறுமணஞ் செய்யாம லிருக்கலாம். ஆனால் அவள் விருப்பப்படி நடக்கும் உரிமை அவட்கும் இருத்தல்வேண்டும். அவள் விரும்பினால் மறுமணஞ்

மறுமணப் பொறுப்பு

செய்துகொள்ளலாம். அவள் விபசாரம்செய்து கெட்டழிவதினும், ஒருவனை மணந்து அவனுடன் வாழ்தல் சிறப்பாகும். மணம் விரும்புங் கைம்பெண்ணைத் தடுத்தலுங் கூடாது; விரும்பாதவளை வலியுறுத்தலுங் கூடாது. பொறுப்புப் பெண்ணுடையதா யிருத்தல் வேண்டும்.

சில ஆண்டு நாயகனுடன் வாழ்ந்து, இன்பம் நுகர்ந்து, கைம்மை எய்துவோர் மீண்டும் மற்றொருவனை நச்ச வேண்டுவதில்லை. அப்பெண்மணிகள் வேறு பல அறத்துறைகளிலிறங்கி வாழ்வு நடாத்தல் நலன்.

பால் மணமறு இளங் கைம்பெண்கள் உற்ற வயதடைந்து மறுமணஞ் செய்து கொள்வது அறமேயாகும். அதற்கு அறிஞர் துணைசெய்தே தீரல் வேண்டும். சாத்திரம் கர்மம் இவைகள்மீது வீண்பழி சுமத்துவது அறியாமை.

**சாத்திரம் கர்மம்**

சாத்திரம் எது? இயற்கை நெறிக்கு மாறுபட்டு எழுதப்பட்டன வெல்லாஞ் சாத்திரங்கள் போலும்! சாத்திரம் என்பதன் பொருள் என்னை? 'இதைச்செய்; இதைச் செய்யற்க' என்பது. இயற்கைக் குரியதைச் செய்தல் வேண்டும்; இயற்கைக்கு மாறுபட்டதைச் செய்தலாகாது. இதை மனச்சான்று அவ்வப்போது உணர்த்தி வரும். இதுவே சாத்திரம். தின்று கொழுத்துப் பிறரை அடக்கியாள, இயற்கைக்கு முற்றும் அரண் செய்யாத பொருள் பொதியச், சில முரடர்கள் எழுதிய ஏடுகள் யாவுஞ் சாத்திரங்களாகா. இயற்கையே பெரிய சாத்திரம். அதன் நியதிகள் விதிகள். அவ்விதிகள் வழி, மன்பதை நடாத்தல் வேண்டும்.

கைம்மை எய்திய பெண், மீண்டும் மணஞ் செய்ய லாகா தென்று இயற்கையில் ஏதாயினும் நியதியுண்டா? பெண் கைம்மை எய்தியதும் அவள்பாலுள்ள இயற்கை வேட்கை அவளை விடுத்து, நீத்து, ஓடுகிறதா? சாத்திரம் சாத்திரம் என்று இருட்டறையில் விபசாரஞ்செய்து கருச் சிதைக்கலாம் போலும்! இங்கே 'கடவுள்' 'பாவம்' 'கர்மம்' ஒன்றுமில்லை போலும்! வெளிப்படையாக ஒருவனை மணஞ்செய்து கொள்வதுமட்டும் பாவம்போலும்! என்ன அறியாமை! இயற்கைக்கு மாறுபட்ட கண்மூடி வழக்கமும் கொழுமையும் நாத்திகத்தின்பாற்பட்டனவா மென்க.

கர்மத்தின் மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். கர்மம் உண்டு; இல்லை என்று சொல்லவில்லை. தெருவே போகும் ஒரு பிள்ளையின் கால், வண்டியில் அகப்பட்டு நசுங்கி விடுகிறது. அதுகண்டு 'கர்மம்' என்று வாளாகிடப்பது அறிவுடைமையாமோ? உலகம் அங்ஙனம் வாளாகிடக்கிறதா? உடனே அக்காலுக்கு வேண்டிய சிகிச்சை செய்யவே மக்கள் புறப்படுகிறார்கள். அறியாமையால் கர்மம் இயல்பாக நிகழும். அதற்குக் கழுவாயும் இயற்கையி லிருக்கிறது. குழந்தை 'கர்மத்தின்படி' கைம்மை எய்தியிருக்கலாம். அதற்குக் கழுவாய் என்னை? உற்ற வயதில் அதன் இயற்கை வேட்கை தணிக்க மணஞ் செய்துகொள்வதே கழுவா யாகும்.

கர்மத்தின் பேராலும் கடவுள் பேராலும் நமது நாட்டில் பல கொடுமைகள் நிகழ்த்தப் படுகின்றன. அவைகளுள் ஒன்று இளங் கைம்பெண்களைத் துன் புறுத்துவது. அத்துன்பம் நாட்டைவிடுத் தகலல்

வேண்டும். இளங் கைம்பெண்கள் துயர் கண்டு மனம் இரங்காதவரிலர். அவர்கள் துயர் களைதல் பெருங் கடன் என்று நினைப்போரு முளர். ஆனால் அந்நினைவைச் செயலில் கொணர அவர் தம் மனம் எழுவதில்லை. காரணம் என்னை? நீண்ட நாள் வழக்க ஒழுக்கப் பேய்களும், அக்கம்பக்கத்தின் கூக்குரல்-சாதிப் பழக்கம்-முதலிய பூதங்களும் குறுக்கிடுதலேயாகும். இப்பேய் பூதங் கட்கா அடிமையாவது? மனச் சான்றெனுங் கடவுள் வழியன்றோ நிற்றல் வேண்டும்? அக்கடவுள் வழிபாட்டிற்கு உண்மையில் உறுதியும், அஞ்சா நெஞ்சமும் வேண்டற்பாலன.

கைம்பெண்களின் துயர்

கைம்பெண்கள் வீடுகளிற் படுந்துயருக்கு ஓர் அளவும் உண்டோ? சில வேளைகளில் ஈன்ற தாய் தந்தையரும் அவர்களைக் காய்கிறார்; அண்ணன் தம்பிமார் வெறுக்கிறார்; மற்றவர்களும் குறை கூறுகிறார்கள். அக்காய்வும் வெறுப்பும் பொறாது எத்துணைச் சகோதரிகள் தற்கொலை செய்து கொள்கிறார்கள்; எத்துணைச் சகோதரிகள் வீட்டை விடுத்து ஓடி அலைகிறார்கள்; எத்துணைபேர் எவர் உதவியும் நாடாது இலை தைத்தும், பழம் விற்றும், அப்பஞ் சுட்டும், கூலி வேலை செய்தும் கால் வயிறுண்டு மரணத்தை எதிர் நோக்கி வாழ்கிறார். நமது நாட்டுக் கைம்பெண்கள் துயரை என்னென்று சொல்வேன்! எவ்வெழுத்தால் எழுதுவேன்! இந்நூலில் அதுபற்றி விரித்துக்கூறலும் அநாவசியம்.

கைம்பெண்கள் துயர் களைய நாட்டிற் பிறந்த ஒவ்வொருவர்க்கும் ஊக்கம் இருத்தல் வேண்டும். அதற்குரிய முறைகள் சில கொள்ளப்படல் வேண்டும்.

(க) சாத்திரக் குப்பைகளைக் கட்டி அழலாகாது. இயற்கைச் சாத்திரவழி நிற்கப் பயிலல் வேண்டும்.

(உ) இளமை மணம் நிறுத்தப்படல் வேண்டும்.

(ந) நாயகனுடன் ஒரு பொழுதேனும் கூடி வாழ்ந்து இன்பம் நுகராது,கைம்மை எய்திய பெண் மக்கள், திருமணஞ் செய்து கொள்ளத் தக்க வழியில், வாழ்வு முறைகளைச் சீர்திருத்தஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

(ச) நாயகனுடன் கூடிக்குலாவிய பின்னைக் கைம்மை எய்துவோர்க்குப் பலதிற அறச்சாலை கல்விச்சாலை தொழிற்சாலைகள் அமைக்கப்படல் வேண்டும்.

இளங் கைம்பெண்களின் சிறுமையால், பெண்ணுலகின் பெருமைக்குரிய தாய்மைக்கும் பிறவற்றிற்கும் பெருங்கேடு நிகழ்கிறது. ஒன்றும் அறியாத வயதில் திருமணமென்னும் பெயரால் வெறுமணஞ் செய்து, பின்னைக் கைம்பெண்ணாய்க் கிடப்பதா பெண் பிறவியின் நோக்கம்? பெண் அடைய வேண்டிய பெரும் பேற்றுக்குக் கைம்மைநிலை பெருந்தடையாகவும் நிற்கிறது. கைம்பெண்களால் ஆணுலகிற்கும் பலதிறக் கேடுகள் உண்டு. ஆதலால், கைம்பெண்களும் பெண்ணுலகில் சேர்ந்தவர்களாகலான், அவர்களும் தங்களினத் தவருக்குரிய விழுப்பம் பெறுதற்கு எவரும் இடையூறாக நிற்றலாகாது. இடையூறாக நிற்றல் தாய்க்கொலை செய்த பாவமாக முடியும். கைம்பெண்கள் சிறுமை

நோய் நீக்கம், பெண்ணுலகின் முன்னேற்றத்துக்குப் பெரும் வழி திறக்கும். பெண்ணுலகிலுள்ள அக்குறை நீங்க, எல்லாம்வல்ல ஆண்டவன், நாட்டவர்க்கு நல்லறிவு கொளுத்துவானாக.

திருமணஞ் செய்து, கன்னி வாழ்வு நடாத்தும் பெண், தன் கணவனை இழக்கப் பெறுவளேல், மீண்டும் மறுமணஞ் செய்து கொள்ளலாம்.

வாக்குறுதி கொடுத்த பின்னரோ - நீர் வார்த்துத் தத்தஞ்செய்த பின்னரோ - மெய்யுறல் நிகழா முன்னர்க் கொழுநன் இவ்வுலக வாழ்வு நீப்பனேல், பெண் மறுமணஞ் செய்து கொள்ளலாம்.

உறுதி மொழியும், மந்திர மொழியும் ஒருத்தியின் பிரமசரிய விரதத்தைக் குலைப்பனவாகா. அவள் மற்றவனுக்குக் கொடுக்கப்படலாம். **—வசிஷ்டர்**

"Hinduism is the only religion which present the sad anamolous of thousands of child widow"—*Ganga Ram*



## ௧௬. பெண்மை - தாய்மை - இறைமை

[பெண்மை-தாய்மை-இறமை-அன்பே இறை-தாய்மையில் இறைமை இலங்கும் விதம்-பெண் தெய்வம்-பெண்ணின் இறைமை-ஸ்ரீராமபிரான் முயற்சி-பாரதப் போர்-எல்லாம் பெண்ணால்-எல்லாம் பெண்ணில்]

சேம்மைநலம் அறியாத சிதடரோடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்றன்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே.

—வாதவூரடிகள்

பெண்மை என்பது அநாதியாக முழுமுதற் பொருளின் ஒரு கூறாயிருப்பது. அப்பெண்மை, தண்மைச் சத்தியாய்த் தனக்குரிய கடனை ஆற்றிவருகிறது. அச்சத்தியின் கூறே பெண்ணுலகென்பது. பெண், மகளாகப் பிறந்து, பின்னை மனைவியாகி, பின்னைத் தாயாகி, முடிவில் இறையாகிறாள். பெண்ணினிடத்து இத்துணை நிலைகள் இருத்தல் இந்நூற்கண் விளக்கப் பட்டிருக்கிறது.

பெண்மை என்பது கட்புலனாயதோர் அமைதித் தன்மை. அமைதி நிலையே சிறந்த கடவுள்நிலை என்று

**பெண்மை**

மறை முழங்குகிறது. கடவுளை யாண்டும் ‘சாந்தம்’ ‘சாந்தம்’ என்றே வேதாந்தம் போற்றுகிறது. அவ்வமைதி, பெண் வடிவாகக் கண்ணுக்குக் காட்சியளிக்கிறது ; காட்சி யளிப்ப

தோடு நில்லாது, உலக வாழ்வில் தலைப்பட்டுக் கடவுளாதற்குரிய நெறி காட்டுகிறது; அந்நெறியால் இறைமைக் காட்சி வழங்குகிறது. பெண்மைக்கணுள்ள இந் நுட்பங்களை யெல்லாம் உலகம் உணர்வதாக.

**தாய்மை**

பெண்மைக்குள்ள பெருமை யாது? பெண்மையின்மாட்டு, உலக வளர்ச்சிக் குரியதும் தொண்டுக் குரியதுமாய தாய்மை பொலிதலான், அது பெருமை யுடையதாகிறது. பெண்மைக்குள்ள பெருமையெல்லாம் தாய்மையா லென்க.

தாய்மையில் நிலவுவது இறைமை. அவ்விறைமை பெண்மையின் முடிந்த நிலையாகும்.

**இறைமை**

இறை எது? சமய நூல்கள் பலவாறு கூறும். அக் கூற்றுக்களை ஈண்டு ஆராயவேண்டுவதில்லை. பொய், பொறுமை, அவா, சீற்றம், தன்னலம் முதலியவற்றைக் கடந்த ஒன்று இறை என்பது. ஒருவர் உள்ளத்தில் அன்பு நிகழும்போது இப்பொய், பொறாமை முதலியன நிலவுமோ? பொய், பொறாமை, அவாவால் எரியும் ஒருவன் உள்ளத்தில் அன்பு ஒதுங்கி நிற்றல், ஒவ்வொருவர் தம்தம் அநுபவத்தால் உணரக்கூடியது.

**அன்பு**

அன்பு என்பது, பொய் பொறாமை முதலியவற்றைக் கடந்து நிற்பது. பொய் பொறாமை முதலியவற்றைக் கடந்து நிற்கும் ஒன்றே இறை என்றுஞ் சொல்லப்படுகிறது. ஆகவே இறையே அன்பு, அன்பே இறையாதல் காண்க.

அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்

அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே. —திருமூலர்

பெண், பிள்ளை பெற்றதுந் தாயாகிறாள். அத்தாய் பிள்ளையை வளர்க்கப் புகுங்கால், அவள் உள்ளத்தில் இறைமைக் குரிய நீர்மைகளெல்லாம் பதிகின்றன. தொண்டு, தியாகம், தன்னலமறுப்பு முதலியன அவள் மாட்டு அரும்புகின்றன. தாய் கைம்மாறு கருதிக் குழந்தைக்குத் தொண்டு செய்வதில்லை. தனக்குள்ள எல்லாவற்றையும்-சமயம் நேரின் உயிரையும் - பிள்ளை நலத்துக்குக் கொடுக்கத் தாய் விரைந்து நிற்கிறாள். தன்னலங் கருதிக் குழந்தையை வருத்துந்தாய் யாண்டும் இராள். பயன் கருதாத்தொண்டு, தியாகம், தன்னல மறுப்பு முதலியன சேர்ந்த ஒன்றே தாய்மை என்க. இந்நீர்மைகள் உள்ள இடத்தில் பொறாமை அவா முதலியன இரும்புண்ட நீர்போல் ஒடுங்கிப் போகின்றன. இந்நிலை பெற்ற தாயின்உள்ளத்தில் என்ன நிலவும்? அன்பாய இறையன்றோ நிலவும்? தாயுள்ளத்தில் அன்பே ஊர்ந்து கொண்டிருத்தலால், அன்புக்கு எடுத்துக் காட்டாகத் தாயன்பையே கொள்வது ஆன்றோர் வழக்கம். தாய் எனினும் அன்பெனினும் ஒக்கும்.

**தாய்மையில் இறைமை இலங்தும் விதம்**

இன்னும் இரண்டொரு பிள்ளைகளைப் பெறுந் தாயன்பு சொலற்பாலதன்று. அவ்வன்பு கூடப்பெற்ற தாய், மற்றப் பிள்ளைகளையும் தன் பிள்ளைகளைப்போற் கருதும் ஒருநிலை எய்துகிறாள். அந்நிலை, எவ்வுயிரையும் தன்னுயிர் போல் பார்க்கும் பெருநிலை கூட்டுகிறது.

அப் பெருநிலைக்குத் தாய்மை நிலைக்களனாயிருக்கிறது. பொய் பொறாமை கடந்த அன்பே, தாய்மையாகலின், தாய்மை இறைமையாகிறது.

பொய் பொறாமைகளைத் தவிர்க்குந் தொண்டு, தியாகம், தன்னலமின்மை முதலியன படியும் உள்ளமே அன்புக் கடவுளுக்குரிய கோயில். அன்புக் கடவுள், நிலைபேறாகத் தாயாகிய பெண்மகளிடத்தில் ஒளிர்கிறது. பெண்மையில் தாய்மையும், தாய்மையில் இறைமையும் பொலிவது கருதத்தக்கது.

**அன்புக் கடவுள் கோயில்**

பெண்மை என்பது அமைதித் தன்மை என்று மேலே சொல்லப்பட்டது. அமைதிநிலை இறைமை என்பது. அவ்விறைமையுடைய தாயை வெறும் பெண்ணென்று கூறுவது? கூடாது. அவளைப் பெண் தெய்வமென்று போற்றுதல் வேண்டும். பெண் - தெய்வம்! பெண் - தெய்வம்! பெண் - தெய்வம்!

**பெண் தெய்வம்**

முழுமுதற் பொருள், தண்மை வெம்மையெனும் இரண்டு சக்திகளாக உலகை இயக்குகிறதென்பது நூல் தொடக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. அத்தண்மையின் கூறு பெண்ணுலகு. பெண் பிறந்து, உலகவளர்ச்சிக்குத் துணைபுரிந்து, மீண்டும் அத்தண்மைத் தெய்வமாகிறாள்.

பெண், மகளாகத் தோன்றினாள்; மனைவியாக வாழ்ந்தாள்; தாயாகத் தொண்டு செய்தாள். இப்பொழுது தெய்வமாகக் காட்சி அளிக்கிறாள். உலகீர்! அக்காட்சி காணுங்கள்; தெய்வம் தெய்வம் என்று எங்கு

ஓடுகிறீர்? நூற்களை என் ஆராய்கிறீர்? இதோ தெய்வம்; பெண் தெய்வம்; காணுங்கள்; கண்டுவழிபடுங்கள்.

பெண்மை என்பது, என்புதோல் போர்த்த உடலன்று. அவ்வுடலினுள்ளே யுள்ள நுண்மையிறைமை, பெண்மை என்க. அத்தகைப் பெண்மை வாழ்க.

ஆண்மக்களே! உங்கள் பெருமை பெண்ணுடன் பொருந்தி நிற்பது. உங்களைப்பெற்றவள் பெண்; உங்களை வளர்ப்பவள் பெண்; உங்களோடு வாழ்பவள் பெண்; உங்களைப் பெண்ணாக்குபவள் பெண். நீங்கள் பெண்ணாகாது, அதாவது பெண்மைநிலை பெறாது, அதாவது அமைதி நிலை எய்தாது, விடுதலை யடைதல் இயலாது. பெண்ணால் நலனடையும் நீங்கள் அப்பெண்ணுலகையா வெறுப்பது? துறப்பது? நன்றி கொல்லாதேயுங்கள்; தாய் நன்றி கொல்லாதேயுங்கள்; 'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை - செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்னும் பொய்யா மொழியை நோக்குங்கள்.

பெண்ணிற்கு மதிப்புக் கொடுங்கள்; உரிமைகொடுங்கள்; வணக்கஞ் செலுத்துங்கள். பெண்ணை மதித்துப் போற்றலே நாகரிகம். அவளைக் கட்டுப்படுத்தல் - அடிமைப்படுத்தல் - கொடுமையாக நடத்தல்-அநாகரிகம்.

பெண்ணலன் உங்கள் நலன்; உங்கள் நாட்டுநலன். அப்பெண்மக்கள் கண்ணீர்விடும் நாடு வறுமை நாடாகும்; அடிமை நாடாகும். அஃது எரிந்து போகும்; கரிந்து போகும். ஒரு பெண்ணுக்கு ஸ்ரீ ராமபிரான் எவ்வளவு முயன்றார்; எத்துணை இடுக்கணுற்றார்; எத்துணைப் போர் புரிந்தார். ஒரு பெண்ணின் பொருட்டுப் பாரதப் பெரும்போர் நடந்தது. பெண்ணின் துயர் தீர்ப்பது

ஆண்மகன் கடமை. பெண் துயர் தீர்க்க இயலாத மகன் ஆண்மக னல்லன். பெண்சிறுமை போக்க உயிரையுந் துறத்தல் வேண்டும். பெண் பெருமை காக்கவே ஆண் மகன் பிறந்திருக்கிறான். பெண்ணில்லையேல் உலகேது? உயிரேது? அன்பேது? கடவுளேது? எல்லாம் பெண்ணால்; எல்லாம் பெண்ணில். அத்தகைப் பெண்ணை-தாயை-தெய்வத்தைப்-போற்றுங்கள்; போற்றுங்கள்.

எங்கணும் பெண்மை பொலிக; எங்கணுந் தாய்மை ஓங்க; எங்கணும் இறைமை வாழ்க. வந்தே மாதரம்.

ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ.—**அப்பர்**

தாயேயாகி வளர்த்தனை போற்றி.—**மாணிக்கவாசகனார்**

பெண்மை வாழ்கென்று கூத்திடு வோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடுவோ மடா
தண்மை இன்பநற் புண்ணியஞ் சேர்ந்தன
தாயின் பேரும் சதியென்ற நாமமும். (க)

அன்பு வாழ்கென் றமைதியி லாடுவோம்
ஆசைக் காதலைக் கைகொட்டி வாழ்த்துவோம்
துன்பந் தீர்வது பெண்மையி னாலடா
சூரப் பிள்ளைகள் தாயென்று போற்றுவோம். (உ)

வலிமை சேர்ப்பது தாய்முலைப் பாலடா
மானஞ் சேர்க்கு மனைவியின் வார்த்தைகள்
கலியழிப்பது பெண்க ளறமடா
கைகள் கோத்துக் களித்துநின் றாடுவோம். (ங)

பெண்ண றத்தினை ஆண்மக்கள் வீரந்தான்
பேணு மாயிற் பிறகொரு தாழ்வில்லை
கண்ணைக் காக்கும் இரண்டிமை போலவே
காத லின்பத்தைக் காத்திடு வோமடா. (ச)

சக்தி யென்ற மதுவையுண் போமடா
தாளங் கொட்டித் திசைக ளதிரவே
ஒத்தி யல்வதொர் பாட்டுங் குழல்களும்
ஊர்வியக்கக் களித்துநின் றுடுவோம். (ரு)

உயிரைக் காக்கும்; உயிரினைச் சேர்த்திடும்;
உயிரினுக் குயிரா யின்ப மாகிடும்
உயிரி னும்இந்தப் பெண்மை யினிதடா
ஊது கொம்புகள்! ஆடு களிகொண்டே. (சு)

"போற்றிதாய்" என்று தோள்கொட்டி யாடுவீர்
புகழ்ச்சி கூறுவிர் காதற் கிளிகட்கே
நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண் ணொருத்தி பணியிலே. (எ)

"போற்றிதாய்" என்று தாளங்கள் கொட்டடா!
"போற்றிதாய்" என்று பொற்குழ லூதடா
காற்றி லேறியவ் விண்ணையுஞ் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே. (அ)

அன்ன மூட்டிய தெய்வமணிக் கையின்
ஆணை காட்டில் அனலை விழுங்குவோம்
கன்னத் தேமுத்தங் கொண்டு களிப்பினும்
கையைத் தள்ளும்பொற் கைகளைப் பாடுவோம் (கூ)
(பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா.)

—பாரதியார்

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை.